# கண்டனூர்
# சி. ஆ. நி. உயர்நிலைப்பள்ளி
# வெள்ளிவிழா மலர்.

21-12-1968








சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி

# வெள்ளிவிழா மலர்

**கண்டனூர்**

இராமநாதபுரம் மாவட்டம்

தமிழ்நாடு.

“இமயத்தின் எல்லை கண்ட
எந்தமிழ் என்றும் வாழ்க!”

# நுழைக! நுகர்க!



பெற்ற குழந்தைகட்கும், கட்டும் வீட்டிற்கும் பெயர் சூட்டி ஒருவர் நினைவைப் போற்றுவது உலக மரபு. அவ்வாறு இட்டு வழங்கும் பெயர்கள் ஓரிரு தலைமுறைக்கு நிலவிப் பின்னர் விட்டு விலகும். ஆனால் ஒரு தனிக் குடும்பப் பெயரைப் பொதுக் குடும்ப நலங் காக்கும் நிறுவனத்திற்கு இட்டால் நினைவு கல்மேல் எழுத்தாய் நீண்டு வாழும். அத்தகைய நிலையில் அமைந்தனவே நம் சிட்டாளாச்சி நினைவுப் பள்ளிகள்.

அன்னையாரின் ஆருயிர் மைந்தர் வீரப்பர் ஆன்றமைந்த வள்ளல். சான்றாண்மைக்குச் சான்றாக விளங்குபவர். அவர்கள் கீழது மேலாய், மேலது கீழாய் மாற்றும் காலதேவனின் கண்களில் மூன்று இலட்சம் வெண்பொற்காசுகளைத் தூவி ஏமாற்றி உலகம் உள்ளவரை அன்னையாரின் நினைவு நிலைக்கும் வழியைத் தேடிவிட்டார்கள். இல்லத் தாயின் சொல்லை நிறைவேற்றியதால் செல்வத்தாயையும் கல்வித் தாயையும் சேர்த்து வழிபடும் பேறு அவர்களைத் தேடி அடைந்திருக் கின்றது.

பல்கிப் பெருகும் அறிஞர்களை உருவாக்கும் பள்ளி இவ்வாண்டில் வெள்ளிவிழாக் கண்டு வீறுநடை போடுகின்றது. காலமெல்லாம் படிக் கின்ற பிள்ளைகளை அணைக்கின்ற தாயாம் சிட்டாளன்னையின் திருவடியில் அன்பாலும் பாசத்தாலும் தொடுக்கப்பட்ட மாலை ஒன்றைச் சூட்டுகின்றோம். பள்ளியின் பழைய மாணவர்களும், தலைமை ஆசிரியர்களும், ஆசிரியர்களும், பள்ளியோடு தொடர்புகொண்ட பிறரும் தம் நினைவை எழுத்தாக்கி, எழுத்தை அன்னையின் திருவடிக்குக் காணிக்கை ஆக்கி யிருக்கின்றனர். நன்றியும் அன்பும் மணக்கும் மலரில் நாட்சுருக்கத்தால் நாற்றிசைகளிலும் சென்றும் சிறந்தும், வென்றும் விளங்கும், இன்னும் பல்லோரின் அன்பு மணத்தை நுகர்விக்க இயலவில்லை. பிறதுறைக் கட்டுரைகளையும் அன்பர் பலர் எழுதியிருக்கின்றனர். மலருக்குள் நுழைந்து அன்னையின் அருளில் நனைய வேண்டுகின்றோம். எழுதிச் சிறப்பித்தோர்க்கும் எங்களுடன் பரவி எண்ணத்தால் போற்றிச் சிறப்பிப் போர்க்கும் உள்ளார்ந்த நன்றி!

**மலர்க்குழுவினர்.**

# மலருக்குள்......

## புரவலர் அவர்களின் மைந்தர்கள்



திரு. வீ. தெ. வீர.
அருணாசலம் செட்டியார் அவர்கள்



திரு வீ. தெ. வீர.
மீனாட்சிசுந்தரம் அவர்கள்



திரு வீ. தெ. வீர.
சிதம்பரம் அவர்கள்



பள்ளி மாணவத் தலைவன்
(சித்திரப் போட்டியில்
முதல் பரிசு பெற்றவன்)
எம். சுப்பிரமணியன்



அரசியலார் தேர்வில்
முதன்மையாகத்
தேர்ச்சிபெற்ற மாணவர்
பி. வீரசுப்பிரமணியன்



விளையாட்டு வீரர்
கே. எம். சபாரத்தினம்



வெற்றிபெற்ற அணித்தலைவன்
எஸ். கிட்டு

Telephone No 72889

RANI MEYYAMMAI HIGH SCHOOL

**Sri. A. GEORGE,** M. A., B. Sc (Hons), L. T.
Headmaster

GANDHINAGAR,
ADYAR, MADRAS-20.

# வெள்ளிவிழா வாழ்த்துச்செய்தி.

சிட்டாளாச்சி நினைவு உயர்நிலைப் பள்ளி வெள்ளி விழா கொண்டாடுவதை யறிந்து பெருமகிழ்ச்சி அடைகின்றேன். இப் பள்ளியானது ஆறு வயது குழந்தையாயிருக்கும்போது அதைப் பேணிப் பாதுகாத்து வளர்க்கும் பெரும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆண்டவனின் திருவருளால் மூன்ருண்டுகள் இப்பள்ளியைப் பாராட்டிச் சீராட்டி வளர்த்து, ஒன்பது வயது நிரம்பிய குழந்தையாக்கி, நன்ருக ஓடும் சக்தியைக் கொடுத்து, எனக்குப்பின் வந்த தலைமையாசிரியரிடம் பொறுப்பை ஒப்படைத்தேன்.

1949 முதல் 1952 வரை சிட்டாளாச்சி நினைவு உயர்நிலைப் பள்ளியில் என் பணி ஒரு சமாதானத் தூதுவரின் பணியை யொத்தே இருந்தது. "எம் மொழி வெல்லும்?" என்னும் ஒரு விசித்திர வினுவால் பள்ளியானது இரு கூருக நின்ற காலத்தே, நான் தலைமையாசிரியராகப் பொறுப்பேற்று, அளவிலா அன்பினுலும், கடலினும் பெரிய பொறுமையினுலும், சமாதானத்தை நிலைநிறுத்தி, ஒற்றுமையை வளர்க்கும் சிலாக்கியம் பெற்றேன். "இடையரு உழைப்பினுலும், முயற்சியாலும் எம் மொழியும் வெல்லும்." என்பதை நிரூபித்துக் காட்டும் பெரும் பேறு பெற்றேன்.

நான் பணியாற்றிய அந்நாளில் பள்ளி நிர்வாகி அவர்கள் என்னிடம் காட்டிய பேரன்பும், ஆசிரியப் பெருமக்கள் தம் பணி சிறக்க மேற்கொண்ட பேருழைப்பும், மாணவமணிகள் தாம் கற்கும் கல்வியிடஞ் செலுத்திய பேரூக்கமும் என்றென்றும் என் மனத்தில் பசுமரத் தாணி போல் பதிந்திருக்கும்!

பெருமதிப்பிற்குரிய புரவலர் வீ. தெ. வீரப்ப செட்டியார் அவர்கள் மாரிபோல் வாரி வழங்கும் வள்ளல் மரபில் வந்தவர். அன்னர் தம் அருமை அன்னையாரின் நினைவால் நிறுவிய சிட்டாளாச்சி நினைவு உயர்நிலைப் பள்ளி மேலும் மேலும் வளர்ந்து பொன் விழா, வைர விழா, நூற்ருண்டு விழாக்களையும் கொண்டாட வேண்டுமென்பதே என் பேரவா.

நிகழ விருக்கும் வெள்ளி விழா, சிறப்புடன் நடைபெற எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சி, வெளியிடப்படும் வெள்ளி விழா மலர் நறுமணம் வீச வாழ்த்துகின்றேன்.

5 – 11 – 1968.

இங்ஙனம்,

அ. ஜார்ஜ்.

முன்னுள் தலைமையாசிரியர்

S. NARAYANA IYER, M. A.,

49, Harvey Nagar,
ARASARADI.
MADURAI - 16.

2 — 11 — 68

*My dear Mr. Sundaresan,*

In response to your invitation for an article on the C. A. M. High School, Kandanur, I am herewith sending you my recollections of the events that took place during the years 1942 — 44. Of course they were momentous and unforgettable. You were with me after 1944 June but stil you have rightly put, that we cannot forget those days.

I wish the school all success and glory in the times to come and I have very great pleasure in coupling it with Shri. V. T. V. This letter also if you deem fit my be published separately in the souvenir.

Yours very sincerely,

***S. Narayana Iyer.***

(first Headmaster of the School)

வீர. சுப்பிரமணியன், 49, மூர்த்தி செட்டி தெரு,

கும்பகோணம்.

26-11-1968.

தலைமை ஆசிரியர்,

சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப் பள்ளி,

கண்டனூர்.

தகைமை சான்ற ஆசிரியர் அவர்களுக்கு,

தங்களின் 21 – 11 – 1968உ கடிதம் கிடைத்தது. பள்ளியின் வெள்ளி விழாவும், மலர் வெளியீடும் கேட்டு மிக்க மகிழ்ச்சி. வெள்ளி விழாச் சிறப்பாக நடக்கவும், பள்ளி மணிவிழாக் காணவும் பழைய மாணவனின் வாழ்த்துக்கள். வெள்ளி விழா மலரில் கட்டுரை எழுத எனக்கும் வாய்ப்புக் கொடுத்த தங்களுக்கு எனது நன்றி. இத்துடன் கட்டுரையை அனுப்பி இருக்கின்றேன். வெள்ளி விழா மலர் வடிவும், வண்ணமும், மணமும் பொருந்திய மலராக வெளிவர எனது வாழ்த்துக்கள்.

தங்களன்புள்ள,

வீர. சுப்பிரமணியன்.

EAST-WEST CENTER BOX 1981, UNIVERSITY OF HAWAII.

HONOLULU. HAWAII 96822, U. S. A.

To

Mr. M. R. Sundaresan, B. A , L. T.,

Head Master, C. A. M. High School,

Kandanur, Ramnad District,

Tamil Nadu, India

October 21, 1968.

Dear Sir:

Well and hope this finds you and the members of your family in good health and cheer. I am herewith sending an article on Hawaii, which I promised to send, for publication in the silver jubilee number of the school magazine. I am sorry for the delay. I was a little busy in adjusting myself to the new surroundings. I am fine now. I hope that you will find the article fit enough to publish in the magazine. I will be grateful if you can send me a copy of the magazine by air-mail to the above address. Thank you verymuch and my best wishes for a succssful silver jubilee celebration.

With regards.

Sincerely Yours,

SP. PALANIAPPAN.

(Old student of the school)

V. PALANIAPPAN, M. A. B. T.
The Indian Overseas Bank Ltd ,
Assistant, Personal Loan Dept.

151, Mount Road,
MADRAS-2.
18—11—68

தலைமை ஆசிரியர் அவர்கள்,
சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப் பள்ளி,
கண்டனூர்.

அன்புமிக்க தலைமை ஆசிரியர் அவர்கட்கு,

வணக்கம். தங்கள் 4ம்வ மடல் கிடைத்தது. நம் பள்ளியின் வெள்ளி விழாவை ஒட்டி மலர் ஒன்று வெளியிட இருப்பது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்.

வள்ளல் வீரப்பர் - அன்னை சிட்டாள் ஆச்சி நினைவாக நிறுவிய கலைக் கூடம், செட்டிநாட்டில் ஒரு சிறந்த கலைக் கோவில். இருபத்தைந்து ஆண்டுகட்டு முன்பு துவங்கப்பட்ட இப் பள்ளி, கேடில் விழுச் செல்வமாம் கல்வியை – வாழும் உயிர்க்கு கண்கள் எனக் கருதப்படும். எண்ணையும் எழுத்தையும், இனிய, எளிய முறையில் மாணவர்கட்குக் கற்றுக்கொடுத்து பரப்பி, வளர்த்துவருவதை அனைவரும் அறிவர். நம்பள்ளி இளைஞர் வாழ்வில் மணம் ஊட்டி வருகின்றது என்பதற்குச் சான்று, பள்ளியில் பயின்று வெளிவந்த மாணவர்கள் இன்று பல துறைகளிலும் சிறப்புப் பெற்று மிளிர்வதேயாகும். இமயத்தின் எல்லைகண்ட தமிழை வளர்ப்பது - இளைஞர்கள் முன்னேற்றம் கருதி உழைப்பது ஆகியவைகளை வாழ்வின் முக்கிய குறிக்கோள்களாகக் கொண்டு பாடுபட்டுவரும், நம்பள்ளி ஆசிரியர்கள் பாராட்டிற்கு உரியவர்கள்.

நான் பயின்ற பள்ளி வெள்ளிவிழா கொண்டாட இருக்கின்றது என்பதறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். நம் பள்ளி எல்லா வகைகளிலும் சிறப்புப்பெற்று – முதல் தரமான பள்ளியாக – தமிழகத்தில் என்றும் மிளிர எல்லாம் வல்ல கலைமகளை இறைஞ்சுகின்றேன்.

எழுத்தோவியம் அனுப்பிவைத்து மலருக்கு மணம் ஊட்ட ஆசை மிகுதி. வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள இயலாத நிலையில் உள்ளேன். வாய்ப்பளித்த உங்கட்கு– உங்களன்பிற்கு உளங்கனிந்த நன்றி – அன்பு.

அன்புமிக்க,

வி. பழனியப்பன்.

(பழைய மாணவர் கழகச் செயலர்)

டாக்டர் சொக்கு சுப்பிரமணியம், எம். ஏ., எம். ஐ. எச்.,
துணையாசிரியர்.
தமிழ்ச் செய்தித்துறை,
அனைத்திந்திய வானொலி,
புதுதில்லி-1.

அன்புசால் ஆசிரியப் பெருந்தகை அவர்களுக்கு,

வணக்கம்: தங்கள் கடிதம் பெற்றுப் பெருமகிழ்ச்சி அடைந்தேன். இன்று இந்நிலைக்கு உயர்வதற்குக் கண்டனூர்ப் பள்ளியில் பெற்ற கல்வி அடிப்படை என்பதை மறுக்க முடியாது. என்னுடைய இளமைக் கல்வி முழுவதையும் அப்பள்ளியில் பெற்றதில் அளப்பரும் மகிழ்ச்சியடைகிறேன். எம் போன்றாரின் தமிழார்வத்திற்கு, நம் பள்ளியின் கல்விப் பணியே காரணமாகும். கண்டனூர்ப் பள்ளி மாணவன் என்னும் பெருமையைப் பாரதத் தலைநகரின் இலக்கிய மன்றங்களிலே காத்து வருகிறேன்.

கல்விப் பயிர் வளரக் கண்டனூர் நகரதனில், செல்வ வரப்பெடுத்த சீராளர் திரு. வீ. தெ. வீரப்பர், தம் அன்னை பெயரால் எடுத்த கலைக் கோயில், பன்னெடு நாள் தமிழ் வளர்த்துப் பார்புகழத் தழைத்தோங்க இருமயில்கள் ஒருமயிலில் அமர்ந்து கொண்டான் இணையடிகள் பணிந்தேத்தி வாழ்த்துகின்றேன்.

என்றனுக்கு மூவாண்டுகள் கல்வி புகட்டிய தாங்கள், மூவா நலம் பெற்று, முத்தமிழ்போல் சிறக்க வாழ, பள்ளியின் வெள்ளி விழாச் சமயத்தில் மன்றுடும் சுந்தரேசனை இறைஞ்சுகின்றேன். நன்றி.

தங்கள் அன்புள்ள,
சொக்கு சுப்பிரமணியன்,

12—11—68.

Dr. K. Nagappan,
B. E (Hons). M. S. E. E. (Purdue) Ph. D. (Purdue),
Prof & Head of the Department of
Electrical Engineering

Thiagarajar College of Engineering
MADURAI - 15.
26th Oct. 1968.

*Dear Mr. Sundaresan,*

Thank you very much for your kind letter of 22nd Oct. 1968. It is an honour done to me having been requested to send an article.

I have put my thoughts in a few words and prepared an article which is enclosed.

Thank you very much for remembering me at this time. I wish all your endeavours a success in connection with Silver Jubilee Celebrations.

Yours sincerely,

K. NAGAPPAN.
(Old Student of the school.)

''MULLAI ILLAM''
2K. JASMINE ROAD.
SINGAPORE-20

22—11—68

அன்புள்ள திரு. சுந்தரேசனவர்களுக்கு,

வணக்கம். நலம். தங்கள் 4உ கடிதம் பெற்றேன்.

இந்தக் கடிதத்தை 15உக்குள் எதிர்பார்த்தீர்கள்; ஒரு வாரம் கடந்து எழுதுகிறேன். காரணம்-''ஓய்வில்லை'' என்பது நொண்டிச் சறுக்கு; ''சோம்பேறித்தனம்'' என்றும் சொல்லமுடியாது; ''எழுதிப் பழக்கமில்லை, எழுதத் தெரியவில்லை'' என்பதே உண்மையான காரணம். பல முறை உட்கார்ந்து, பல மணி நேரம் செலவழித்து, இந்த சில வரிகளை ஒருவழியாக எழுதி முடித்தேன்.

ஒன்றைத் தெளிவாக்க விரும்புகிறேன். உங்கள் தரத்துக்கு ஈடுகொடுக்குமெனில் ஏற்றுக்கொள்ளுங்கள்; இன்றேல் வருத்தமில்லை. ''கேட்டுவிட்டீர்கள், அதற்கு மதிப்புத் தரவேண்டும், முயற்சிப்போம்'' என்ற எண்ணத்தின் பலன் இது. இன்னொன்று, அச்சகத்திற்கு அனைத்தும் சென்றுவிட்டால், காலங்கடந்து வரும் இதை அலுவலகத்தோடு நிறுத்திவிடுங்கள்.

சிறப்போடு நிகழவிருக்கும் வெள்ளி விழா நிகழ்ச்சிகளைப் பற்றிக் கேட்டின்புறக் காத்திருக்கிறேன், காணத்தான் கொடுத்துவைக்கவில்லையே?

அன்புள்ள,

ப. அருணாசலம்

(பள்ளிப் புரவலரின் முன்னாட் செயலாளர்)

S. Thiruvengadachary,
Asst.
The High Schhol,
Tiruvanaikoil.

Tiruvanaikoil
13—11—68

To
The Head Master,
Chittal Achi Memorial High School,
Kandanoor.

Respected Sir,

I am in receipt of your kind letter on 5th instant and the contents noted.

I have herewith sent a few articles for your kind perusal. I hope that the students may understand some of the important plaecs in this district if they go through the Silver Jubilee souvenir. since I am not well versed either in Tamil or in English, I have written a few simple articles which will be beneficial for the students.

May goddess Akilandeswari bless you all with success for the endeavour you have been taking in performing the Silver Jubilee celebration of our school in a fittingmanner.

Thanking you.

Yours obediently,

T. V. Koil,
13-11-68.

S. THIRUVENGADACHARY,
Asst.
The High School, T. V. Koil.
(Former, Head-Master of
(C. A. M. Elementary School.)

NORTHWESTERN UNIVERSITY
EVANSTON. ILLINOIS 60201

DEPARTMENT OF ELECTRICAL ENGINEERING
THE TECHNOLOGICAL INSTITUTE

November 20, 1968.

Mr. M. R. Sundaresan
Head Master
C. A. M. H. School
Kandanur
Ramnad, Madras
INDIA

Dear Sri. Sundaresan:

Thank you for your letter dated November 7, 1968, which I received only on the 17 th.

I am sure you can understand my reluctance to write the article in Tamil. However, I wrote it in Tamil since I felt everyone should be able to read what I huve to say. Please feel free to correct the language or the style if it is necessary.

The theme of the essay essentially is to stop memorizing. and start thinking. An appropriate title for the article is quite hard to find. I leave it to your profound discretion to find a suitable heading. For your interest, I am sending a short biographical sketch of myself.

Please convey my kind regards to Sri. S. T. and N. V. N.
Sincerely yours,

V. Ramaswamy (Old student of the school)
VR: sa
Enclosures

உ 5 – 11 – 68

தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள்,
குன்றக்குடி.

அன்பிற் சிறந்த நமது M. R. சுந்தரேசன் அவர்களுக்கு நல்வாழ்த்துக்கள்.

கடிதம் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி. சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப் பள்ளியின் வெள்ளிவிழா மலர் வெளியிட இருப்பதறிந்து மிக்க மகிழ்ச்சி. வெள்ளிவிழா மலர் பயன் மணம் பரப்பி யாண்டும் கமழ்வதாக. நமது நெஞ்சு நிறைந்த வாழ்த்துக்கள்.

தெய்வசிகாமணி.

# சிட்டாள் ஆச்சி உயர்நிலைப் பள்ளி

## கண்டனூர். வெள்ளிவிழா

# வாழ்த்து.

செட்டி நாட்டிலுள்ள தனவணிகப் பெருமக்கள் பழங்காலந் தொட்டு, கோயில்கள் கட்டுவதிலும், சத்திரங்கள் நாட்டி அன்ன தானம் செய்வதிலும் ஈடுபட்டிருந்தார்கள். இத்தகைய எண்ணமே மேலோங்கிய செட்டி நாட்டில் மக்கட்குக் கல்வி அறிவு ஊட்டுவதே மேல்கண்ட இரண்டிலும் மேலானது என்ற புதிய எண்ணம் கண்டனூர் திரு வீ. தெ. வீரப்ப செட்டியார் மனத்தில் தோன்றியது. சமுதாயம் வளர வேண்டுமானுல் ஆண் பெண் என்ற வேறுபாடின்றி இரு பாலாரும் கல்வி அறிவில் சிறந்து விளங்க வேண்டும் என்பதை யுணர்ந்து அதற்காவனவற்றை ஆராய்ந்து தன் அருமைத் தாயாரின் பெயர் விளங்க சிட்டாள் ஆச்சி உயர்நிலைப் பள்ளியை நிறுவினுர்கள்.

25 ஆண்டுகளுக்கு முன்னுல் இம்மாவட்டத்தில் பெண் ஆசிரியர்களைக் காண்பது மிக மிக அரிதாகும். பெணகல்வியின் திறமறிந்த திரு வீரப்ப செட்டியார் அவர்கள் பெண் ஆசிரியர்களைக் கண்டுபிடித்துத்தம் பள்ளியில் பணிபுரியச் செய்தார்.

அப்போது என் பெண்மக்கள் இருவரையும், என்மனைவி யையும், என்னையும் ஷி பள்ளியில் ஆசிரியர்களாகச் சேர்த்துக் கொண்டார்கள். மேலும் எங்கட்கு வேண்டிய வசதிகள் பலவற்றை யும் செய்து கொடுக்கச் செய்தார்கள்.

பள்ளி துவங்கிய சில ஆண்டுகளுக்குள் பெண் குழந்தைகள் தொகை ஆண் குழந்தைகளின் தொகைக்குச் சரியாகப் பெருகிற்று. மேலும் கோட்டையூர், புதுவயல், முதலிய ஊர்களிலிருந்து பிள்ளைகள் வந்து படித்துச் செல்வதற்கு போக்கு வரவு சாதனமும் (பஸ்) அமைத்தார்கள்.

திரு வீ. தெ. வீரப்ப செட்டியாரை முன்மாதிரியாகக் கொண்டே, செட்டி நாட்டில் பல பள்ளிகளை ஏற்படுத்தினுர்கள்.

திருமதி சிட்டாள் ஆச்சி உயர்நிலைப் பள்ளியில் பயின்று பட்டதாரிகளான ஆண்களும் பெண்களும் நாட்டில் ஏராளமாக இருக்கிறுர்கள்.

இப்பள்ளியின் வெள்ளி விழாவிற்கு எங்கள் வாழ்த்துக்களை உரிமையாக்குகின்றேம். இப்பள்ளி பொன் விழா, வைரவிழா போன்ற பலப்பல விழாக்களைக் கண்டு சந்திர சூரியர் உள்ள மட்டும் பல்லாண்டு பல்லாண்டு வாழ இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

காரைக்குடி–2
5—12—1968

**ஏ. எஸ். கோயில்பிள்ளை**
முன்னுள் தலைமை ஆசிரியர்
சி. ஆ. நி. தொடக்கப்பள்ளி

## பள்ளி வளர்ச்சிக் குறிப்புகள்.

| | |
|---|---|
| 24—11—1941 | உயர்திரு. ராஜ-சர் அண்ணாமலை செட்டியார் அவர்களால் பள்ளியின் அடிக்கல் நாட்டு விழா |
| 14—6—1943 | பள்ளியில் ஐந்தாம் வகுப்பும், படிவங்கள் ஒன்று முதல் நான்கு முடியவும் துவக்கம். |
| 2—8—'43 | சிட்டாளாச்சி சாரணர் படை துவக்கம். |
| 8—8—'43 | கோட்டக் கல்வி ஆய்வாளர் அவர்களால் பள்ளித் தணிக்கை செய்யப்பட்டது. |
| 20—3—'44 | மாவட்டக் கல்வி அதிகாரி அவர்களால் முதல் ஆண்டுத் தணிக்கை செய்யப்பட்டது. |
| 15—6—'44 | படிவம் ஐந்து துவக்கம். |
| 21—12—'44 | முதலாவது சிட்டாளாச்சி நினைவு நாள் விழா, தலைவர் திரு. A. S. P. அய்யர், M.A., (Oxen) Bar-at-Law., மாவட்ட நீதிபதி. |
| 10—6—'45 | படிவம் ஆறு துவக்கம். |
| 18—8—'45 | இராமநாதபுர மாவட்ட ஆசிரியர் கழக பொது பேரவைக் கூட்டம் |
| 21—12—'45 | மாநிலக் கல்வி இயக்குநர் டாக்டர் சவூர் அவர்களால் பள்ளிக் கட்டிடத் திறப்பு விழா. |
| 18—3—'46 | முதலாவது அரசியலார் பள்ளியிறுதித் தேர்வு (S S. L. C.) |
| 26—8—1946 | மாநில மருத்துவத்துறை இயக்குநர் வருகை. |
| 15—8—1947 | முதலாது இந்திய சுதந்திர தின விழா |
| 31—10—1947 | சென்னை ஷெரிப் உயர்திரு. இராமசாமி நாயுடு அவர்களின் வருகை. |
| 9—6—1948 | பொறி இயல் கல்வித் துவக்கம். |
| 19—6—1949 | பழைய மாணவர் கழக துவக்கம். |
| 26—1—1950 | முதல் இந்தியக் குடியரசு தின விழா. |
| 8—4—1952 | சென்னை மேல்சபை, கீழ்சபை, உறுப்பினர் தேர்தல். |
| 2—2—1954 | விஞ்ஞானக் கழகத் துவக்கம். |
| 20—6—1955 | உதவி மாணவர் படை (A. C. C.) துவக்கம். |
| 6—8—1961 | தேசிய மாணவர் படை (N. C. C.) துவக்கம். |

## நன்கொடையாளர்கள்

1 செட்டிநாட்டரசர் அண்ணுமலை செட்டியார் அவர்கள்—பள்ளி இறுதி வகுப்பில் முதன்மைக்கு தங்கப் பதக்கம்.

2 வள்ளல் அழகப்பர் அவர்கள்—பள்ளி நூல் நிலையத்திற்கு ரூ. 3001/- நன்கொடை.

3 சி. ராம. கருப்பன் செட்டியார் அவர்கள்—வகுப்புத்தோறும் தமிழில் முதன்மைக்குப் பரிசுகள்.

4 அ. சி. நா. சி. சித. இராமநாதன் செட்டியார் அவர்கள் (இராம் இராம்) அவர்கள் விளையாட்டுப் போட்டியில் வெற்றிபெறும், தலைமையாளர் களுக்கு (Champion) ஆண்களுக்கு ஒன்றும், பெண்களுக்கு ஒன்றுமாக இரண்டு வெள்ளிக் கோப்பைகள்.

5 டாக்டர் டி. வி. அப்பாசாமி ஐயர் அவர்கள்—பள்ளி இறுதி வகுப்பில் முதன்மைக்குப் பரிசு.

6 அ. சி. நா. அறநிலை—பள்ளிக்குப் படிஎடுக்கும் இயந்திரம் அன்பளிப்பு (Duplicator)

7 நா. அருணுசலம் செட்டியார் அவர்கள்—பள்ளிக்குத் தமிழ்த் தட்டெழுத்துப் பொறி அன்பளிப்பு.

8 சி. ராம. குடும்பத்தார்—பள்ளி தோன்றிய நாள் முதல் பிள்ளைகளுக்குக் குடி தண்ணீர் வழங்கி வருகிருர்கள்.

9 வீ. தெ. வீர. அருணுசலம் செட்டியார் அவர்கள்—பள்ளி இறுதி வகுப்பில் ஆங்கிலத்தில் முதன்மைத் தேர்ச்சிக்குப் பரிசு.

10 வீ. தெ. வீர. மீனுட்சிசுந்தரம் அவர்கள்—பள்ளி இறுதி வகுப்பில் பொறியியல் பிரிவில் முதன்மைக்குப் பரிசு. மற்றும் பள்ளி வளர்ச்சிக்கு முன்னரும் அவ்வப்போதும் உதவியவர்களும் உதவிவருபவர்களும் உளர்.



## உயர்நிலைப் பள்ளி மாணவத் தலைவன்

எம். சுப்பிரமணியன்

## இலக்கியக் கழகச் செயலர்கள் :

1 பி. எல். சண்முகசுந்தரம்
2 கே. ஆர். அருணுசலம்

## தலைமை ஆசிரியர் :

திரு M. R. சுந்தரேசன், B. A., L. T.,

## துணை ஆசிரியர்கள் :

1 திரு S. திருவேங்கடசாமி, B. Sc., L. T.,
2 திரு S. PR. டேனியல்ராஜ், B. A.,B T.,
3 திரு AR. சுப்பராமன், B. A., B. T.,
4 திரு V. இராமச்சந்திரன், B. Sc., B. T.,
5 திரு. J. பஞ்சாபகேசன், M. A., B. T.,
6 திரு KR. பார்த்தசாரதி, B A., B. T.,
7 திருமதி K. பெத்தாயி B. Sc., B. Ed.,
8 திரு N. வைத்தியநாத அய்யர், Sec Grade Trd.
9 திரு B. சுப்பநரசிம்மன், Inter Trd.
10 திரு S. வெங்கட்ரான், sec Grade drd.
11 திரு M. S. ஜான்ஸ்டீபன், ,, ,, ,,
12 திரு V. R. நடராசய்யர், ,, ,, ,,
13 திரு PL. செந்தில்நாயகம், ,, ,, ,,
14 திரு PL. இராமநாதன், Sr Basic Trd.
15 திரு M. சுப்பிரமணிய பிள்ளை, வித்துவான்
16 திரு A. M. அருணசலம், வித்துவான்
19 திரு K. பால்சாமி, வித்துவான்
18 திரு V. K. சுப்பிரமணிய சாஸ்திரிகள், Siromain Trd & Visarad
19 திரு G ஆதிமூலம், Dip-in-Drawing
20 திரு S. இராமசாமி, B. A., B T., Higher P. E. T. & N. C. C. Officer
21 திரு CT. அருணசலம், P. E. T. Lower Trd.
22 திரு N. சாமுவேல் ஜேம்ஸ், Craft Instructor
23 திருமதி A. கிரேஸ்பாக்கியம், Sewring Mistress

## இஞ்சினீயரிங் தொழிற்கல்வி ஆசிரியர் :

24 திரு R. வெங்கட கிருஷ்ணன் ,Engineering Instructor
25 திரு M. மார்ட்டின் பால்ராஸ், Senior Mechanic
26 திரு S. SP. இராமசாமி, Junior Mechanic

## அலுவலகம்

27 திரு N. பழனியப்பன்
28 திரு V. செந்தில்நாதன்
29 திரு V. R. K. வீரப்பன்

## சி. ஆ. நி. தொடக்கப் பள்ளி

### தலைமை ஆசிரியர் :

திரு P. சீனிவாசராவ்

### துணை ஆசிரியர்கள் :

1 திரு M. ஜான் சாமுவேல்
2 ,, R. இராமசாமி
3 ,, V. நாகராசன்
4 ,, S. அனந்தநாராயணன்
5 ,, P. கணபதி பிச்சை
6 ,, PL. சுப்பிரமணியன்
7 ,, V. இராமச்சந்திரன்
8 ,, N. சீனிவாசன்
9 ,, G. கிருட்டினமூர்த்தி

### துணை ஆசிரியைகள் :

10 திருமதி D. R. எபனேசர்
11 ,, S. ஜெயமணி
12 ,, K. பத்மாவதி
13 செல்வி S. ஜெயம்
14 திருமதி S. சரோஜா
15 ,, R. முத்துமீனாட்சி
16 ,, R. மங்களம்
17 ,, S. சீதாலட்சுமி
18 செல்வி L. உமையாள்
19 ,, AR. காவேரி

## பள்ளி முதன்மை பெற்று அண்ணாமலையாரின் பரிசு பெற்றவர்கள்

| | |
|---|---|
| *1946* | கா. இராமநாதன் |
| *1947* | எஸ். சுப்பிரமணியன் |
| *1948* | வீர. வீரப்பன் |
| *1949* | மு. கணேசன் |
| *1950* | எஸ். வேங்கடசுப்பிரமணியன் |
| *1951* | எஸ். கணபதி |
| *1952* | எஸ். கருப்பையா |
| *1953* | இராம. காசிவிசுவநாதன் |
| *1954* | எம். கிருட்டினமூர்த்தி |
| *1955* | ஏ. பைரவன் |
| *1956* | சு. குளத்து |
| *1957* | எஸ். திலகவதி |
| *1958* | பழ. வசந்தா |
| *1959* | சிசௌ. கருப்பன் செட்டி |
| *1960* | ஏஆர். நெல்லியான் |
| *1961* | ஏஎன். கந்தசாமி |
| *1962* | சு. இரத்தினசாமி |
| *1963* | சித. மெய்யப்பன் |
| *1964* | ஆர். வசந்தகுமாரி |
| *1965* | எஸ். இந்திரா |
| *1966* | சி. பாலகிருட்டினன் |
| *1967* | இராம. கிருட்டினமூர்த்தி |
| *1968* | பி. வீரசுப்பிரமணியன் |

## விளையாட்டு வீரர்கள்

| | |
|---|---|
| 1946 | சி. இராமசாமி |
| 1947 | அழகு-வீரப்பன்<br>மு. அழகப்பன் |
| 1948 | ஏ. சின்னையா |
| 1949 | மு. அழகப்பன் |
| 1950 | மு. அழகப்பன் |
| 1951 | சித. சண்முகம் |
| 1952 | சித. சண்முகம் |
| 1953 | ஏஎம். சாகுல் கமீது |
| 1954 | கே. முகமது செரீபு |
| 1955 | சிஎம். நாகூரான் |
| 1956 | ஏ. இராமசாமி |
| 1957 | கேஇ. இராமசாமி |
| 1958 | ஏ. இராமசாமி |
| 1959 | வி. சோமசுந்தரம் |
| 1960 | வி. வயிரவன் |
| 1961 | வெ. பழ. பழநியப்பன் |
| 1962 | வெ. பழ. பழநியப்பன் |
| 1963 | இராம. சுப்பிரமணியன் |
| 1964 | இராம. சுப்பிரமணியன்<br>சுப. சாத்தையா |
| 1965 | எஸ். வயிரவன் |
| 1966 | கோ. இராமமூர்த்தி |
| 1967 | இராம. இலக்குமணன் |
| 1968 | கே. எம். சபாரத்தினம் |



சிட்டாள் ஆச்சி நினைவுத் தொடக்கப்பள்ளி ஆசிரியர் குழாம்



சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் குழாம்

## முன்னாள் தலைமை ஆசிரியர்கள்



திரு எஸ். நாராயண அய்யர் அவர்கள்
1943—45



திரு எஸ். இராகவாச்சாரியார் அவர்கள்
1945—49



திரு ஏ. சார்சு அவர்கள்
1949—52



திரு கே. பாலசுப்பிரமணியம் அவர்கள்
1952—60



சி. ஆ. நி. உயர்நிலைப் பள்ளித்
தலைமைஆசிரியர் திரு எம். ஆர்.
சுந்தரேசனார் அவர்கள்



சி. ஆ. நி. தொடக்கப்பள்ளித்
தலைமை ஆசிரியர் திரு பி.
சீனிவாச ராவ் அவர்கள்

# அன்னை சிட்டாவாச்சி.

பெரி. சிவனடியான் எம். ஏ., பி. டி

தாய்க்குலம் தந்த செம்மல், தகுதியில் உயர்ந்த நங்கை
தூய்மைசேர் எங்கள் பள்ளி தோன்றிட வாழ்ந்த அன்னை
பாய்ந்திடும் குழந்தை வெள்ளம் பள்ளியில் நுழையும் போதே
"சேய்களே வருவீர்" என்றே செப்பிட அமைந்த தெய்வம்.

கல்வியைக் கொடுத்தால் இன்பம் காணுவர் ஏழை மக்கள்
எல்லையில் மகிழ்ச்சி கொண்டே ஏற்றமாய் வாழ்வா ரென்ற
நல்வினை யறிந்து கல்விக் கோவிலை நாட்டித் தந்த
செல்வராம் வீ. தெ. வீ. யைச் சிறப்புற ஈன்ற அன்னை.

அன்னையே! உமதுபேரால் அமைந்தநற் பள்ளி தன்னில்
தென்றலாய் அறிவே வீசும்; தேனெனப் பண்பே ஊறும்
கன்னலின் சாருய் வற்ருக் கல்வியின் ஆறே ஓடும்
என்றநற் செய்தி கூறி நினதடி இறைஞ்சு கின்ருேம்.



# வள்ளல் வீரப்பர் வாழ்க!

கவிஞர் அரு. சோமசுந்தரன், எம். ஏ., பி. டி. முதல்வர்,
செட்டிநாடு தனிப்பயிற்சிக் கல்லூரி, காரைக்குடி.

பசித்த உலகிற்குப் பைஞ்சுனையாய், வாழ்வின்றி
நசித்த உலகிற்கு நற்றுணையாய், அருந்தமிழைப்
போற்றும் புலவோர்க்குப் புகலிடமாய், நற்கருமம்
ஆற்றும் எளியோர்கட் கடைக்கல மாய்த்தாயகத்தைக்
காக்கும் தமிழுக்குக் காவலனாய்ச் சிந்தனையால்
பூக்கும் புதுஉலகின் புரவலனாய்க் கல்விக்குக்
கொட்டிக் கொடுக்கின்ற கொடைஞனுமாய்த் தீமைகளை
எட்டி உதைக்கின்ற ஏந்தலுமாய்ப் பொதுப்பணியில்
தொண்டு பலசெய்யும் தூயமனப் பெருவள்ளல்!
பண்டு புகழ்கொண்ட பாரிக்கும் வழிகாட்டி!
ஏழை எளியார்க்கே இரங்குகின்ற காருண்யப்
பேழை இவரன்றோ! பெம்மானும் இவரன்றோ!
வயிற்றுச் சோறில்லா வளர்சிறுவர் வாழவெனப்
பயிற்றிச் சோறூட்டும் பல்கலையும் இவரன்றோ!
தாய்மைக் குணமுடைய தலைவரெனச் சொல்வேனா?
வாய்மைக் குணமுடைய வள்ளலெனப் புகழ்வேனா?
இளமைப் பருவத்தில் எத்தனையோ துன்பத்தால்!
உழன்ற என்மனையில் உயிரூட்டும் தெய்வமிவர்!
என்றன் இதயத்தை இரண்டாகப் பிளந்திட்டால்
ஒன்றில் என் அன்னை! மற்றொன்றில் எத்தனையோ
பேர்கள் இருக்கின்றார்; பெரும்பாகம் இவரன்றோ!
சீர்சால் வீரப்ப! சிந்தனையின் திருவிளக்கே!
கண்ட னூர்என்னும் கவின்மிக்க ஊர்பெற்றுக்
கொண்ட விளக்கே! நீ; குவலயத்தின் விடிவெள்ளி!
என்ற புகழுடனே இவ்வுலகில் நலமாக
என்றும் வாழ்ந்திடுக இனிது!



[பாடலாசிரியர் பள்ளியின் பழைய மாணவர். இப்பொழுது காரைக்குடியில் தனிப்பயிற்சிக் கல்லூரி ஒன்று நடத்தி வருகிறார்.]

# வாடாமல் வாழ்கவென வாழ்த்து!

கவிஞர் பெரி. சிவனடியான் எம்.ஏ.,பி.டி.

சீர்வளர் கின்றநற் செட்டிமார் நாடதனில்
சேர்புகழ்சூழ் தெய்வத் திருப்பதியாய்ப்-பார்புகழக்
கண்டவூர் ஒன்றுண்டு கந்தன் கருணையினால்
**கண்டனூர்** என்றநகர் காண்.

கண்டனூர் கண்டவுடன் கண்கவரும் கோயில்முன்
விண்டபுகழ் **வீரப்பர்** வீடுண்டு-பண்டைநலப்
பண்பெல்லாம் பெற்றுப் பழகுதமிழ் வள்ளலவர்
கண்நிறையக் கற்கண்டைக் காண்.

கொண்டலும் மாரி கொடுப்ப துலகறிய
விண்ணதிரப் பேரிடியை விட்டெறியும்-கண்டனூர்
வீரப்பர் தந்தால் விரலறியும் தானறியார்
யாரொப்பர் என்றிடுவேன் யான்.

எண்ணிக் கொடுக்காமல் இல்லையென்று சொல்லாமல்
மண்ணில் எணக்காத்த மாமணியாம்-கண்குளிரக்
கண்டு வணங்கும் கடவுளெனக் கொண்டேன்யான்
அண்டமெலாம் ஒப்புமதை ஆம்.

கல்விக்குத் தந்தை கனிந்ததமிழ் காக்குந்தாய்
செல்வர்க்குச் செல்வர் செழிப்புடையர்-பல்லவர்காண்
கற்கோயி லென்னக் கலைக்கூடம் கட்டியவர்
பொற்கோவென் றேயவரைப் போற்று.

**அன்னை**சிட் டாளாச்சி அண்டமெலாம் பேர்விளங்க
உன்னியுயர் பள்ளிகண்ட ஓர்மகனும்-அன்னையரைத்
தெய்வமெனப் போற்றிச் சிலைவடித்துப் பள்ளியின்முன்
உய்யவைத்தார் உத்தமனார் உண்டு.

அன்னை நிலையத்தில் ஆன்றகலை கற்றறிந்து
பின்னைப் பெருநலமும் பெற்றேன் யான்-என்னைப்போல்
கோடான கோடிப்பேர் கூடிப் பயில்நிலையம்
வாடாமல் வாழ்கவென வாழ்த்து!

[பாடிய கவிஞர் பள்ளியின் பழைய மாணவர். இப்பொழுது ஒட்டன் சத்திரம் அரசினர் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறார்]

## ஏறும் ஏணி

புலவர் இராம. வீரப்பன்.

மலையதுவாம் பொதிகையிலே பிறந்திட் டாயே
    மாண்புறவே பொன்னியிலே குளித்திட் டாயே
கலைவாழ்ந்த மதுரையிலே வளர்ந்திட் டாயே
    கவினெழுகும் தஞ்சையிலே மணந்திட் டாயே
நிலையுயர்த்த நீடுசெல்வம் ஈந்த தாயாம்
    நீங்காத ஒளிவிளக்காம் *சிட்டா ளாச்சி*
தலைமகளாம் கலைமகளைப் பெற்ற தாயே
    தமிழணங்கே வணங்குகின்றோம் காத்து நிற்பாய்.

பொறுமைக்குப் பிறப்பிடமே!! வஞ்ச மற்ற
    புன்னகையின் இருப்பிடமே! எளிய வாழ்வே!!
சிறுதம்பி வந்தாலும் கரமே தூக்கி
    செவிக்கினிதாய் வரவேற்புத் தந்து நிற்பீர்.
நறுந்தமிழன் வள்ளுவனும் உம்மைக் கண்டே
    நானிலத்தில் பணிவுடைமை செல்வம் என்றான்.
மறுவற்ற *வீரப்ப!* வள்ளால் நாங்கள்
    மனமாரக் கும்பிட்டோம் ஏற்றுக் கொள்வீர்!

கப்பலேறிச் செல்வத்தைச் சேர்த்த நாட்டில்
    கடல்தாண்ட முடியாத நிலையும் கண்டே
எப்படிநாம் வாழ்ந்திடுவோம் எங்குச் செல்வோம்
    எனவருந்தி மனமருண்டு நின்ற வேளை
இப்புவியில் கல்வியொன்றே சிறப்பு நல்கும்
    எனஉணர்ந்து கலைக்கோயில் படைத்த வள்ளால்
செப்பரிய இப்பணிநீர் செய்யா விட்டால்
    சிறப்பான வாழ்க்கையினை இழந்து நிற்போம்.

சொற்பெருக்கில் எம்பேச்சைக் கேட்டு நின்ருேர்
செந்தமிழின் பிறப்பேயிப் பள்ளி என்பர்
சிற்பத்தை மிஞ்சுபுகழ் சித்தி ரத்தைச்
சார்ந்தவரோ இரவிவர்மா படைப்பே என்பர்
கற்போரின் மனமறிந்தே கல்வி தந்த
கணக்காயர் அணைவரையும் தெய்வம் என்பர்
நற்பெயரும் நிலைத்திடவே நல்ல தம்பி
நலஞ்சேரும் தங்கையரும் முயன்று நிற்பீர்.

நாடுபுகழ் நற்கவிஞர் நாளும் ஈந்தாய்
நல்லபல மருத்துவர்கள் உன்தன் சேய்கள்
நீடுபுகழ் மாடங்கள் மணக்கூ டங்கள்
நீதந்த பொறிவல்லார் படைப்பே என்பேன்
ஏடுபுகழ் ஆட்சியினை ஆக்கு வோரும்
ஏற்றமிகு அலுவலரும் உனது மக்கள்
பீடுபெற்ற ஆசிரியர் பலரைத் தந்த
பெருமைமிக்க கலைக்கூடத் தாயே போற்றி.

கண்ணுக்கு விருந்தளிக்கும் கலையின் கூடம்
கற்கண்டுத் தமிழ்விளையும் கரும்புத் தோட்டம்
மண்ணுக்கோர் விரிந்தகடல். மாரு இன்பம்
மாணுக்க ரடைந்திட்ட அறிவுச் சோலை.
தண்டமிழைத் தரணியிலே தழைக்கச் செய்த
தமிழ்ச்சங்கம். தகுதியிலே உயர்ந்த வர்கள்
எண்ணற்ற சிறப்படைய ஏறும் ஏணி
ஏழைகளை வாழ்விக்கும் எங்கள் பள்ளி!



[பாடலாசிரியர் பள்ளியின் பழைய மாணவர். புதுவயல் இராமநாதன் செட்டியார் உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி வருகிருர்]

## அன்னைக்கு நன்றி

*மு. ரெங்கநாதன், பி. காம்;*

நல்லமுதம் ஊட்டியதாய், நற்றமிழ்தா லாட்டியவாய்,
செல்லமுடன் கன்னத்தைத் தீண்டும் கை - எல்லாம்
மறந்தாலும் நன்றி மறவாத சின்னம்
திறங்காட்டும் பள்ளியெனத் தேர்!

தாயன்பை இன்னதெனத் தாரணியோர் கண்டறிய
ஆயகலைஊட்டும்உனை ஆக்குவித்த - தூயநெறி
வீரப்ப னேமகிழ வெள்ளிவிழாக் காண்பவனே!
சீராக வாழ்க சிறந்து!

என்னை அருகணைத்தே இன்பத் தமிழ்க்கவிதை
தன்னைப் புனையும் தரங்காட்டி - முன்னுளில்
ஊக்குவித்த என்தாயே! உன்தன் புகழ்பரவ
நாக்குளிர வாழ்த்துகிறேன் நான்

இன்றுநான் இந்நிலையில் எங்கோ உயிர்பிழைக்க
அன்றுநீ கல்வி அளித்திட்ட - நன்றிதனை
நான்மறவேன் தாயே! நாள்தோறும் பேரோங்கி
வான்புகழ வாழ்க! மகிழ்ந்து!



[பாடியவர் பள்ளியின் பழைய மாணவர். இப்பொழுது "சந்தூர்" என்னும் பெல்லாரி மாவட்டத்தைச் சேர்ந்த ஊரில் S. M. & I. O. நிலையத்தில் பணியாற்றுகிறார்.]

## "எங்கள் பள்ளி"

தேனியலரசு பி. ஏ., பி. டி.

### காப்பு

பள்ளிப் பெருமைதனைப் பாரோர் அறிந்திடவே
துள்ளும் தமிழில் துதிபாட – நல்லபல
சொல்லும் பொருளும் துணிவும் எனக்களிப்பாய்
வல்ல பரனே நீ மகிழ்ந்து.

### வழங்கியோர்

பள்ளியிது பள்ளியிது பார்புகழும் பள்ளியிது
தெள்ளுதமிழ் அன்னைக்கே சிறப்பளித்த பள்ளியிது
அன்னைதிருப் பெயரும் அவனிதனில் நிலைத்திடவே
மன்னுபுகழ் **வீரப்ப** வள்ளல்தந்த பள்ளியிது.

### அமைப்பு

அண்ணு மலையரசர் அடிக்கல்லை நாட்டுவிக்கக்
கண்ணே அயராமல் கட்டுவித்த பள்ளியிது.
பக்கிங்காம் அரண்மனையைப் பார்த்துவந்த சிற்பியவர்
படம்வரைந்து மேற்பார்த்துப் படைத்தளித்த பள்ளியிது

### திறப்பு

கல்வித் துறைத்தலைவர் கலைஞர்திருச் சாஹூரும்
கனிந்துவந்து திறந்துவைத்த கண்கவரும் பள்ளியிது

### தலைமை ஆசிரியர்கள்

நாராயணர் முதலில் இராகவர் அதன்பின்னே
சீராரும் சார்சுடனே நற்பாலசுப்பிரமணியம்
தொடர்ந்து பணியாற்றித் தூரவிடம் சென்றபின்னர்
சுந்தரத் திருமகனர் தூய்மையுடன் பணியாற்றும்
சந்தத் தமிழ்வளர்க்கும் சரியான பள்ளியிது.

## சிறப்புப் பணிபுரிந்தோர்

நாவுக் கரசரும்நற்பழநி வேலவரும்
சாவுக்கு மஞ்சாமல் தமிழ்வளர்த்த பள்ளியிது
இமயம்வரை எம்நாடு என்றபெரும் உண்மைதனை
அமைத்தே பறையறைந்த ஆற்றல்மிகு பள்ளியிது
அருங்கலையில் ஓவியத்தில் அவனியெலாம் புகழ்வீச
ஆதிமூலர் பணியாற்றும் அழகான பள்ளியிது

## நன்மாணவர்

சிவனுக்கடியாரும் சிங்கார வேலவரும்
கவினுறவே தான்பயின்ற கலைக்கோவில் பள்ளியிது
லேராம ஞதன்முதல் நிகரில்லாப் பேச்சாளர்
பல்லோரை உருவாக்கிப் பார்க்களித்த பள்ளியிது.

## தனிச்சிறப்பு

ஏழைக் குழந்தைகட்கு இன்னமுதும் உறைவிடமும்
வேளைதவறாமல் விருந்தோம்பும் பள்ளியிது
ஆசிரியர் தம்மை அன்பர்களாய் நண்பர்களாய்
நேசித்துப் போற்றும் நிருவாகப் பள்ளியிது.

## வாழ்த்து

எங்கள் திருப்பள்ளி இவ்வுலகம் உள்ளவரை
மங்காக் கதிரவன்போல் மாண்புற்று வாழியவே!



[பாடிய கவிஞர் சி. ஆ. நி. உயர்நிலைப் பள்ளியின் ஆசிரியர்]

# ஆல்போல வாழ்க அளித்து!

*ரெ. சிங்காரவடிவேலன். எம்.ஏ.,பி.டி.*

ஆற்று மணலில் அகரமுதல் கற்றவர்கள்
நாற்றிசையும் மேற்கல்வி நாடுநிலை - மாற்றிடவே
பண்டெண்ணி வீரப்பர் பள்ளியினைக் கட்டியதால்
கண்டனூர் வாழ்வுக்குக் கண் !

வெல்க தமிழென்று வெற்றிக் கொடிகட்டிச்
செல்லும் திசையெல்லாம் சீர்பரப்பும் - பல்லோரைக்
கூராக்கும் பள்ளியிது கோட்டையெனில் எம்முயிராம்
வீரப்பர் நாடாளும் வேந்து !

பெற்றால் இவர்போலப் பிள்ளை பெறவேண்டி
நற்றாயர் பொங்கலிடும் நல்லமகன் - பெற்றவரின்
தாலாட்டே மந்திரமாய்த் தான்வாழும் வீரப்பர்
ஆல்போல வாழ்க! அளித்து.



### அன்பும் அறிவும்

உன் இதயம் கருணை உடையதாக இருக்கிறதென்று தான் உன்னிடம் அன்பு செலுத்தினேனே தவிர மூளையில் இருக்கும் அறிவுக்காக அல்ல.

— டபிள்யூ எச் டேவிஸ்.

## "அன்னை வளர் அறம்"

கவிஞர் அன்பு அருணசலம்

உண்மை வளர்க்கும் உயர்கோயில் - உள்ளத்
'தோவியம்' ஆய கலைக்கோயில்
கண்ணில் இனியதாம் கோயிலிலே - அன்னை
'காத்திருப்பாள்' திரு வாயிலிலே.

சின்னஞ் சிறுகிள்ளைப் பிள்ளைஎலாம்-வந்து
சேர்ந்து பயின்று மகிழ்கோயில்
பொன்மயம் ஆனதோர் கட்டிடமாம் - புகழ்
பொன்னகரத் தினும் எட்டிடுமாம்.

வண்ணமலர்கள் ஒருபுறத்தே - அன்னை
வாஞ்சை மலர்எனப், பூத்திருக்கும்
எண்ணம்உயர்ந்த 'நிலை' விளங்க - பச்சை
ஏய்ந்த கமுகு வளர்ந்திருக்கும்.

கண்கவர் சித்திரப் பேரொளியாம் - தெய்வம்
கண்டு வழிபடும் மண்டபமாம்
விண்ணவர் நாட்டினும் உள்ளதுகொல்! - என்றே
விந்தை புரிந்தங்கு நின்றிடுமே.

பெண்ணிற் சிறந்தநம் அன்னைசிட்டாள் - அறம்
பேசி முடியும் திறத்ததுவோ?
விண்ணிற் சிறந்த கதிரதுபோல் - பணி
வீறுகொண் டென்றும் விளங்குகவே.

[ கவிஞர் பள்ளியின் தமிழாசிரியர் ]

"இமயத்தின் எல்லைகண்ட எந்தமிழ் என்றும் வாழ்க"

# நினைவுக்கு ஒரு நிலையம்

ரெ. சிங்காரவடிவேலன், எம். ஏ; பி. டி.

பாவலர் நினைவு பாடல் ஆகின்றது. உழவர் நினைவு உண வாகின்றது. ஆசிரியர் நினைவு மாணவர் அறிவாகின்றது. உள்ளத் திற்கு ஏற்பச் செயல் உருவாகின்றது. வாழ்வின் அமைவு மனத்தின் நினைவைப் பொறுத்தது. எனவேதான் உள்ளம் திருந்த அறம் உரைத்தார் வள்ளுவப் பெருந்தகை. நினைவு எடுக்கும் உருவங்கள் நினைப்பவர் இயல்புக்குத் தக அமையும்.

## மன்னனும் வள்ளலும்

மனைவியின் மீது மாளாத காதல் கொண்டான் மகமதிய மன்னன் ஒருவன். அன்பு மனைவி அவனை முந்தி ஆண்டவன் அடி சேர்ந்தாள். மனைவியை மீண்டும் நினைக்க மன்னன் மாளிகை அமைத்தான். அந்த மாளிகையே இன்று, ஆக்ரா நகரில் அனைத்துலக விந்தைகளுள் ஒன்றாக நின்று நிலவுகின்றது. மன்னன் நினை வாகையால் மனைவியின் அன்பு; மாளிகை ஆயிற்று. எழுப்பியது மாளிகையேயாயினும் எண்ணியவன் மன்னனாயினும் அவன் எண்ணத்தின் அடிப்படை தன்னலம். மாளிகையைப் பார்த்து மகிழ்பவர் பலராயினும் அதனைப் பயன்கொள்வார் இலர். அது காட்சிப் பொருளே ஒழிய, வாழ்வுப் பொருளன்று, ஆனால் தென்ன கத்தின் கோடியில் வள்ளல் ஒருவர் அமைத்த நிலையம் அவர் அன்னையின் நினைவாகவும் அனைவரின் வாழ்வாகவும் அமைந்து விளங்குகின்றது. நினைவுக்கு எழுந்த அந்நிலையத்தின் தோற்ற வரலாறே இச்சிறு கட்டுரை.

## நிலையம் எழுந்த சூழ்நிலை

இராமநாதபுரம் மாவட்டத்தில் ஒரு சிற்றூர். காரைக் குடிக்கும் புதுவயலுக்கும் இடையில் அமைந்த அவ்வூர் கண்டனூர் என்பது. ஊரின் நடுவில் கண்ணைக் கவரும் ஒரு வண்ணக் கோயில். கோயிலுக்கு முன்னால் ஓர் ஊருணி. ஊருணியின் மறுகரையில், உள்ளூரிற் பழுத்த பயன்மரம் போன்று உதவும் பண்பாளர் ஒருவர் வீடு. அடைந்தவருக்கு நிழல் கொடுக்கும் ஆலமரம் போன்ற அந்த வீட்டிற்கு வீ. தெ. வீடு என்று பெயர். அக்குடும்பம் இம்மி

இம்மியாகச் சேர்த்து இமயக் கொடைபுரியும் நகரத்தார் குடும்பம். வளர்ந்தோங்கும் அந்தச் செல்வமனையில் அருள் சிறந்தோங்கும் அந்தச் செல்வமனையில் அருள் சிறந்தோங்கும் அன்னையார் ஒருவர் விளங்கினார். *சிட்டாள் ஆச்சி* என்பது அவர் பெயர். பொருள் சுரக்கும் வீட்டில் வாழும் அவருக்கு அருள் சுரக்கும் நெஞ்சும் இயல்பாகவே அமைந்திருந்தது. அவர் இறுதி நாளில் தம் அருமைமகனை அழைத்து "என்னுடைய நினைவால் ஏதாவது அறம் செய்க" என வண்ணப் பணித்துத் தம் வாழ்வை நிறைத்துக் கொண்டார். அன்னையின் அருள் நினைவே இன்று சிட்டாள் ஆச்சி நினைவுப் பள்ளிகளாகக் கண்டனூரில் காட்சி அளிக்கிறது.

## அன்னையைப் போற்றும் அருமை மைந்தர்

அன்னையின் சொல்லைப் பொன்னினும் மதிப்பவர் அவர்தம் ஒரே மைந்தர். அவர் *வீரப்பர்* என்னும் பெயரினர்; நீறு பொலியும் நெற்றியர்; நெஞ்சு நிறைந்த அருளினர். அவர் வறியவர்க்குத் தன் பொருளைக் கொடுப்பார்; ஆனால் பொருளைப் பெற்றுக்கொண்டவர் போல் அமைதியாக இருப்பார். அவர் அடக்கத்தின் திருவுரு. இளையவரையும் ஏவலரையும் கூட அதட்டிக் கூவாத இனிய சொல்லினர். அவர் முகவரியை அனைவரும் அறிவர்; ஆனால் அவர் முகத்தை அறிந்தவர் சிலரே. பொன்னைக் கொடுக்கும் துடிப்பிருந்தும் தன்னைக் காட்டிக் கொள்ளாத தகுதியாளர் வீரப்பர்.

## அன்றைய சூழலும் பள்ளியின் தோற்றமும்

அவர் அன்னையின் நினைவை நிலையாக்க என்ன செய்யலாம் என நீள நினைந்தார். உண்டி கொடுக்கலாம்; ஊருணி தோண்டலாம்; கோயில் கட்டலாம். உண்டிகொடுக்கும் சத்திரம் முன்னரே அவர் நடத்துகிறார். மேலும் உணவால் மிகுதியும் வளர்வது உடலே. செட்டிமார் நாட்டில் ஊருணிக்கும் கோயிலுக்கும் பஞ்சமில்லை. எனவே உள்ளத்தை வளர்ப்பதும், உலகை உயர்த்துவதும், மனித னுக்குக் கண்ணை அளிப்பதுமாகிய கல்வியை அளிப்பதே கடமை என வீரப்பர் கருதினார். அவர் முடிவுக்கு அந்நாட் சூழ்நிலையும் ஒரு காரணம்.

கண்டனூர் மக்களுக்குக் கல்வி கற்க அப்போது வசதி இல்லை. செல்வர் சிறுவர்கள் கல்விக்காகச் சென்னைபோன்ற நகரங்களுக்குச் சென்றனர். ஏழைச் சிறுவர்கள் காரைக்குடிக்கும் பள்ளத்தூருக்கும் வண்டிகட்டியும் சோறு தூக்கியும் அல்லல் உற்றுக் கல்வியைத் தேடினர். சுற்றுப்புறச் சிற்றூர் மக்கள் இரண்டும் கிட்டா நிலையில் தம்பிள்ளைகளை மாடுமேய்க்கவும் காடுவெட்டவும் ஆளாக்கினர். வள்ளல் வீரப்பர் நெஞ்சம் கேடில் விழுச்செல்வமாம் கல்வியை அளிக்கும் பள்ளியை அமைப்பதே அறங்களிற் சிறந்த அறம் என முடிவெடுத்தது.

வீரப்பர் எடுத்த முடிவு ஒரே கல்லில் இரண்டு மாங்காயைப் பெறும் முடிவு. அன்னையின் பெயரால் பள்ளி அமைத்தால் உலகம் உள்ளவரை அன்னையின் நினைவும் நிலைக்கும்; அங்கே கற்போர் அனைவரின் வாழ்வும் தழைக்கும். ஆகவேதான், மனைவியின் பெயரால் மாளிகை எழுப்பிய மன்னன் செயலைக் காட்டிலும் அன்னையின் பெயரால் வள்ளல் எழுப்பிய பள்ளி சிறந்தது என்று தொடக்கத்திலேயே கூறினேன்.

**பள்ளியின் தோற்றம்**

எண்ணிய வள்ளல் திண்ணியராதலாலும் வள்ளலின் எண்ணம் உயர்ந்ததாகையாலும் உள்ளூர் நகரப் பெருமக்கள், அகன்ற நிலப்பரப்பைப் பள்ளிக்கு விலையின்றி வழங்கினர். பல்கலைக் கழகம் கண்ட செட்டி நாட்டரசர் உயர்திரு அண்ணாமலை செட்டியார் 1941 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 24 ஆம் நாள் பள்ளிக்குக் கால்கோள் செய்தார். 1943 ஆம் ஆண்டு சூன் திங்கள் 14 ஆம் நாள் பள்ளி தோன்றியது.

**பள்ளியின் அமைப்பும் சிறப்பும்**

பள்ளிக் கட்டிடம் மூன்று இலட்சம் வெண்பொற் காசுகளை உண்டு வளர்ந்த மஞ்சள் மாளிகை. முட்டும் கூரையும் மூன்றுகால் நாற்காலிகளும் கொண்ட பள்ளிகள் பல்கிவரும் இந்நாளில், இப்பள்ளி அரண்மனை போன்ற பரப்பும் வனப்பும் உடையது; கண்டனூரில் காணத்தக்க இடங்களில் முதன்மையானது என்று சுருங்கச் சொல்லலாம்.

பரந்து விரிந்த பள்ளியைச் சுற்றிப் படர்ந்து அகன்ற 9 ஏக்கர் அளவில் விளையாட்டிடமும் அமைந்துள்ளது. அழகிய முகப்பும் இடம் அகன்ற வகுப்பறைகளும் இங்கு அமைந்துள்ளன. நாளும் வளர்ந்து வரும் நூல்நிலையமும் அனைத்துக் கருவிகளும் அமைந்த அறிவியல் ஆய்வுக்களமும் பள்ளியில் உள. பள்ளிக்கு வேண்டிய எல்லா வசதிகளும் அமைந்த இங்கே தோற்றநாள் முதல் ஆன்ற விந்து அடங்கிய ஆசிரியர்கள் பணியாற்றி வருகின்றனர்கள். தொடக்கப் பள்ளியும் உயர்நிலைப் பள்ளியும் தோள்கோத்து நின்று கல்விப் பணியாற்றி வருகின்றன.

இப்பள்ளியிற் கல்விகற்ற மாணவர்கள் உலகின் எப்பக்கமும் பள்ளியின் பெருமையைத் தத்தம் பணியாற் பறைசாற்றி வருகின் றனர். வாழ்வுத் துறை தோறும் மின்னுகின்ற மணிகளை உருவாக்கு வது இப்பள்ளியின் இயல்பாகும்.

**நன்றிக் கடனும் நன்கொடைகளும்**

அறிவையும் வாழ்வையும் அளித்துவரும் பள்ளிக்கு நன்றி காட்டும் வகையில் பரிசு வழங்குவோரும், நன்கொடை வழங்கு வோரும் பலர் ஆவர்.

பள்ளியின் பெயருக்கு அரசினர் பரிசுப் பத்திரம் ஒன்று நன்கொடையாக வந்தது. எப்பொழுதும் பிறருக்கே கொடுத்தறியும் பண்பினராதலால், பள்ளிப் புரவலர் அதனைத் திருப்பி அனுப்ப முயன்றார். அனுப்பியவர் யார் எனத் தெரியாமையின் நன்கொடையை வன்கொடையாக ஏற்க வேண்டிய நிலைமை நேர்ந்தது. கொடுத்தே பழகிய வீரப்பர் தடுத்து மறுத்தாலும், நன்றி காட்டும் நன்கொடையாளர்கள் அடுத்தடுத்தும் பெயர் அறிவிக்காமலும் கொடுக்க முன்வருவது பள்ளியின் சிறப்பிற்கு மற்றொரு சான்று.

### பள்ளி வளர்ச்சியும் வள்ளல் குடும்பமும்

பள்ளியின் தொடக்க நாட்களில் சுற்றுப்புறப் பிள்ளைகளுக்கு ஊர்தி வசதி அளித்தும் வெளியூர் மாணவர்க்கு விடுதி நடத்தியும் வீரப்பர் பள்ளியை வளர்த்தார்; ஏழை மாணவர்கட்குச் சோறும் அளித்துக் கல்வியும் அளித்து வருகிறார்.

வீரப்பரைப் போலவே அவர்தம் மக்களும் பள்ளியின் வளர்ச்சியில் நாட்டம் கொண்டவர்கள். வீரப்பருக்கு ஆண்மக்கள் மூவர். மூத்தமகனார் திரு வீர. அருணாசலனார் படிப்பில் முதன்மை பெறும் மாணவர்கட்குப் பரிசளித்துப் பள்ளி வளர்ச்சியில் தன் பங்கை நிறைவேற்றி வருகிறார். அடுத்த மகன் திரு வீர. சுந்தரம் என்பவர் பணிவும் இன்சொல்லும் பாங்குற அமைந்தவர். தொழில் துறையில் நாட்டமிக்க அவர் பள்ளிப் பணியாளருள் ஒருவர்போலப் பள்ளி நிகழ்ச்சிகளிற் கலந்துகொள்ளுவது பாராட்டத்தக்கது. இளையவர் திரு வீர. சிதம்பரம் துடிப்பும் கண்டிப்பும் கொண்டு பள்ளி வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக விளங்குகிறார். இவ்வாறாக வாழையடி வாழையாகப் பள்ளியின் உயர்ச்சிக்கும் கல்வியின் வளர்ச்சிக்கும் வீ. தெ. குடும்பம் வேண்டிய உதவிகளைச் செய்து வருகின்றது.

### அறிவுக் கோயில்

'பாய்ந்திடும் குழந்தை வெள்ளம் பள்ளியில் நுழையும் போதே சேய்களே வாரீர் என்னச் செப்பிட அமைந்த தெய்வமாய்' அன்னையின் சிலை முகப்பில் விளங்குகின்றது. அறிவுக் கோயிலாகிய பள்ளி ஆண்டவன் கோயிலைக் காட்டிலும் சிறந்த பணியாற்றி வருகிறது. கோயிலில் சிலைக்கு முன்னே குருக்கள் ஒருவர்தான் பூசை செய்வார். ஆனால் அன்னையின் சிலைக்கு முன்னே 'குருக்கள்' பலர் அறிவுப் பூசை செய்கின்றனர். கோயிலில் மணியடித்தால் கும்பிட வருபவர்கள் அரகரா! சிவசிவா! என்று கண்களை மூடிக்கொள்வர். பள்ளியில் மணியடித்தால், படிக்க வருவோர் அகர முதல எழுத்தெல்லாம் என்று கூறிக் கண்களைத் திறந்துகொள்வர். வாடும் பூமாலையையே கோயிலிற் சூட்டுவர். வாடாத அன்புப் பாமாலையை அன்னையின் சிலைக்கு ஆசிரியர்களும் மாணவர்களும் நாள்தோறும் சூட்டுகின்றனர். கோயிலில் விளங்குபவை நிலையான கலைகாட்டும் கற்சிற்பங்கள். பள்ளியில் விளங்குபவை வளரும் கலைகற்கும் மனித

உள்ளங்கள். அன்புக் கோயிலாகவும் அறிவுக் கோயிலாகவும் விளங்கும் சிட்டாள் ஆச்சி நினைவுப் பள்ளி தன் வெள்ளி விழாவைக் கண்டு வீறு நடை போடுகின்றது.

அன்னையின் நினைவுக்கு ஒரு நிலையமாக அமைத்த பள்ளி அனைவரின் நினைவுக்கும் நிலையமாக விளங்குகிறது. இங்குப் பணியாற்றி இடம்பெயர்ந்த ஆசிரியர்கள் எங்குச் சென்றாலும் இப்பள்ளியையே தம் நினைவின் நிலையமாக அமைத்துப் போற்றுகின்றனர். படித்துச் சிறந்து பல்துறையிலும் பணியாற்றும் மாணவர்கள் தம் உயர்வுக்கு அடிப்படை இப்பள்ளியே என்று இந்நிலையத்தை என்றும் நினைக்கின்றனர். தந்தைமார்கள் தம் பிள்ளைகட்கு நல்ல கல்வி அளிக்க ஏற்ற இடமாக நினைக்கின்ற நிலையம் இதுவே. தாய்மார்களைப் பிள்ளை பெற்றால் வீரப்பரைப்போலப் பெறவேண்டும் என நினைக்கச் செய்கிறது இந்நிலையம். இவ்வாறு ஒருவரின் உயர்ந்த நினைவு அனைவரின் வாழ்விற்கும் நிலையமாக அமைந்து விளங்குகின்றது. நினைப்பவர் வல்லவராகவும் நினைப்பது நல்லதாகவும் அமைந்தால், நினைவு நிலையாகும் என்பதற்கு இப்பள்ளி மலையன்ன சான்று' வாழ்க வீரப்பர்! வளர்க அவர் அமைத்த 'நினைவுக்கு ஒரு நிலையம்'.

'வெள்ளத் தனையது மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு'

[கட்டுரை ஆசிரியர் பள்ளியின் பழைய மாணவர்; காரைக்குடி அழகப்பா கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றி வருகிறார்.]



## இதயப் பளிங்கு

அறிஞனின் இதயம் பளிங்கைப் போன்றது; எல்லாப் பொருள்களையும் அதனதன் தன்மையைப் போல எதிரொளி செய்யும். அதனை அசைத்துவிடக் கூடாது.

— கன்ஃபூஷஸ்.

# அன்னைக்கு ஓர் ஆலயம்

*அழகு வீரப்பன்*

அன்னையின் நினைவால் எழுந்த ஆலயமே! நீ இருக்கும் திக்கு நோக்கிப் பணிகின்றோம்.

ஏடுதூக்கிவரும் இளஞ் சிறுர்களைப் பீடுநடை போடச்செய்யும் பெருமையல்லவா உன்தன் பெருமை!

கல்லாமையின் இருளகற்றும் தோற்றமல்லவா உன்தன் தோற்றம்!

"கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்" என்ற பொன்மொழியின் சின்னமல்லவா உன்தன் சின்னம்!

கன்னங்கரிய இருளில் சின்னஞ் சிறிய மின்மினிபோல், கால் நூற்றுண்டுகட்கு முன்னர் நீ காணப்படாதிருந்தால் உன்தன் பகுதியில் கல்வியொளி ஏது? அறிவு மணமேது? உன்தன் தோற்றத்தால் பிறந்ததுதானே இன்றைய ஏற்றம்! அதனை எண்ணுகின்றோம்; உன்னை வணங்குகின்றோம்!

ஆலமரம் ஒன்றுதான் - அதன் விழுதுகள்தான் எத்தனை! அன்னையின் பெயரால் எழுந்த ஆலயம் நீ ஒன்றுதான் - நீ ஈன்றெடுத்த புகழ்ச் செல்வங்கள்தான் எத்தனை எத்தனை? அன்னையே, உன் புகழ் நிலைகண்டு மகிழ்கின்றோம்!

இமயத்திற்குச் சிறப்பு அதன் சிகரம் – உனக்குச் சிறப்பு செந்தமிழ்த் தொண்டு. ஆம் இற்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர், மற்றையோர் தமிழ்ச் சோலையிலே தவழ்ந்துகொண்டிருந்த காலத்தில், வான் முகட்டில் வட்டமிட்டுப் பறந்த சிறப்பல்லவா உன் சிறப்பு! ஏனையோர் கரையிலே நின்று கையசைத்துக் கொண்டிருந்த காலத்தில், "தெள்ளு தமிழென்னுந் திருவாரமுதமய வெள்ளத்திலாட விரைந்தோடிய" வீரமல்லவா உன் வீரம்! "இமயத்தின் எல்லைகண்ட எந்தமிழ் என்றும் வாழ்க!" என்ற வீரமுழக்கத்துக்கு வித்திட்ட தாய்த் திருவல்லவா நீ! உனக்கே யமைந்த இத் தனிப்பெருஞ் சிறப்பினையெண்ணி இறும்பூதெய்துகின்றோம். உன் திருவடியைப் போற்றுகின்றோம்; திரளாகக் கூடி இன்று திருவிழாக் காணுகின்றோம்.

அன்னசத்திரம் ஆயிரம் கட்டியவர்களை யாரென்று நாம் கேட்கவில்லை; ஏழைக்கு எழுத்தறிவித்த ஒருவரை எங்கே எங்கே என்று கேட்கின்றோம். இதோ, இங்கே இங்கே யென்று கண்டு மகிழ்கின்றோம். உன் தோற்றத்துக்கு வித்திட்ட வீரப்ப வள்ளலை வாழ்த்துகின்றோம்! பயன் மரத்தை உள்ளூரில் பழுக்கச் செய்த பண்பாளர் அல்லவா அவர். காலங் கருதி இடத்தாற் செய்த திருப்பணியல்லவா அவர்தம் பணி. கல்விக் கோயில் நிறுவிய அன்னாரின் நல்லறத்தைப் போற்றுகின்றோம்; பல்லோரும் ஏத்தப் பணிகின்றோம்!

அன்னையே, எங்கள் ஆலயமே நீ வாழ்க! வெள்ளி விழாக் காணும் எங்கள் பள்ளியே, உன் தொண்டு வெல்க!

(கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவர். மதுரை இந்தியன் பாங்கில் பணியாற்றி வருகிறார்.)



### தடுக்க முடியுமா?

மேகங்கள் எவ்வளவுதான் பெரியனவாக இருந்தபோதிலும் அவற்றால் சூரியனை அடியோடு மறைத்துவிட முடியாது. அது போலவேதான் கயவர் எத்தனைதான் முயன்றாலும் சிறந்த மனிதர்களின் முன்னேற்றத்தைத் தடுக்க முடியாது.

— *மகாகவி தாகூர்.*

## சில நினைவலைகள்

கே. பாலசுப்பிரமணியன் பி.ஏ., எல்.டி.

"செல்வத்துப் பயனே ஈதல்" என்று சங்ககாலத்துச் சான்றோரும்,

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதியம் இல்லை உயிர்க்கு" என்று தெய்வப் புலவர் திருவள்ளுவரும் குறிப்பிட்ட கருத்துக்கு இலக்கியமாக ஒரு நன் மரபு நம் நாட்டில் தொன்று தொட்டு இருந்து வருகிறது. படை வலிமிக்க முடியுடை வேந்தர் மூவரும், கொடைவலிமிக்க கடைச் சங்க வள்ளல் எழுவரும் பாணர்க்கும், விறலியர்க்கும், பாவலர்க்கும் நாவலர்க்கும், வாரி வாரி வழங்கி அந்நன் மரபின் மூத்த தலைமுறையினர் ஆயினர்.

பின்னர்வந்த வெற்றிவேந்தரும் பழைய மரபினைத் தொடர்ச்சியறுவண்ணம் பாதுகாத்து வந்துள்ளனர். அவர்கள், வானளாவிய கோபுரங்களைக் கொண்ட கோவில்களையும் கட்டினர்; பாசனத்திற்கேற்ற ஏரிகள் பலவற்றை அமைத்தனர்; கல்விச் சாலைகள் நிறுவினர்; அன்னசத்திரங்கள் பலப்பல அமைத்தனர்; கல்லையும் மண்ணையும் கலைச்செல்வங்களாக்கினர்; மக்களுடைய இம்மை வாழ்க்கையோடு மறுமை வாழ்க்கையைப் பற்றியும் எண்ணினர்.

காலவேறுபாடுகளால் முடிமன்னர் சிலராயினர்; சிற்றரசர் சிறப்பிழந்தனர். ஆறுயிரம் மைல்களுக்கப்பாலிருந்து வந்த ஆங்கிலேயர் ஆள்வோராயினர். அவர்கள், தம் வளர்ச்சியையே முதன்மையாகக் கொண்டனர். அஃதியல்பே! அவர்தம் பற்றும் பாசமும் அவர்களுடைய கல்விமுறையிலும் சமயக் கொள்கைகளிலும் தானே இருக்கும்? "கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்" என்ற கருத்து மாறியது. "கற்றதனால் பயனென் கவர்மெண்டை உற்றுத்தியோகம் பெறல்" என்னும் கருத்து வலுத்தது. இதன் பலன் நம் நாட்டுக் கலைகளும், அவற்றின் இருப்பிடமாகிய கோவில்களும் கவனக்குறைவுக்காளாயின. காலப் போக்கில் இடிந்தழிந்தவை பலப்பல; கல்விச் சாலைகளுக்கும் அம்முடிவே நேர்ந்தன.

இந்நிலையில்தான் நாட்டுக் கோட்டைப் பெருமக்கள் பலர் கோவில்களையும் பற்றி எண்ணிப் பார்த்தனர். மனம் உருகினர்.

திரைகடலோடித் திரட்டிய பெருஞ் செல்வத்தை அள்ளி அள்ளித் தந்தனர். இடிந்த கோவில்கள் பல கம்பீரமாகப் புதுப் பொலிவுடன் எழுந்து நின்றன. பலமிழந்தவை பலம் பெற்று நின்றன. புதியன பல எழுந்தன. அவ்வாறே நாட்டின், பல்வேறிடங்களிலும் சமயக் கல்வியிலும், சாத்திரக் கல்வியிலும் நாட்டம் செலுத்தினர். பள்ளிகள் தோன்றின; பல்கலைக் கழகங்கள் உருப்பெற்றன. பழைய நன்மரபு மீண்டும் புத்துயிர் பெறச் செய்தனர்; செய்து வருகின்றனர்.

அத்தகைய அரும்பெரும் குணங்கள் அமைந்த நாட்டுக் கோட்டை நகரத்தாருள் குறிப்பிடத் தக்கவர்கள் உயர்திரு வீ. தெ. வீரப்பச் செட்டியார் குடும்பத்தினர். அக்குடும்பம் கோவில் களின் முன்னேற்றத்திற்குப் பெரும்பொருள் வழங்கியுள்ளது; அதோடு மட்டும் நிற்காது, அமரகவி பாரதியார், ''புண்ணியங் கோடி ஆங்கோரேழைக்கு எழுத்து அறிவித்தல்'' என்று பாடியதற் கேற்பக் கல்விக் கூடங்களையும் நிறுவியுள்ளனர்.

உயர்திரு வீ. தெ. வீரப்பசெட்டியார் அவர்கள் அன்னையார் உயர்திருவாட்டி சிட்டாள் ஆச்சி பெயரால் மூன்று நூறுயிரம் வழங்கிப் பள்ளி நிறுவியுள்ளார்கள். தாயின் உள்ளம் மகிழ மகன் கலைக் கோவில் கட்டினுர்கள். உயர்திரு வாட்டியின் கொடையின் அடையாளமாகச் ''சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி'' விளங்கிக்கொண்டிருக்கிறது. இவ்வுயர்பள்ளிக்கு அமைந்த கட்டடங்கள் கண்ணையும் கருத்தையும் கவரும் அழகும் அமைப்பும் கொண்டவை; கல்வி கற்பிக்கும் பணிக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் கொண்டவை. பிள்ளைகளுக்கு உள்ளொளி பெருக்கும் பிரார்த்தனை மண்டபமும் அவர்களை வீரராக்கும் விளை யாட்டு மைதானமும் கொண்டது. பிரார்த்தனை மண்டபத்தில் அமைந்த அன்னையார் சிட்டாளாச்சியின் அமைதியும் பொலிவும் கொண்ட அந்தப்படம் காண்போர் உள்ளத்தை ஈர்க்கும் ஆற்றல் உடையது. தூய வெள்ளைக் கலையுடன் விளங்கும் அவ்வடிவம் சத்துவமே உருவெடுத்தது போன்றது; தன் திருமுகக் குறிப்பால் பலப்பல நல்லறிவுரைகளைப் பயிற்றிக் கொண்டிருக்கிறது. கல்விக் கூடத்தின் இக்கவின் மிகு காட்சி கற்றுரையும் மற்றுரையும் களி கொள்ளச் செய்கிறது. ஊரார் உள்ளமெல்லாம் குளிர்ந்து மகிழ் கிறது.

இத்தகைய சிறப்புகளோடு இக்கல்விக் கூடம் 1943-ஆம் ஆண்டில் தோன்றியது. தலைமை ஆசிரியர்களும் பிற ஆசிரியர்களும் அதனை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த் தனர். அதனைக் குழந்தைப் பருவத்தில் வளர்த்த அவர்களைப் பாராட்ட வேண்டும். அதன் ஒன்பதாவது ஆண்டில் அதனைப் பேணும் பொறுப்பைத் தலைமை ஆசிரியர் என்ற முறையில் நான் ஏற்றுக்கொண்டேன். அதன் பதினேழாவது வயது வரை அன்புடன் பணிபுரிந்தேன். 9 முதல் 17 வயதுவரை உள்ளகாலம் Adoloscent Period. குழந்தை இயல்பும், வாலிப இயல்பும் கொண்ட பருவம்.

குழந்தையுமல்ல, பொறுப்பறிந்த வாலிபனுமல்ல. கல்வித் துறையிலுள்ளோர் இப்பருவத்தை எவ்வளவு நயமாகக்கையாள வேண்டுமென்பதை நன்கு அறிவர். புரவலர் செட்டியார், அன்பு நிறைந்த ஆசிரியர்கள், ஆர்வமுள்ள மாணவமாணவிகள் முதலாக எல்லோருடைய நல்லியல்புகளும் என்பணி நல்ல பணியாக உருவெடுக்க உதவி செய்தன என்பதைப் பெருமிதத்துடன் நினைவு கூர்கிறேன்.

அந்த ஆண்டுகள் என் வாழ்நாளில் என்றும் பசுமையாகவே இருக்கும். அத்தகைய சூழ்நிலை அமைந்தமைக்கு, நான் பள்ளியுடன் தொழிற்பற்றுக் கொண்டவர்களுக்கும் ஊர் மக்களுக்கும் எல்லோருக்கும் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

தற்போதுள்ள தலைமை ஆசிரியரும், பிற ஆசிரியர்கள் ஆகியோரும் ஆற்றுகின்ற அரும்பணியின் மூலம் அவ்வுயர் பள்ளி எல்லா வகையிலும் உயர்பள்ளியாகத் திகழ வேண்டும். திகழும் என்ற நம்பிக்கையுடன் ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றேன்.

புரவலர் உயர்திரு வீ. தெ. வீரப்ப செட்டியார் அவர்களுடைய பேருள்ளம் அந்தநல்லபணிக்கு என்றும் உறுதுணையாக இருக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

வாழ்க சிட்டாளாச்சி உயர்பள்ளி!
வாழ்க வள்ளலாரும் அவர் குடும்பமும்!
வாழ்க ஆசிரியன்மார்!
வாழ்க மாணவ மாணவியர்!
வாழ்க கண்டனூர்ப் பெருமக்கள்!

[ கட்டுரையாளர் பள்ளியின் முன்னாள் தலைமை ஆசிரியர். ]



## ஒதுக்கித்தள்ளுங்கள்

சடங்கா, சாத்திரமா, குருமார்களின் கட்டளையா, ஆண்டவனின் ஆணையா எதுவாக இருந்தாலும் சரி, அது உங்கள் பகுத்தறிவுக்கு ஒத்து வருகிறதா என்று பாருங்கள்; இல்லை எனில், அச்சமின்றி ஒதுக்கித் தள்ளிவிடுங்கள்.

இங்கர்சால்.

# என் ஆசை

*ப. அருணசலம்.*

கண்டனூரின் ஏழு ஆண்டு வாழ்க்கை எனக்குப் பயனுள்ளதாக இருந்தது. பள்ளித் தலைவரவர்களுக்குச் செயலாளனுகப் பணிபுரிந்தேன். அதை ஒரு பேருகக் கருதுகிறேன்; நான் அவர்களிடம் கற்றேன். நூற்றுக் கணக்கான மாணவர்கள், அறிஞர்கள், சமூகப் பெரியார்கள் பலரைக் காணும், பழகும், அறியும் வாய்ப்பைப் பெற்றேன். எனது பிள்ளைகளுக்கு எழுத்தறிவித்தது அன்னையின் பள்ளிகள்தான்.

நான் சொக்கலிங்கம் புதூரில் பிறந்தேன்; ஆத்தங்குடியில் வளர்ந்தேன். ''கண்டனூரான்'' என்றே பலருக்கு என்னைத் தெரிகிறது. அந்த ஊருடன் ஒன்றித்து வாழ்ந்திருந்தேன்.

நம் பள்ளிகள் இரண்டும் செல்வர் பெற்ற பிள்ளைகள்; செல்லமாக வளர்க்கப்பட்டன. ''பங்களா'' வாழ்க்கை! இருபது ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டின் எந்தப் பள்ளிக்கும் இவ்வளவு அழகான கட்டிடம் இருந்ததாக எனக்குத் தெரியாது. பள்ளிகளின் பிள்ளைப் பருவத்தில் நான் அவற்றுடன் இருந்தேன். வேண்டிய வசதிகள் எல்லாம் அவற்றிற்குச் செய்து கொடுக்கப்பட்டன. திட்டம் போட்டு, சமர்ப்பித்து, அடுத்த ஆண்டு ஒப்புதல் பெற்று, மூன்ருவதாண்டு அரைகுறையாகப் பயன் பெறும் அவலநிலை நம் பள்ளிகளுக்கு இருந்ததில்லை. நினைத்த நல்லதை, நினைத்ததும் செய்துகொள்ளும் வாய்ப்பை அவை பெற்றிருந்தன.

''பெரிய இடத்துப் பிள்ளைகள்'' என்ருலே ''கெடுக்கப்பட்டவைகள்'' என்று பொருள் கொள்வதுண்டு. நம்பள்ளிகள் அதற்கு விதிவிலக்கு. பெற்றவர்கள் கொடுத்த செல்வத்தையும் செல்லத்தையும் உரமாகக் கொண்டு, ஆக்கத்துடனும் ஊக்கத்துடனும் வளர்ந்து, இன்று இருபத்தைந்து வயது வாலிபர்களாகக் காட்சி தருகின்றன. மேஜராகி நான்காண்டுகளாகிவிட்டன; தந்தை மகற்காற்றும் கடமையைச் செவ்வனே செய்துவிட்டார்கள். இனிப் பிள்ளைகளின் கடமை – தரத்தாலும் அளவாலும்நாளும்வளர்ந்து ஊருக்கும் நாட்டுக்கும் பெருமை தேடித் தருவதுதான்.

''ஆயிரம் பள்ளிகளில் இதுவும் ஒன்று'' என்று ஒருவரும் சொல்லக் கூடாது; ''ஆயிரத்தில் ஒன்று'' என்று அனைவரும் சொல்ல வேண்டும். பள்ளிகளில் தொண்டாற்றும் ஆசிரியப் பெரு

மக்கள் இந்தச் சிறப்பைத் தேடித் தருவார்கள் என்று நம்புகிறேன். அறிவும் ஆற்றலும் வலிவும் பொலிவும் நிறைந்து, ''கண்டனூர் முத்திரை''யுடன் வெளியாகும் நமது மாணவர்கள் நாடு முழுவதும் பரவி, மலிந்துள்ள, அறியாமை, சோம்பல், ஊழல் இவற்றைப் போக்க வேண்டும். வருங்காலத்தில் நாட்டை உருவாக்கும் அறிஞர் பலர், நம் பள்ளிகளின் ''பழைய மாணவர் கழக'' உறுப்பினர்களாக இருக்கவேண்டும். இது என் ஆசை.

[கட்டுரையாளர், பள்ளிப் புரவலரின் முன்னாட் செயலர். இப்பொழுது சிங்கப்பூர்ப் பல்கலைக் கழகத்திற் பணியாற்றி வருகிறார்]



## மிகச்சிறந்த ஆசிரியன்

ஏனைய எல்லா ஆசிரியர்களையும் விட மிகச்சிறந்த ஆசிரியன் காலம். அது புகட்டிய பாடங்களுக்கு நிகராக இதுவரை யாருமே எப்போதும் புகட்டிய தில்லை.

எட்மண்ட் பர்க்

# சிட்டாளாச்சி உயர்நிலைப் பள்ளி

*மு. பழனிவேல்*

மக்கட்குக் கண்போன்றது கல்வி. அக்கல்வியைக் கற்பிற்கும் நிலையங்களும், அவற்றின் ஆசிரியர்களும் நன்கு வாய்த்தால் தான் அக்கல்வி பயனுடைய கல்வியாக அமைய முடியும். பண்டைக் காலத்தில் குருகுலமுறையில் கல்வி கற்பிக்கப்பட்டது. இன்று பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் கற்பிக்கப்படுகிறது. அமைகின்ற ஆசிரியர்களால் நல்லகல்வி அமைவதுடன் நல்லியல்புகளும் நற்பழக்கங்களும் வாழ்க்கைக்கு அடிப்படையாய் அமைகின்றன. அதனால் தான் தாரமும் குருவும் தன்வினைப் பயன் என்ற பழமொழியும் விளங்கி வருகிறது.

இத்தகைய சிறந்த பள்ளிகளில் சிட்டாளாச்சி உயர்நிலைப் பள்ளி முன்னணியில் முதலிடம் பெற்றுத் திகழ்கிறது. இப்பள்ளிக்கு அடிப்படையாக விளங்கும் சிட்டாளாச்சி அவர்களும், இப்பள்ளியைத் தோற்றுவித்து நடத்துகின்ற உயர்திரு. வீ. தெ. வீரப்ப செட்டியார் அவர்களும் நல்ல உள்ளம் படைத்தவர்களாவர். அவர்கள் உள்ளத்திற்கேற்ப அவர்கள் எழுப்பிய பள்ளிக் கட்டிடம் கவின்மிகு கலைக் கோயிலாக விளங்குகிறது. காண்போர் கண்ணையும் கருத்தையும் கவர வல்லது. எழில்மிகு தோற்றத்தால் மட்டுமின்றிக் கல்வியின் ஏற்றத்தாலும், ஆசிரியர்கள் மாணவர்களின் பண்பாட்டாலும் இராமனாதபுரம் மாவட்டத்திலேயே தனிச் சிறப்புடையதாய் உயர்ந்து விளங்குகிறது. இது வெறும் புகழ்ச்சியன்று; உண்மை.

இத்தகைய பள்ளி 1943-இல் துவங்கியது. அதற்கு அடுத்த ஆண்டு 1944 முதல் 1964 முடிய 20 ஆண்டுகள் ஏற்றமுறத் தமிழ்ப் பணியாற்றினேன். அத்தகைய இருபதாண்டு இன்ப நாட்களை நான் என்றும் மறவேன். எனது சொந்தப் பள்ளிபோல் உறவுடனும் உரிமையுடனும் பழகி உயர்வுடன் பணியாற்றினேன். பள்ளி விட்டாலும் உள்ளம் விட்டகலாத ஊன்றிய பேரன்பு என்றும் பசுமையாகவே உள்ளது. இப்பள்ளி இப்போது 25 ஆண்டுகள் முடிந்து இன்று வெள்ளி விழாக் கொண்டாடும் விழுமிய சிறப்புடன் விளங்குவது கண்டு பெருமகிழ்வெய்துகிறேன்.

இப் பள்ளியின் தனிச் சிறப்பு யாதெனில், பள்ளி தொடங்கியது முதல் தொடர்ந்து தமிழில் மாணவர்கள் முதன்மையாகத் திகழ்வதேயாகும். பள்ளிப் படிப்பில் தமிழில் முதன்மை பெறுவதுடன், சென்னை மாணவர் மன்றம், பிற பள்ளிகள் நடத்தும் கட்டுரைப்

போட்டி, பேச்சுப் போட்டி,, கையெழுத்துப் போட்டி ஆகியவைகளி லும் தொடர்ந்து ஆண்டுதோறும் முதன்மைபெற்று வருகிறது. பள்ளியில் மட்டுமின்றிக் கல்லூரியிற் பயிலுங் காலத்தும், பல்வேறு பணிகளில் அமர்ந்த காலத்தும் கண்டனூரிற் பயின்ற மாணவர்கள் கன்னித் தமிழில் பாராட்டத் தக்க முதன்மையும், பண்பியல்புகளும் உடையவர்களாய் விளங்கி வருவதை விழுமிதாக் காணலாம்.

இத்தகைய பள்ளியின் வெள்ளி விழாவுக்குச் சிறப்பு மலர் வெளியிடுவதறிந்து பாராட்டுகிறேன். அதற்கு என்னையும் கட்டுரை எழுதுமாறு தூண்டிய தலைமை யாசிரியர் அவர்களுக்கும், ஆசிரியத் தோழர்களுக்கும், பள்ளித் தலைவர் உயர்திரு வீ. தெ. வீரப்ப செட்டியார் அவர்களுக்கும் மிக்க நன்றியும் வணக்கமும் உடையேன்.

[பள்ளியின் முன்னாள் தமிழாசிரியர். சேலம் மாவட்டம் முத்துக்காபட்டி, அரசினர் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறார்]



**காலியாக வைத்திரு!**

முட்டாள்களையும் பொய்யர்களையும் நீ தெய்வங்கள் என்று கூறுவதைவிடக் கடவுளின் சிம்மாசனத்தைக் காலியாக வைத்திருப்பது நல்லது.

பெர்னார்ட்ஷா

# தமிழ் நினைவுகள்

லெ. இராமநாதன்.

இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர் விருந்தமிழ் தம் என்றாலும் வேண்டேன் என்றார் பழந் தமிழ்ப் புலவர் ஒருவர் தமிழ் நாட்டின் ஊனாய் உயிராய் உயிர் நாடியாய் எல்லாம் தானாகி நிற்பது தமிழ்மொழி மக்களுடைய வாழ்வோடு இரண்டறக் கலந்து நிற்பது: அது இப்போது ஆட்சிமொழியாகி அத்தாணி மண்டபத்தே வீற்றிருக்கிறது. சரித்திரம் அறிந்த சங்ககாலம் முதற்கொண்டே இற்றைக்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு முன்வரை தமிழே ஆட்சி மொழியாக இருந்து வந்திருக்கிறது. பரணி பாடித் தரணி ஆண்டிருக்கிறது. அந்த உயர் தனிச் செம்மொழி இடைப்பட்ட காலத்தே வேற்றவர் வரவாலும் வேற்று நாட்டார் ஆட்சியாலும் முதன்மை இழந்து மூலையில் இருந்தது. தன்னாட்சி பெற்ற இந்நாளில் தனக்குரிய இடத்தை எய்தியது.

மொழி வளர்த்த பெருமை இருபது ஆண்டுகளுக்கு முன்னரே நமது பள்ளிக்கு ஒரு தனிச் சிறப்புடைமையாகும். தமிழ் மொழிபயின்றன்றிப் பிற மொழிபயிலேன், தமிழில் வடமொழி பிற மொழி கலவேன் என்ற உயர்ந்த குறிக்கோளுடன் நிலையாகத் தொண்டு செய்தது. தமிழ் வாழ்க என்று கூறத் தடைவிதிக்கப் பட்டது. தமிழ் வாழ்க என்றால் மற்ற மொழிகள் எல்லாம் ஒழிகவா என்று கேட்கப்பட்டது. தமிழ் மொழி வாழ்க எனில் செத்தொழிக மற்ற மொழிகள் எல்லாம் என்று கருத்தா? எண்ணிப்பார் நன்றாக எந்த மொழியாகிடினும் இன்சுவை மிக்க தெனில் பைந்தமிழ் என்று எண்ணிப்படி என்று கூறி எந்தாய் வாழ்க என்றால் மாற்றாந்தாய் ஒழிக என்று பொருளா? என்று விளக்கம் சொல்லித் திருத்தப்பட்டது. மொழி அன்பின் காரணமாய் எழுகின்ற எழுச்சிகளை வேருடன் பிடுங்கி எறிந்து விடுவேன் என்று தலைமை பேசிய நேரத்தில் ஆணவம் அழியும் மொழி வெல்லும் என்று சொல்லி வெல்க தமிழ் என்று சொல்லி வெல்க தமிழ் என்று பொறிக்கப்பட்டது. பள்ளி நுழை வாயிலில் இமயத்தின் எல்லை கண்ட எந்தமிழ் என்றும் வாழ்க என்ற அழகிய சொற்றொடரை எழுதச் செய்தது. எங்கு போராம் எங்கு வெற்றி என்பார்க்கு எங்கள் அன்னை சிட்டாள் ஆச்சி இசைபரப்பும் பள்ளியைச் சென்று காண்மின் என்று அறைகூவல் விடப்பட்டது.

அன்று மொழித் துறையில் பேர் ஆர்வத்தை புகட்டிய பெருமை அண்ணல் பழனிவேல் அவர்களையும் அண்ணன் திருநாவுக்கரசு அவர்களையும் சார்ந்தது. அடிக்கடி பழகும் மாண்பில் அண்ண

ணுய் அமைந்து காட்டி பிடித்தநற் கொள்கைதனைப் பெட்புடன் செய லிற்காட்டும் குடிப்பிறப்புடைய அண்ணன் திருநாவுக்கரசு அவர்கள் தண்டமிற் கற்றதாலே தான் பெறும் இன்பம் தன்னை கண்டனூர் கலை மன்றத்தில் கற்போர்க் கெல்லாம் ஈந்து மண்டிணி உலகினில் துன்பம் வந்ததேல் அமைதி செய்ய ஒண்டமிழ்க் குறளைச் சொல்லி உயர்ந்து வாழ்ந்த பெருந்தகை. அன்பினில் அன்னையாய், ஆக்கத்தில் தந்தையாய் நடையுடையில் நண்பராய் அறிவினில் ஆசானுய் விளங்கியவர்கள் அண்ணால் பழனிவேல் அவர்கள் அறிவிற்குவேலாய் அன்பிற்குப் பழமாய் எங்கள் வளர்ச்சியில் களிப்பெய்தும் குணக் குன்று. எதிர்ப்புணர்ச்சி மூலமும் தடையுணர்ச்சி மூலமும் தமிழ் வளர்ச்சியைப் பரப்பிய பெருமை மறைந்த முன்நாள் தலைமை ஆசிரியர் அவர்களைச் சாரும். இந்த மூவருக்கும் இந்த நேரத்தில் நெஞ்சம் நிறைந்த நன்றியினை நித்தம் உரிமை செய்கின்ருேம்.

இழந்த பழம் பெருமை எய்தும் நேரம்—காரிருள் அகன்று கதிரவன் முகம் காட்டும் வேளை. விழிப்பாய் இருந்து மொழியைத் துறைதோறும் துறைதோறும் செழிப்பாக்க வேண்டுவது, செந்தமிழர் கடமை. தேவையான நூல் இல்லை என்று குறை கூறுவோர் குரல் அடங்கும்படி தேவைக்கு மேற்பட்ட நூல்களை ஆக்கித்தரவேண்டும் அறிஞர் பெருமக்கள். தமிழக அரசினர் செந்தமிழை அத்தாணி மண்டபத்தேற்றி நாட்டினரின் போற்றுதலையும் பாராட்டுதலையும் பெற்றனர். மக்கள் முகத்தில் மகிழ்ச்சியைத் தவழவிட்டனர். அவர்கள் பெரும் சிறப்புக்குரியவர்கள். நம் உளம் நிறைந்த நன்றி யையும் வாழ்த்தையும் ஆட்சியினருக்குத் தெரிவித்துக் கொள்கி ருேம்.

அனல் வாதம் புனல் வாதம் இவற்றில் வென்று அசை யாமல் அழியாமல் இருப்பது அருந் தமிழ் என்று சமயக்கதைகள் கூறும். அத்தமிழ்கூட நமது பள்ளியில் தலைமையின் ஆணவத் தால் மூலையில் ஒதுங்கியது சில காலம் இக் காலை மீட்டும் பழைய நிலை எய்தி உள்ளது.

கொலு மண்டபத்தே வீற்றிருக்கும் குறுந்தொடியை "ஆள் வாய் இன்.அகன் மாநிலத்தை" என வாழ்த்துகிருேம். அல்லல் பல கடந்து இன்னல்களைந்து அரசு எய்தியிருக்கிருய். தண்டமிழ் மகளே! தமிழர் தம்வாழ்வே! இனி என்றும் நின்கொற்றம் சிறக்க! நின்கொடிபறந்து நீள்புவியை ஆள்க! ஈடு இணையில்லா நின் மொழித் தொண்டு வெல்க! வாழ்க பல்லாண்டு வளம் பல புரந்து என்று பாராள வந்த பைந்தமிழ் மூதாட்டிக்கு பாருலகில் முதல் தாய் மொழிக்குப் பல்லாண்டு கூறுகிருேம். நமது பள்ளிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு என்பதைப் புலப் படுத்துவான் வேண்டி இப்பள்ளியில் ஒவ்வொரு வகுப்பிலும் ஆண்டு தோறும் தமிழில் முதன்மையாகத் தேர்ச்சி பெறும் மாணவ, மாண வியருக்கு இந்நகர் பெருந்திருவினர், சி. ரா. கருப்பன் செட்டியார் B.A. அவர்கள் தன் தந்தையார் சி. ராம. இராமநாதன் செட்டியார் நினை

வாக சி. ராம. இராமநாதன் செட்டியார் நினைவுத் திருக்குறள் பரிசு என்ற பெயரால் பரிசுகள் வழங்கி வருகிறார்கள். இவர்களது கொடை நெஞ்சம் வாழ்க என உளமார வாழ்த்துகிறோம்.

மொழி வளர்த்து, கலை வளர்த்து, நம்மை நன் முறையில் உருவாக்கி வளர்த்த நமது பள்ளி நாளும் வளர்ந்து நலம் பல செய்ய வேண்டும். நமது பள்ளியைத் தோற்றுவித்த அண்ணல், கல்லை மண்ணைக் கலையாக்கி கண்டனூரை எழிலாக்கி அள்ளிக் கொடுத்த நமது பல்கலை வள்ளல், தோன்றலிற் சிறந்த தோன்றல், தூய்மை சேர் வாய்மை மிக்கோன். சான்றவர் புகழும் மேலோன், தமிழ்நலம் பழுத்த செல்வன், ஈன்றதன் அன்னை பெயரால் இளையவர் பயில வேண்டி ஆன்றவர் புகழும் வண்ணம் அருங் கலைக் கழகம் கண்ட நமது அதிபர் வீ. தெ. வீர. அவர்கள் எல்லா வளமும் இனிதுறப் பெற்று, நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் பெற்று தமிழ்ப் பெருமகனாக நெடிதுநாள் இனிது வாழ எல்லாம் வல்ல இறைவனை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கி வழிபடுகின்றோம்.

ஒன்றித் தமிழர் வாழ்க
உரிமை காசு சூழ்க
என்றும்நம் தமிழ் ஏற்றவர் வாழ்க!
வாழ்கநம் அன்னை பள்ளி!

[கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவர். பள்ளியின் பழைய மாணவர் கழகச் செயலாளர்]




**உயர்த்துக உயருக!**

பெண்ணின் நிலை உயரும் போது ஆணின் நிலையும் உயரும். ஒவ்வொருவரின் நிலையும் உயரும்போது மனித சமுதாயத்தின் நிலையும் உயர்வடையும்

காந்தியடிகள்

# அறிவாலயம் எழுப்பிய அண்ணல்

*வீர. சுப்பிரமணியன் பி. காம்.*

உலகில் வள்ளல்கள் பல வகையினர். செய்தித் தாளில் பெயர் வருவதற்காகப் பிச்சையிடும் பெரிய மனிதர்கள், கொடுக்கும் பொருளைக் குறைபடக்கொடுக்கல் வாங்கல் பேர்வழிகள், பொருள் கொடுக்கிறேன் என்று அறிவித்து விட்டுக் கணக்குக் கொடுக்கும் புளுகர்கள், இம்மைக்குச் செய்தது மறுமைக்கு ஆம் என்று கருதி அறவிலை வணிகம் புரியும் கொடை வணிகர், இம்மைக்குச் செய்தது இம்மையிலேயே பலன் அளிக்க வேண்டும் என்றெண்ணி அறப்பணி புரியும் அவசரக்காரர் இப்படியாக இவர்களை வகை தொகைப் படுத்தலாம். உண்மையில் இவர்கள் வள்ளல்கள் அல்லர். புகழ் வேட்கை, புண்ணிய வேட்கை என்னும் நோய் களால் பிடிக்கப்பட்டவர்கள். சொல்லால், செயலால் அன்றிப் பொருளால், கைம்மாறு எதுவும் கருதாது வாடிய பயிரின் வாட்டத் தைப் போக்கி மகிழ்வதே உண்மையான கொடையாகும். கண்டனூரிலும் அடுத்திருக்கும் அண்மைப் பகுதிகளிலும் பிள்ளைகள் படிக்கப்பாங்குறு பள்ளி ஒன்று இல்லையே என நொந்த உள்ளங் களின் உறுதுயர் போக்கி உவகை அளித்தவர் வீ. தெ. அவர்கள். அவர், உண்மையான வள்ளன்மை என்னும் உயர் குணத்து அதிபர்.

கண்டனூரில் ஆலயங்கள் பல உண்டு. முப்புரம் எரித்த முக்கண்ணனுக்கு ஊரின் மையத்தே ஆலயம். அருகிலேயே அன்னை செல்லாயிக்கு ஆலயம், எதிரே கந்தருக்கு முன் பிறந்த கணபதிக்கு ஆலயம், பாற்கடலின் நடுவில் பள்ளி கொண்டருக்கும் பரந்தாமனுக்கு ஊரின் கோடியில் ஆலயம் இப்படிப் பல ஆலயங்களைக் கண்ட நான், கலைமகளுக்கு மட்டும் ஆலயம் இல்லையே என மயங்கினேன் "அட அறிவிலியே! அதோ பார்! சிட்டாள் ஆச்சி நினைவுப்பள்ளிகள் உன் கண்களை ஈர்த்துக் கருத் தைத் கவரவில்லையா? வெள்ளைத்தாமரைப் பூவினில் வீற்று, வீணை செய்யும் நாதத்தில் இருக்கும் கலைவாணிக்கு அவையே உண்மை யான ஆலயங்கள்" என எங்கிருந்தோ ஒரு குரல் ஒலித்தது. "ஆம்! ஆம்!" என நானும் எதிரொலித்தேன்; சென்றேன்; அறிந்தேன்; தேர்ந்தேன்; கலைமகளின் அருளுக்கு பாத்திரமானேன். நவராத்திரி-யின் பொழுது மற்றவர்கள் செய்வது உண்மையான கலைமகள் வழிபாடு அன்று. உள்ளத் தூய்மையுடன் வீ. தெ. அவர்கள் செய் திருப்பதே உண்மையான கலைமகள் வழிபாடு. அவர், அறிவாலயம் எழுப்பிய அண்ணல்.

பள்ளிக் கட்டிடத்தின் உறுதியையும் எழிலேயும் காண்மின்! ஏழையின் குடிலாக அன்றிச் செல்வரின் மாளிகையாகச் செம்மாந்து நிற்கிறது. ஏழை, செல்வர் என்ற பேதம் நீக்கி அனுமதி தந்து ஜனநாயக சோஷலிஸவாதியாகக் காட்சி தருகிறது. புகை வண்டியின் ஓட்டத்தால் கட்டிடம் அதிர்ந்து குலுங்கியது. அடுத்து இடிந்து விழுந்தது. அதன் விளைவால் இறந்தவரின் எண்ணிக்கை இவ்வளவு என்று செய்தித்தாள்களுக்குப் புள்ளி விபரம் கொடுக்கும் அவலம் இங்கே இல்லை. பள்ளிக்குச் செல்வோர் மீள்வாரோ? அன்றி மாள்வாரோ? என்று கலங்கிய மதுரை நகரப் பெற்றோரின் அச்சத்திற்கு இங்கே வேலை இல்லை.

"அழகுப் பொருள் அழியா இன்பம்" என்றான் ஆங்கிலக் கவிஞன் கீட்ஸ் ('A thing of beauty is a joy for ever') அது போன்று கல்விக் கூடமும் கவின் மிகு காட்சி நல்குகிறது. பள்ளியின் நீண்டு அகன்ற முகப்பையும், நெடிதுயர்ந்த கட்டிடத்தின் வகுப்பறைகளையும், இறைவழிபாடு நடக்கும் இடத்தையும், பரந்து விரிந்த விளையாட்டுத் திடலையும் பார்க்கும் பழைய மாணவர் எவர்க்கும் இன்ப நினைவுகள் திரும்பிவரும். "நான் பிறந்த பூமி" என்று பாரதியார், மண்ணில் களிவெறி கொண்டு புரண்டது போல், பழைய மாணவர்களைப் பாசப் பிடிப்பும் நேச உணர்வும் பற்றிக்கொள்ளும்.

"இத்தகைய பள்ளிக் கட்டிடத்தை நான் தமிழகத்தில் இது வரை பார்த்ததில்லை" என்று தமிழகக் கல்வி இயக்குநர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் வியந்து கூறியிருக்கிறார். அந்த வியப்புரையில் பள்ளியின் வலிவும் பொலிவும் உறுதி செய்யப்படுகின்றன. இந்தப் பெருமையின் அடிப்படை என்ன? கல்விக் கூடத்தைக் கட்ட எண்ணிய வீ. தெ. அவர்கள், கடனுக்கு அதைச் செய்யவில்லை; ஊரிடம் ஒப்புக்கொண்டு, பெயருக்குச் செயலாற்றவில்லை; செய்ய எண்ணியதைச் செம்மையாகச் செய்தார்; ஆற்றிடு பணியை அற்புதப் பொலிவுடன் நிறைவேற்றினார். வலிவும் வனப்பும் மிகுந்த பள்ளி உருவாக வேண்டும் என்று கனவு கண்டார். நனவாக்கிக் காட்டினார். அவர், எண்ணிய எண்ணியாங்கு எய்தும் திண்ணிய மனத்தினர்.

அன்ன சத்திரம் ஆயிரம் கட்டல் ஆலயம் பதினாயிரம் நாட்டல் அன்ன யாவினும் பெரிதாம் ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் என்பது மகா கவியின் வாக்கு. ஏழை ஒருவனுக்கு எழுத்தறிவித்தலே தலையாய அறம் என்று கருதிய வீ. தெ. அவர்கள், எண்ணற்ற ஏழைகளின் கண்ணெனத் தகும் எண்ணும் எழுத்தும் கற்பிக்கக் கல்விக் கூடம் நிறுவினார். அவர், பாரதியின் பாட்டுடைத் தலைவர்.

வீ. தெ. அவர்களின் இல்லத்தின் எதிரே இருக்கும் கோயிலில் குடி கொண்டிருக்கும் பிள்ளையாருக்குச் 'சுழி' இட்ட பின்னரே எந்த ஒரு காரியத்தையும் துவக்குவது நம்மவர் மரபு. அது போன்று

பிள்ளைகளின் கல்வி வாழ்க்கையையும் துவக்கி வைத்தார் வீ. தெ. அவர்கள். அவரின் இல்லத்தின் எதிரே இருக்கும் ஊருணி நீர் கோடையில் குறையும்; மாரியில் நிறையும். ஆனால் அவரின் வள்ளன்மை என்னும் பெருங் கடல் என்றும் வற்றாது.

இத்தகு சால்புடையவர் வீ. தெ. அவர்கள். மணிவிழாக் கண்ட அதிபர் பள்ளியின் வெள்ளி விழாவைக் காணும் இந்த நல்ல நாளில், பள்ளியின் மணி விழாவையும் அவர்காண அருள் புரியுமாறு அருட் பெருஞ் சோதியின் தனிப் பெருங் கருணையை வேண்டுகிறேன்.

[கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவர்; இப்பொழுது கும்பகோணத்திற் பணியாற்றி வருகிறார்.]



## குறள் நெறி

ஆதி பகவன் முதற்றே உலகு.

வானின்று அமையாது ஒழுக்கு.

செயற்கரிய செய்வார் பெரியர்.

அந்தணர் என்போர் அறவோர்.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்.

# Chittal Achi Memorial High School
## KANDANUR

### A BUSINESS MAGNATE'S DEVOTION TO HIS MOTHER

[By: The First Headmaster **S. Narayana Iyer,** M. A. L T.]

It was a bright May morning in 1942. I had just returned to India as an evacuee from Rangoon. Shri V. T. Veerappa Chettiar, Banker, Kandanur had invited me for an interview with the aim of discussing some educational developments which he wanted to bring in to Kandanur. I accepted the invitation, wondering in my mind how an astute businessman like Shri. V. T. V. could take interest in education.

As soon as I entered the portals of his bungalow, Shri. V. T. V. rose from his seat and greeted me with a smile. I began with the historic old enquiry in a rather funny way "Shri. V. T. V., I presume" "Yes" he said, "And you?" "S. Narayana Iyer of Rangoon." "Welcome, Sir," he said with a smile. I was struck by the candour and child like simplicity in his face. We took our seats and Shri. V. T. V. ordered tender coconuts.

The repast being over, we began to talk about the business which Shri. V. T. V. had in mind. "Sir," said Shri. V. T. V. "I have some funds which I mean to set apart to perpetuate the memory of my revered mother Shrimathi Chittal Achi. She was a dear old soul and I am her only son. Of course there are many ways of establishing her memory, but they say that education is the best of charities, and if I could have an institution free from departmental shackles, an institution in which Education and culture could be combined, nothing could please me so much. Every boy leaving the school should be able to earn a living for himself. He should take a pleasure in developing his mother tongue, Tamil and at the same time not lose international contact and so master the English language." I could see the divinity in Shri V. T. V. and the ardour and force in his ideals. I said, "Gladly, Sir, we shall together establish an instituition where these ideals could be developed" "Sir, I don't mind the cost, but Shrimathi Chittal Achi's memory should inspire the pupils of this

instituition to become ideal citizens and contribute their efforts, so that we Indians could take an honoured place among the powerful nations of the world. The II world war is on, and this is the time to strike." The words were powerful and deep and they formed the basis for the creation of the Chittal Achi Memorial High School, which is now one of the best schools in the district.

But the task was not easy. There is a saying in Sanskrit "Sraeyamoi, Bahuvignani" meaning great achievments present great obstacles. But the obstacles were overcome and the High School today is the articulate expression of an illustrious son's love and respect for his mother.

Three hurdles had to be overcome The first related to the building - the foundation stone had been laid by Raja Sir Annamalai Chettiar and the building had proceeded considerably without attention to some of the departmental regulations. It was a shock to us that about the end of November 1942, we received an order from the D. E. O. directing us to stop all further construction. We were literally in a fix. The tune of about a lakh of rupees had already been spent and how could we stop the work now? But Shri V. T. V. has many friends all over Chettinad, and by proper representation the order was revoked. Next came the hurdle relating to the strength of the school. The nearby localities Karaikudi and Pallathur have each a high school. The correspondents feared that the new school in Kandanur might deplete their strength. Shri V. T. V. personally went to the correspondents. Because of their great regard for him each of them gave a declaration to the effect that they had objection to the raising of a high school in Kandanur. The last stage had now been reached. The Raja of Chettinad was requested by us to approach the D. P. I. personally and get the permission to open the high school. I was glad to be with him when he spoke very strongly to the then D. P. I., Sir R. N. Statham. At the end of half-an-hour's discussion, Sir R. N. Statham said that he would give the permission if Shri V. T. V. would not press for grant at the end of the first year. The Raja agreed and we both came out of the D. P. I's Office. I wrote from Madras to Shri V. T. V. and the latter immediately sent in the declaration by return of post. I handed the declaration to the D. P. I., Sir R. N. Statham Called the Deputy Director Mr. T. N. Surianarayanan and asked him to put up the papers. I returned to Kandanur.

March was over and still no permission was in sight. The people of Kandanur were getting restive and Shri V. T. V. was getting bitterly disappointed. He requested me to go to Madras and get a final reply from the D. P. I. On the second of April 1943. I packed my things in Kandanur and got ready to start for the station and board the train for Madras. I had just got into our car at 11 A. M. when the postman handed over a long cover to me. I broke it open. It was the order from Sir R. N. Statham permitting Shri. V. T. V. to open a high shool from Class V to form IV.

Our dream had come true. We sat back on our seats and heaved a sigh of relief.

The rest of the story is soon told. News spread from mouth to mouth and by the evening of 2nd April 1943. Shri V. T. V's office was flooded with letters of congratutation. Prominent persons of Kandanur called on him and the business magnate felt very happy indeed.

On June 13, 1943, the school was formally opened. We formed a small procession and entered the compound led by Mrs V. T. V. with the pitcher of holy water. She went up the steps and opened the door into the Great Hall. About 300 students sang the prayer. Good humour, cheerfulness, a little pride and a sense of triumph rained in the hearts of all. But the happiest person in that crowd was Shri V. T. V. himself. At every turn he would tell me that the greatness of the school. should not stop with the greatness of the building. Individual attention, efficient coaching and above all, precept, he said, should be the keynotes in the institiution.

I have not much more to add. The appointment of teachers, the opening of various sections are all matters of routire. Shri M. R. Sundaresan, I have pleasure to state, was among the very early set of teachers.

A few words more and I have done. The Raja of Chettinad founded a scholarship. Shri R. M. Alagappa Chettiar who visited the school donated substantially to the equipping of the library. Shri V. T. V. was not a willing receipient of these small helps. His own funds and exertions would be ample, he said, but he had to accept helps of this nature.

One incident in the first year desrves mention. We wanted to celebrate the Sports Day and we were discussing as to who should preside and give away the prizes. While this way going on, a group of boys had gathered round us. They requested that their wishes should be consulted. When asked what their wishes were, we were stunned by the response. With one accord they shouted, "We want to receive our prizes from Shri V. T. V. himself." Shri V.T.V. could not in all fairness refuse this request. timidly he gave his consent.

It was a gala day indeed, when after the sports were over Shri V. T. V. with a few words of advice to the pupils, gave away the prizes. Shouts and ovations rent the air. The year had ended with the happiest event.

'Let knowledge grow from more to more and more of reverence is us dwell'



Great literature appeals not to reason bud to spiritual perception. It is not an argument but a spell, an incantaton. It is not the criticism of life but the transforming of it

-Dr. S. Radhakrishnan.

# HIGH SCHOOL - A STEPPING STONE.

***Dr. K. NAGAPPAN,***

**Professor & Head of the Department of Electrical Engineering. Thiagarajar College of Engineering, MADURAI-15.**

I am proud of being an alumnus of Chittal Achi Memorial High School, Kandanoor. It is a proud previlege and a great honour to me for having been requested to send an article to be published in the Silver Jubilee Souvenir of my Alma Mater.

High School is an institution which trains and shapes everyone when he faces the world outside his home. The period through which one studies in a high school is the correct time whem he needs a proper training to organize his thinking, to learn the requisite basic knowledge, to develop his aptitude and to decide what he would be doing after his studies in the High School. Therefore the environments in the High School have to be conducive to trim the students so as to make them better citizens of tomorrow. Physical facilities in the school attract better students, while good teachers train them to be valuable persons in the society. This objective is rightly fulfilled when the schools are free from certain undesirable factors like Political intervention, which is hardly found in the present days.

I do not hesitate to say that my schooling days at Chittal Achi Memorial High School have been valuable because those days were purely spent for development of aptitude and the learning process. Thanks to the teachers of the School who have kept up the good tradition for twenty five long years.

I always Cherish the memorable days spent at Chittal Achi Memorial High School with good teachers who have been responsible for my present status. Many of my Contemporaries at C, A. M. High School will share with my expression that our Alma Mater has been the best stepping stone to all the alumni in every walk of life. I take this opportunity to convey my kind regards to the management, Headmaster and my beloved teachers and my best wishes to all my breth'ren in the school. I am sure Chittal Achi Memorial High School will do its share of bringing up more valuable citizens in the society in the years to come.



# MY REMINISCENCES

S. RAJAGOPAL

**Headmaster, Shri Nehru Vedhalaya,**
**R S. Puram, Coimbatore-2.**

It gives me no small amount of joy to learn that the Chittal Achi Memorial High School, Kandanoor is celebrating the Silver Jubilee and publishing a Souvenir. When my esteemed friend and present Headmaster Shri M. R. Sundaresan, B. A, L. T., wrote to me to send him an article, I turned to the page of my dia.y relating to the period of my stay at Kandanoor.

When I attempt to recount my reminiscences I cannot but dip the pen in my own blood and I hope the readers will bear with me for being autobiographical.

It my seem a riddle to some, why I chose to join the C. A M. High School after resigning a post after 18 years of service in a High School in my own native place. The reasons were twofold. Firstly, the presence of the late Sri S. Raghavachari, M A, L.T, whom I knew from his childhood attracted me to Kandanoor. A word about him may not be out of place here. Mr. Raghavachari had imbibed the ideals of Shri Ramakrishna and Vivekananda and can be compared only to Dr. Paranjapaye of the Furguson College, Poona and to the Silvertongued orator, Rt. Hon'ble V. S. Srinivasa Sastri for his erudition and oratory.

In this connection, I with to mention an incident that happened at the time of the opening ceremony of the palatial building of the school by the then Director of Public Instruction Dr. Savur. When Mr. Raghavachari finished his speech, Mr Nateraja Iyer, Advocate, Pudukkottah, remarked as follows: "Mr. Raghavachari, while you were addressing, I felt I was in the midst of Englishmen in England I wish you had continued for some more time". The talents of Mr. Raghavachari are too well-known to the people ofChettinad and it needs no more expatiation from me.

On another occasion I was asked to go ro Ramanathapuram to escort Janab Kayum, the then District Educational Officer, to Kandanoor to preside over a school day function. While we were travelling together he told me that Mr. Raghavachari had built a tradition for the school in 4 years which could not be built up. in 4 decades. The uphill work of laying the proper foundation for a good school in such rural area fell to the lot of Shri Rrghavachari who was lucky in having a team of very able and loyal assistants. The discipline and the level of efficiency of the school were, no doubt, of a high order. It was also the consensus of opinion of many enlightened gentlemen that boys from Devakottai, Pallathur and other places chose to stay in the hostel and study in the C. A. M. H.

School, bears testimony to the fame and popularity of the school during his reglme. It will be no exaggeration when I say that it would be easy to pick out a C. A. M High Scoool boy by his manners and behaviour from among a Jamboree of students.

I cannot resist the temptation of mentioning the other lever that acted on me to take up the job ln this school. It is none other than the vetaran Headmaster of Karaikudi High School, the late N. S Venkatarama Iyer, M. A., L. T, who was then the adviser to the Correspondent of the C. A. M. High School. His laudable aim was to get only able and experienced teachers for a newly started school. In that mission, he visi ed my native place and asked the Headmaster of the school where I was then serving, to send one proved and experienced teacher from his school The Headmater sent for me and asked me if I would accept Mr. N. S. Venkataramayer's offer. Mr. N S. V, Iyer and my friends pointed such a rosy picture of tne benefits that I could enjoy at Kandanur that I not only aecepted the offer but resigned my permanent job at once.

On coming to Kandanur I met the revered Corsespondent, Sri V. T. Veerappa Chettiar who accosted me with a sweet smile and assured me of all his patronage and encouragement. I must admit that I have always remembered the few years I spent at Kandanur as one of the happiest periods of my life. For it was at Kandanur that I celebrated my fiirt daughter's marriage on a grnd scale. I feel I cannot find words to thank adequately Sri V. T. Veerappa Chettiar and the Headmaster and my colleagues for their invaluable help during the conduct of the marriage.

The Inter-District Oratorical Contests and the happy evenings we spent on the badminton and playing field and the caravan trips we made to the neighbouring villages in bullock carts to attend the marriages of our students come before my mlnd's eye.

I cannot also forget the friends like Mr. V. E. R. M. Kasiviswanathan Chettiar, Mr. Mrthu Iyengar, Dr. Aklu and the students like K. Ramanathan, CT. Chidambaram and others of Kancanor.

I hope that under the fostering cire of the correspondent the present Headmarter and his assistants the sceool will grow from strength to strength.

I wish the function all success.



"The stony of man is for more wonderfal than the wonders of physical science. It is a mystery unsslved, fet is solid faCt."

-G. M. Trevelyan.

# வஞ்சினம்

மு. பழனிவேல்
முன்னாள் தமிழாசிரியர்,
சிட்டாளாச்சி உயர்நிலைப் பள்ளி, கண்டனூர்

மக்களின் உயர்வும் தாழ்வும் அவரவர் உள்ளத்தால் அமைவன.

"வெள்ளத் தனைய மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு"

ஊக்கமே ஒருவனது உயர்ந்த செல்வம். ஏனைய செல்வம் நில்லாது நீங்குந்தன்மையது. இத்தகைய உள்ளம் பண்டைத் தமிழ் மக்களிடம் நிலைபெற்றிருந்தது. அதனால்

உரம்ஒருவற் குள்ள வெறுக்கை; அஃதிலார்
மரம்மக்க ளாதலே வேறு.

என்று தெள்ளத் தெளிய வள்ளுவர் எடுத்துரைத்துள்ளார். ஊக்கமுடையார் ஒருநாளும் தாழ்வடையார். காலமும் இடமும் கருத்திற் கொண்டு, வினைவலியும், தன்வலியும், மாற்றான் வலியும், துணை வலியும் துணிந்தாய்ந்து தெளிந்த அறிவுடன் செயற்படுவர். எண்ணிய எண்ணியாங்கு செய்து முடிப்பர். தடையுற்றக்கால் தம்மை எதிர்ப்பவர் யாவராயினும் அஞ்சாது அயராது ஆண்மையுடன் சபதம் செய்வார்கள். அதனை வஞ்சினம் என்பர்.

இச்செயலை இன்னவாறு செய்து முடிக்க வல்லேனாயின், இன்னேன் ஆகுக! இன்னின்ன பாவம் செய்தேனாகுக! என்று வஞ்சினம் மொழிவர். அவ்வாறு வஞ்சினம் மொழிவோர் தாம் உயிரெனக் கருதும் உயர்ந்தோர், அன்பு மனைவியர், ஆளும் நாடு, அருமை நீதிமுறைகள் ஆகியவற்றின் மீது ஆணையிட்டு வஞ்சினம் மொழிவர். இதனைத் தொல்காப்பியர்

இன்னது பிழைப்பின் இதுவாகி யரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்

என்று கூறியுள்ளார். இத்தகைய வஞ்சினப் பாடல்கள் சங்க இலக்கியங்களிலும், ஐம்பெருங் காப்பியங்களிலும் பாரதம், இராமாயணங்களிலும் ஆங்காங்கு மின்னி மிளிர்கின்றன. அவை கற்போர் நெஞ்சைப் பெரிதும் கவர்வன. சான்றாகச் சில காண்போம்.

பண்டைத் தமிழ்மன்னர்கள் காதலையும் வீரத்தையும் கண்ணெனப் போற்றினர். எதிர்த்த பகைவரை வஞ்சியாது எதிர் நின்று வெல்லும் ஆற்றலையும், விழுப்புண் படுதலையும் விழுமிதாக் கருதினர். பகைவர் தம்மை இகழ்ந்த காலத்து அடலேறெனச் சினந்து வஞ்சினங் கூறி வென்றனர். அத்தகைய மன்னருள் மதுரையை ஆண்ட ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனும் ஒருவனா வான். சோழ நாட்டில் இன்று ஒளிய மங்கலம் என வழங்கும் ஒல்லை யூரை வென்றதால் இவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் எனப் பெயர் பெற்றான். கவியரங்கேறிய பாண்டிய மன்னருள் இவனும் ஒருவன். இவன் மனைவி கோப்பெருந்தேவியும் நல்லிசைப் புலமை மிக்கவள். இவர்களிருவரும் ஒருவரை யொருவர் உயிராகப் பேணிக் காதலிக்கும் தன்மையர். அதனால் இவன் இறந்ததும் இவன் மனைவி துயர் பொறுது தீப்பாய்ந்து உயிர் நீத்தாள்.

இத்தகைய இயல்பு வாய்ந்த பூதப்பாண்டியனுக்கும், சேர, சோழ வேந்தர்களுக்கும் பகைமை உண்டாயிற்று. அது காரணமாக அவ்விருவரும் ஒருங்கு கூடி இவனோடு பொருதுதற்கு வந்தனர். அதனையறிந்ததும் சிங்கமெனச் சினந்து, அவரை அமரில் அலரத் தாக்கி அவர்களை வெல்லேனாயின் "சிறந்த பேரமர் உண்கண் இவளினும் பிரிக!"

" நீதி மன்றத்தில் கொடியோன் ஒருவனை வைத்து முறை கலங்கச் செய்த கொடுங்கோலேனாகுக!"

" உயிரினும் சிறந்த ஒப்பற்ற என் நண்பர்களாகிய மாவன், ஆந்தை, அந்துவன்சாத்தன், ஆதன் அழிசி, இயக்கன் உட்பட ஏனைய பிறருமாகிய என் கண்போல் நண்பர்களின் இன்களிமகிழ் நகையை இழந்தேனாகுக!"

"பாண்டிய நாட்டைக் காக்கும் அரசர் குலத்தினின்றும் நீங்கி பகைவரின் வன்புலங்களைக் காவல் காக்கும் குடியில் பிறப் பேனாகுக!" என்று நான்கு விதமாகச் சூளுரைத்தான்.

இச்சூளுரைகளால் காதல் மனைவியைப் பிரிவதும், கடமை யாகிய அறம் தவறுவதும், கண்போன்ற நண்பரை இழப்பதும், தன்னாட்டு அரசர்குடியிற் பிறவாமையையும் எத்துணைப் பழியாகக் கருதினான் பாண்டியன் என்பதை நாம் ஓர்ந்துணர வேண்டும். இவை அவனது தனி வாழ்க்கை பற்றிய மான உணர்வாகும்.

இனிப் பொது வாழ்வு பற்றிய வஞ்சினம் ஒன்றை அறிவோம்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் மிக்க இளை ஞனாயிருந்தபோது முடி சூடப்பெற்றான். அப்போது அவன் இளமை கருதி எள்ளி, சிற்றரசரும் பேரரசருமாகிய எழுவர் அவன்மீது போர் தொடுத்தனர். தலையாலங்கானம் என்னும் இடத்தே பெரும்

போர் நடந்தது. அதில் வெற்றி பெற்றதால் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்று சிறப்பிக்கப்பட்டான்.

அப்போரில் அவன் கூறிய வஞ்சினம் கேட்போர் கோழை யாயினும் வீரங்கொள்வர். கூனிக் குறுகி நடப்பவனும் குன்றென நிமிர்ந்து நடப்பான்.

என்னை இளையன் என்று உள்ளம் உளையக்கூறி எனது வலிமைகண்டு அஞ்சாமல் சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தர் எழுவரையும் முரசமொடு ஒரு சேரச் சிறைப்படுத்தேனாயின்.

என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியன் எம்மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலே னாகுக!
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாகப்
புலவர் பாடாது வரைக என்நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மை யானுறவே புறம்–72

என்று சூளுரைத்துப் போரிட்டு வென்றான்.

இதன்கண் குடிபழி தூற்றும் கொடுங்கோன்மையும், புலவர் பாடும் புகழ் பெருமையும், இரவலர்க்கீயாமையும், பொது வாழ்வில் ஒரு வேந்தனை எத்துணைக்கீழ்மைப் படுத்துவன என்ற உணர்வு இவன் உள்ளத்தே ஊறி நிற்பதைக் காணலாம்.

இத்தகைய உணர்வு அன்றைய முடியரசர்களுக்கு இயல் பாக இருந்தது. இத்தகைய தன்மான உணர்வும், நாட்டுப்பற்றும் தலைவர்களுக்கும், அமைச்சர்களுக்கும் இருந்தால் நாடு எவ்வளவோ பயன் பெறும்.

இனி ஒழுக்க நெறியின்மீது கூறிய வஞ்சினம் ஒன்று காண்போம்.

சோழன் நலங்கிள்ளிக்கும் காரியாற்றுத் துஞ்சிய நெடுங் கிள்ளிக்கும் பகைமை உண்டாயிற்று. நெடுங்கிள்ளி நலங்கிள்ளியை இகழ்ந்து பேசி சினமூட்டினான். நலங்கிள்ளியும் அதனைப் பொறுக் காது போருக்கெழுந்தான். அப்போது அவன் ஆட்சியைக் கைப் பற்றுதல் இந்நெடுங்கிள்ளிக்குக் கருத்தாயின் மெல்ல வந்து என் நல்லடி பொருந்தி ஈயென இரந்தால் முரசுகெழு தாயத்து அரசு மட்டுமின்றி என் உயிரையும் தருவேன். அவ்வாறின்றி என் உள்ளத்தை எள்ளிய மடவோன் போர் தொடுத்தால் தூங்குகின்ற புலியின்மீது இடறி வீழ்ந்த குருடன் போலப் பிழைத்துப் போக

முடியாது வறிதே மடிவான், இதுஉறுதி. எனவே இவன் உய்ந்து போதல் கூடாதென நெஞ்சார நினைந்து வஞ்சினம் கூறுகின்ருன் நலங்கிள்ளி.

நெடுங்கிள்ளியை இப்போரில் வருந்தப் பொரேனுயின் என் மார்பிலணிந்த மலர்மாலை காதல்கொள்ளாத பொதுமகளிரின் பொருந்தா முயக்கத்தால் குழைவதாகுக! என்று வஞ்சினம் கூறினுன். இதில் பொதுமகளிரை உயர்ந்தோர் கூடார் என்ற ஒழுக்க நெறியின்மீது அரசன் ஆணையிட்டுக் கூறியது அனைவர்க்கும் நல்லதொரு படிப்பினையாகும்.

பரத்தையற் பிரிவு பண்டைய இலக்கியத்திற் காணப்படுவதாயினும் அது கடிந்து வெறுக்கத் தக்கது என்பதை இச்சூளுரை நமக்கு உணர்த்துகிறது. வள்ளுவரும்

> இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
> திருநீக்கப் பட்டார் தொடர்பு.

என்று கூறி, வரைவில் மகளிர் என்ற ஓர் அதிகாரமே வகுத்தார். எனவே இவனது வஞ்சினத்தால் ஒழுக்கத்தின் விழுப்பம் புலனுகிறது.

இனி சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் கூறும் வஞ்சினத்தையும் காண்போம்.

கண்ணகிக்குச் சிலை யெடுப்பதற்கு செங்குட்டுவன் அமைச்சர்களுடன் கலந்து சிந்தித்தான். பொதிய மலையில் கல்லெடுத்து காவிரியில் நீர்ப்படை செய்வது மறத்தகை மன்னராம் எம் சேரர் குடிக்குச் சிறப்பன்று. இமயத்தில் கல்லெடுத்து கங்கையில் நீராட்டுதலே தக்க சிறப்புடைத்தெனத் துணிந்தான்.

நாம் செல்லும் முயற்சிக்கு இடையூருகப் பெருமலையனும் ஆரிய அரசன் மாபெரும் பத்தினிக்குக் கடவுள் எழுத ஓர்கல்தாரான் எனில் அம்மலையிலுள்ள காஞ்சி மரங்களைக் கட்டோடு அழித்து, இமயமும் அதன் அரசனும் என்றென்றும் காஞ்சிப் பூவைச் சூடாதொழித்து அக்காஞ்சியை யானே சூடுவன். மேலும் இமய உச்சியில் மலர்ந்த மந்தாரத்துடன் அதன் அருகே மலர்ந்த வேங்கையொடும் தொடுத்த விளக்கமிக்க வெற்றிமாலை சூடுதலையும் இவ்விடத்தே காண்பேனுகுக! என்று கடுஞ்சூளுரைத்தான். அதனை

> தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை
> நின்றெதி ரூன்றிய நீள்பெருங் காஞ்சியும்
> நிலவுக் கதிரளைந்த நீள்பெருஞ் சென்னி
> அலர்மந் தாரமொடு ஆங்கயல் மலர்ந்த
> வேங்கை யொடுதொடுத்த விளங்கு விறல்மாலை
> மேம்பட மலைதலும் காண்குவம் ஈங்கென

சிலம்பு: காட்சிக்காதை.

என்ற சிலம்படிகளால் காணலாம். இதனால் செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலையெடுப்பதில் கொண்டிருந்த ஆர்வமும், தன் கொள்கைக்கு மாருக இமயமே எதிர்த்தாலும் அதனைச் சாடி அழிப்பேன் என்ற அவனது உள்ளத்துறுதியும், உயர்ந்த தன்னம்பிக்கையும் நமக்குப் புலனாகிறது.

இனி பாரதத்தில் வரும் வஞ்சினத்தைக் காண்போம்.

பாரத இராமாயணக்கதை தெரியாதார் பாரதத்தில் யாருமிரார். பாரதத்தில் கர்ணன், அபிமன்யூ இருவரின் வீரத்தைப் படிக்கும்போது எத்தகைய கல்நெஞ்சனும் கரைந்துருகுவான். அவர்கள் பண்பியல்புகண்டு பாராட்டுவான். பதின்மூன்றும் நாட்போரில் அருச்சுனன் மகன் அபிமன்யூவைச் சிந்து நாட்டரசனாகிய சயத்திரதன் கொன்ருன். அதையறிந்த அருச்சுனன் ஆருத்துயரமும் பகைவனிடம் அடங்காச் சினமும் கொண்டான்.

மைந்தனே! பகைவரை வென்று பார் எனக்களிப்பாய் என்றிருந்தேன். நினக்கு நேர் யார்? நீயே களம் பட்டாயாகில் பகைவரை யார் இனிச் செகுக்க வல்லார்? இத்தகைய உன்னையும் இன்று தோற்றேன். உன்னுடன் தொடர்ந்து வாராது இன்னமும் உயிருடன் இருக்கிறேன். அந்தோ என் செய்வேன் என்று செயலற்று இரங்கி அரற்றி அழுது புலம்பினான். அதுகண்ட கண்ணன், வியாசன் முதலியோர் தேற்ற ஒருவாறு தேறினான். ஆயினும் தன் மைந்தன் உயிர் கவர்ந்த சிந்துபதியாகிய சயத்திரதன் மீது செற்றமும் சீற்றமும் கொண்டான். புற்றில் வாழ் அரவெனப் பொங்கி யெழுந்தான். என் மைந்தனைக் கொன்ற சயத்திரதனை நாளை

'அந்திபடும் அவ்வளவில் ஆவி கவரேனேல்
வெந்தழலில் வீழ்வன் இதுவேதமொழி என்ருன்.

மேலும் நெஞ்சம் குமுறிப் பின்வரும் வஞ்சினம் கூறினான்.

இன்று அமரில் வாள் அபிமன் இன்உயிர் இழக்கக்
கொன்றவனை நாளை உயிர் கோறல் புரியேனேல்
மன்றில்ஒருசார்புற வழக்கினை உரைக்கும்
புன்தொழிலர் வீழ்நரகு புக்கு உழலுவேனே!

–13ஆம் போர்ச்சருக்கம் 180

தாதையுடனே மொழி தகாதன பிதற்றும்
பேதைமகன் எய்துநெறி பெற்றுடையன் ஆவேன் –181

தாயார்பசி கண்டுநனிதன் பசிதணிக்கும்
நாய்அனைய, புல்லர் உறுநரகில் உறுவேனே! -182

தஞ்சுஎன அடைந்தவர் தமக்கு இடர்,நினைக்கும்
நஞ்சுஅனைய பாதகர் நடக்குநெறி சேர்வேன்! –183

மணைவி அயலான் மருவல்கண்டும் அவள்கையால்
திணையளவும் ஓர்பொழுது தின்றனனும் ஆவேன்! -1844

நாம் சமுதாய வாழ்க்கையில் காண்கின்ற அநிதிகளைக் கண்டிக்கும் அறநெறியை இவ்வஞ்சினத்தின்மூலம் வலியுறுத்துகிறார் வில்லியார்.

நீதி மன்றத்தில் ஒருசார்பு வழக்குரைத்தல்
தந்தையை எதிர்த்துத் தகாதன பிதற்றல்
தாய்பசிகண்டும் தன்பசி தணித்தல்
தஞ்சம் அடைந்தவர்க்கு நஞ்சனைய பாதகம் புரிதல்.
தன்மனைவி அயலானிடத்தில் மருவக்கண்டும் அவள்கையால் உண்ணுதல்

ஆகியவை எத்துணைக் கொடியவை குழப்பம் விளைவிப்பவை என்பதை நாம் சமூகத்தில் அன்றாடம் கண்டும், கேட்டும் செய்தித் தாள் வாயிலாகப் படித்தும் வருகிறோம். இதனால் நிகழும் சமூகக் கேடுகள் எண்ணிறந்தவை. இக்கேடுகள் நீங்காதவரை நாம் எவ்வளவு படித்தாலும், பட்டம் பதவி பெற்றாலும், செல்வத்திற் சிறந்தாலும் சிறிதும் பயனில்லை.

இனி ஆணையிட்டுக் கூறும் முறையும் வஞ்சினத்தைப் போன்றே வலியுறுத்திக் கூறுவதாகும். அவ்வாறு ஆணை கூறுவோர் பொதுவாழ்விலோ, தனிவாழ்விலோ தீயன காணுங்கால் கொதித் தெழுந்து, தாம் எதன்மேல் நம்பிக்கையும் உறுதியும் வைத்திருக் கின்றார்களோ அதன் மேல் ஆணையிட்டுக் கூறுவர்.

அம்முறையில் தமிழ், தமிழ் மக்கள், தமிழ்நாடு ஆகிய வற்றின் நிலைகண்டு பாவேந்தர் பாரதிதாசன் மனம் புழுங்கினார். தமிழ் மொழி, இந்தி, ஆங்கிலம் முதலிய பிற மொழிகளுக்கு அடிமை யாய் அவலநிலையிலிருப்பதையும், தமிழ்மக்கள் எல்லாத் துறைகளிலும் இழிநிலையில் ஒற்றுமையின்றித் தாழ்வுற்று இருப்பதையும், தமிழ்நாடு பிற மாநிலங்களிலும் பின்னடைந்து இருப்பதையும் கண்டு பதறி பன்னிப் பன்னிப் பாடுகிறார்.

தாயின் மேலாணை தந்தை மேலாணை என்
　　தமிழக மேலாணை தூயஎன்
தமிழ் மேலாணை யிட்டே நான்
　　தோழரே உரைக்கின்றேன்.
நாயினுங் கீழாய் செந்தமிழ் நாட்டார்
　　நலிவதை நான் கண்டும்
ஓயுதலின்றி அவர்நல மெண்ணி
　　உழைத்திட நான் தவறேன்
தமிழரின் மேன்மையை இகழ்ந்தவனை என்
　　தாய்தடுத் தாலும் விடேன்
எமைநத்துவாய் என எதிரிகள் கோடி
　　இட்டழைத் தாலும் தொடேன்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் வெஞ்சினம்கொண்டு கூறிய வஞ்சினத்தையும், பார்த்திபன் கூறியசபதத்தையும், பாவேந்தர் கூறிய ஆணையையும் தமிழர்கள் ஒவ்வொருவரும் அரசியல், சாதிமத வேறு பாடின்றி தமிழ் நாட்டில் வாழ்கின்ற நாம் அனைவரும்தமிழர்கள் என்ற உணர்வோடு ஒற்றுமையுடன் வாழவேண்டும். ஒற்றுமையில்லாக் காரணத்தால் நம்மிடையே ஆற்றல் மிகுந்திருந்தும் மாற்றலரால் மனம் மருண்டு தமிழர்கள் தமக்குள்ளேயே ஒருவரையொருவர் ஏசிப் பேசி, இகழ்ந்துரையாடி பிணக்கும் பிளவும், பூசலும் பொருமையும் கொண்டு நம்மை நாமே அவமதித்து அவலச் சூழ்நிலையில் வாழ்ந்து வருகிறோம். நமது இன்னல்கள்தீர-இழிநிலைகள் ஒழிய, ஒற்றுமையாய் வாழ தமிழர்களாகிய நாம் அனைவரும் பின்வரும் உறுதிமொழியை ஏற்று, உலையா ஊக்கமுடன் செயலாற்றவேண்டும்.

### தமிழர் உறுதிமொழி

யாதொரு தமிழன் எனதொரு மொழியும்
தேனென வழங்கும் செந்தமிழ் மொழியே!
என்பெரும் நாடு கலைமுதல் யாவும்
இன்புறு செந்தமிழ் வழக்கியல் அமையவே!
இல்லம் மக்கள் பொருள்தெரு ஊர்முதல்
எல்லாம் தூயதமிழ்ப் பெயரிடுவேன்
இசைமுதற் கலைகள் தொழில் முதற்றுறைகள்
எங்கும் தமிழ்க்கே தருவேன் முதன்மை
இறைவழி பாடும் எல்லாச் சடங்கும்
தமிழில் தமிழரை யன்றிச் செய்யேன்
பேச்சும் எழுத்தும் நடையுடை நினைவும்
பூச்சும் பொலிவும் தமிழியல் பெறுவேன்
என்றிவை எல்லாம் எல்லார் முன்பும்
இசைந்து யான்ஏற்கும் உறுதிமொழிகளே!

இத்தகைய உறுதிமொழிகள் தமிழர்களிடம் செயலில் வரும் நாளே தமிழகத்தின் பொன்னாளாகும். அந்நாளை எதிர் நோக்கி நம் வாழ்நாள் அமைவதாகுக!



### மறுக்க முடியாது

கடவுளை மறுப்பவர்களை நாம் பார்க்கிறோம். ஆனால் உண்மையை மறுத்தவர்களை நாம் இதுவரை கண்டதில்லை. —காந்தியடிகள்

# அறம்

பழ. இராமநாதன்.

அறம் என்றால் என்ன? ஒருபுறம் அடுத்தவர்களின் செல்வங்களை யெல்லாம் கவர்ந்து மறுபுறம் ஆயிரம் ஏழைகளுக்கு அன்னமிடுகிறார்களே! அஃது அறமா? பசிக்கின்ற குழந்தைக்குப் பால்தர மறுத்துப் பரமனுக்குப் பால் முழுக்காட்டுகின்றனரே! அஃது அறமா? வீட்டிலே வந்து கேட்டவர்க்கு இல்லையென்று சொல்லிப் பலர் தன்னைப் புகழவேண்டுமெனக் கருதிக் கூட்டத்திலே கொடை கொடுக்கின்றனரே! அஃது அறமா? ஆம்! இவையெல்லாம் அறமென ஒரு சிலரால் இன்று அழைக்கப்படுகின்றன.

ஆனால் ஒருபுறம் பலரை வாட்டி வதைத்து மறுபுறம் ஒரு சிலரை மகிழச்செய்யும். இவையெல்லாம் அறமல்ல. அப்படியென்றால் அறம் என்பதுதான் என்ன? 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்று வள்ளலார் கூறுவதுபோல அறமென்பது எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுதலாகும். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவோரைத்தான் அறவோர் என்றார் வள்ளுவப் பெருந்தகை. ஆகவேதான் பழந் தமிழகத்தில் மன்னுயிரைத் தன்னுயிராக மதிக்கும் அறவோர் மன்னர்களாயிருந்தனர்.

"வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன், என்று வள்ளலார் வாடியதற்குக் காரணமென்ன? வழியிலே கிடந்த முல்லைக்கொடிக்குத் தேரை நல்கி வாழ வழிவகை செய்த பாரியின் பரந்த மனத்திற்குக் காரணமென்ன? புலவருக்குக் கொடுக்கப் பொருள் ஒன்றுமில்லா நிலையில் தன் தலையைத் தம்பியிடம் கொடுத்துச் செல்வத்தைப் பெறுகவெனத் தலை தந்த குமணனின் தகைமைக்குக் காரணமென்ன? குளிரால் நடுங்கிய மயிலுக்குச் சால்வை சார்த்திய பேகனின் பெருந்தன்மைக்குக் காரணமென்ன? அவரனைவரும் எவ்வுயிரையும் தம்முயிராய் மதித்தனர். அதனால் அருள் வெள்ளம் உள்ளத்தில் ஊற்றெடுத்தது. அடுத்த உயிர்படுகின்ற துன்பம் தாங்காது ஆவன செய்தனர்.

மன்னுயிரைத் தன்னுயிராக மதிக்கின்ற நிலையில் மனம்; அழுக்காறு, ஆசை, வெகுளி, சினம் எனும் இவற்றை வென்றுவிடும். அப்போது உள்ளத்தில் இரக்கம், அன்பு, அருள் என்ற அறத்தின் வித்துக்கள் விளைந்துவிடும் உள்ளம் தூய்மையாகும். இதனையே வள்ளுவர், 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்றார். மனந் தூய்மையாக இருந்தால் அஃது அறம் விளைவதற்கு நிலமாக அமைவதால் அதையே அறமென்கின்றார் வள்ளுவர்.

மனத்துக்கண் மாசில்லா அறத்தை அனைவரும் பெற்றால் ஒவ்வொருவரும் ஒல்லும் வகையான் ஓவாதே அறம் செய்ய இயலும். செல்வர் அரிய பெரிய அறங்களைச் செய்யலாம். எளியவர் தம்மால் இயன்றதைச் செய்யலாம். கண்ணில்லாரைக் கைபிடித்து அழைத்துச் செல்வதும் அறந்தான். இதைக் காசில்லாதவரும் செய்யலாம்.

அழகப்பரின் மனம் மாசில்லாமலிருந்ததால் அழகப்பா கல்லூரிகள் தோன்றின. அதேபோல நம் உயர்திரு வீ. தெ. வீரப்ப செட்டியார் அவர்களின் உள்ளம் தூய்மையாக இருந்ததால் அன்னையின் பெயரால் அழகிய பள்ளி அமைந்தது. இவைபோன்று அறம் செய்திருக்கின்ற அன்பர்கள் பலரை நம் தமிழகம் கண்டுள்ளது. இறுதியாக அறம் அரும்புவதற்கு அடிப்படை மனம் மாசு மறுவற்று இருப்பதேயாகும். ஒவ்வொருவரும் தங்கள் உள்ளங்களைத் தூய்மைப் படுத்தினல் உலகில் அறம் அழியாதிருக்குமென்பது உறுதி.

அன்பு வாழ்க! அறம் தழைக்க!

[கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவர்; இப்பொழுது இப் பள்ளியின் ஆசிரியர்]



(மாணவர் வரைந்த படம்)

செல்வத்துப் பயனே ஈதல் — புறநானூறு.

நகைச்சுவைக் கட்டுரை

# சிரிப்பு நிழல்

*அழகு வீரப்பன்*

மரத்தின் நிழல் உடலுக்கு; சிரிப்பின் நிழல் உள்ளத்துக்கு. அந்த நிழல் 'ஜிலு ஜிலு' வென்றிருக்கும்; இந்த நிழல் 'கல கல' வென்று காணப்படும். நிழல் என்பது சாயல். வெளிச்சத்தில் உருவத்தின் நிழல் தெரியும்; சிரிப்பில் உள்ளத்தின் நிழல் தெரியும். 'சிடு சிடு' வென்று இருப்பவர்களும் 'சிரி சிரி' யென்று சிரித்துவிட்டால் அந்த இடம் 'குளு குளு' வென்று இருப்பதற்குக் கேட்பானேன்! அது சரி, நிழல் எங்கே, காண்பியுங்கள் என்கிறீர்களா? இதோ நிழல், சற்றே இளைப்பாறுங்கள்!

சென்னை நகருக்கு நாங்கள் புதிதாய்ப் போய்ச்சேர்ந்த சமயம். வாடகைக்கு வீடு கேட்கச் சென்றோம். வீட்டுக்காரர் வாடகையைச் சொன்னார். ஆமாம், வாடகை ரூ. 250/- என்றார். உடனே நான் கேட்டேன், "வருஷத்துக்கா அல்லது மாசத்துக்கா?" என்று! கூட வந்தவர்கள் கொல்லென்று சிரித்துவிட்டார்கள். வீட்டுக்காரருக்குச் சிறிது கோபம்தான். அவரைச் சொல்லிக் குற்றமில்லை. அங்கே வாடகை விஷயம் அப்படி. அந்த இடத்தில் ஏற்பட்ட வயிற்றெரிச்சல் இந்தச் சிரிப்பு நிழலால் தணிந்தது.

சென்னையில் வாடகை விஷயம்தான் அப்படியென்பதில்லை. ஏனைய செலவினங்களும் அப்படியே. அங்கே எங்களுக்குத் தெரிந்த குடும்பம் ஒன்று. அவர்களுக்கு நிறையக் குழந்தைகள். (குடும்பக் கட்டுப்பாடு திட்டம் அமுலுக்கு வருமுன்னரே பிறந்தவை அவை யென்பதை உங்கள் காதோடு சொல்லிவைக்கிறேன்) அந்தத் தகப்பனார் தன்னுடைய பையன் விஷயத்தில் பஸ் செலவை மிச்சம்பிடிக்க ஒரு யுக்தியைக் கையாண்டார். பையனுக்கு வயதாகி யிருந்தாலும் பார்வைக்குக் குள்ளமாகவும், ஒல்லியாகவும் சிறியவனாகவே தோற்றமளித்தான். எனவே அவனைக் கூப்பிட்டார். ஒரு உத்தரவு போட்டார். பஸ்ஸில் போகும்பொழுது கண்டக்டர் மற்றும் யாராவது வயது கேட்டால் மூன்று என்று சொல்லும்படியாகப் பழக்கிவைத்தார். (சென்னை நகர பஸ்களில் மூன்று வயதானால்தான் முழு டிக்கட்) பையனும் மகா கெட்டிக்காரன். 'என்றும் பதினாறு வயது மார்க்கண்டேயன்' போன்று யார் எப்பொழுது கேட்டாலும் மூன்று வயது என்றே சொல்லி வந்தான், பிறகு அதே பையனைப் பள்ளியில் சேர்க்கவேண்டிய சமயம் வந்தது. தகப்பனாருக்கோ வேலை ஒழியவில்லை. எனவே பையனையும் தன் மனைவியையும் பள்ளிக்கு அனுப்பிவைத்தார். பள்ளியின் தலைமை எழுத்தர்

மனுத்தாளை யெடுத்துப் பூர்த்தி செய்யத் தொடங்கினர். முதல் கேள்வி ''பையன் பெயர் என்ன?'' என்று கேட்டார். சில பெண்கள் தங்கள் கணவன் பெயரைச் சொல்லமாட்டார்கள். (அதுதான் இங்கே விசேஷம் அவளது கணவன் பெயர்தான் அவள்பையனுக்கும்!) ஆகவே, ''தம்பி, உன் பெயரைச் சொல்லுடா'' என்று சொன்னர் அம்மணி. பையன் பெயரைச் சொன்னான். அடுத்து ''வயசு'' என்று கேட்டார் எழுத்தர். பையன் பெயரைச் சொன்ன வாயாலேயே ''வயசு மூன்று'' என்று பதில் சொன்னான். ''மூன்ரு; அப்படியென்ருல் இந்த வருஷம் நீங்கள் கேட்கிற வகுப்பில் சேர்த்துக்கொள்ள முடியாது; வயசு குறைச்சலாயிருக்கு'' என்று சொல்லித் திருப்பியனுப்பிவிட்டார் எழுத்தர். பாவம், பையன் பஸ்ஸில் சொல்லவேண்டிய வயதைப் பள்ளிக்கூடத்தில் சொல்லிவிட்டான்! என்ன செய்வது? பிறகு தகப்பனர் போய், பிறந்த நாள் அத்தாட்சி முதலானவற்றைக் காண்பித்துப் பள்ளியில் இடம் பிடிக்க வேண்டியதாயிற்று.

பையன்தான் வயசு விஷயத்தில் கடுக்காய் கொடுத்தான் என்பதில்லை. பெரியவர்களும் செய்வதுண்டு. எனக்குத் தெரிந்த உடன் பிறந்த அண்ணனும், தம்பியும் இரண்டு வெவ்வேறு அலுவலகங்களில் உத்தியோகம் பார்த்து வந்தார்கள். இரண்டு பேரில் தம்பிக்காரன் கொஞ்ச நாளைக்கு முன்பு 'ரிடயர்' ஆகிவிட்டான். அதாவது சர்க்கார் விதிப்படி அறுபது வயது ஆகிவிட்டதென்று சொல்லி, உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்று வீட்டில் இருந்து வருகிருன். ஆனல் அண்ணன்காரன் விஷயம் அப்படியில்லை. அலுவலகத்தில் இன்றும் உத்தியோகம் பார்த்து வருகிருன். காரணம், அண்ணனுக்கு இன்னும் அறுபது வயது பூர்த்தியாக வில்லையாம்! அவனைச் சொல்லிக் குற்றமில்லை. அவனுக்கு டாக்டர் அதுமாதிரி சர்டிபிகேட், அனுமானத்தின் பேரில் கொடுத்திருக்கிருர்! இந்த அண்ணன் விஷயத்தில், அவனைப் படைத்த பிரம்மாவே டயரியில் தேதியை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

பிரம்மா டயரியை மாற்றுவது இருக்கட்டும். சிந்தாதிரிப் பேட்டையில் ஒரு பேர்வழி ஒரு கடையின் பெயரையே மாற்றி விட்டான். ஒரு கடையின் முன்னல் 'கொசுக் கடை' யென்று கொட்டை எழுத்துக்களில் பெயர்ப் பலகையொன்று காணப்பட்டது. தெருவில் சென்ற எங்களுக்கோ ஒரே வியப்பு. ''பேஷ், கொசு விற்பதற்கும் ஒரு கடை சென்னையில் வைத்திருக்கிருர்களா, பலே'' என்று சொல்லி உள்ளே சென்று விசாரித்தோம். கடைக்காரர் ஒன்றும் புரியாமல் விழித்தார். கொசுவுக்கும் தனது வியாபாரத்துக்கும் தொடர்பு எதுவுமில்லை யென்றும் தொந்தியைத் தடவிக்கொண்டே சொன்னர். நிதானமாக அவரை வெளியில் அழைத்து வந்து 'போர்டை'க் காண்பித்தோம். அப்பொழுதுதான் அவர் தனது கடை 'காசுக்கடை' என்பதாகச் சொன்னர். யாரோ ஒரு பொல்லாத பேர்வழி 'கா' என்ற முதல் எழுத்துடன், காதும் காதும் வைத்தாற்போல் ஒரு கொம்பைச் சேர்த்து 'கொ' என்று எழுதிவைத்துப் போயிருக்கிருன்!

பாவம், காசுக்கடைச் செட்டியார், அந்தக் கொம்பைப் படாதபாடு பட்டுச் சீவி யெடுத்தார். எங்களுக்குச் சிரிப்போடு நன்றியும் சொன்னார். சிறப்போடு வழியும் அனுப்பி வைத்தார்.

செட்டியார் வழியனுப்பியது ஒருபுறமிருக்க ஒரு சமயம் ஒரு கல்யாண வரவேற்பிற்குப் போய்ச் சேர்ந்தோம். விருந்தினர்கள் வெளியே வரும் சமயம். நாங்கள் விழுந்தடித்துக்கொண்டு உள்ளே போய்ச் சேர்ந்தோம். பாடகர் கச்சேரி செய்துகொண்டிருந்தார். ஒரு பாடலை அப்பொழுதுதான் பாடி முடித்து அடுத்த பாடலைப்பாடத் தொடங்கினார். எடுத்த எடுப்பிலேயே பல்லவியைப் பாடினார். ''கிழவிமேல் காதல் கொள்ளடா, கிழவிமேல் காதல் கொள்ளடா'' என்று ஆனந்தமாகப் பாடினார். சுற்றியிருந்தவர்களோ முகத்தைச் சுளித்துக் கொண்டனர். பாடகர் அடுத்த அடியைத் தொடர்ந்து பாடினார், ''கிழவிமேல் காதல் கொள்ளடா ஔவைக் கிழவிமேல் காதல் கொள்ளடா'' என்று! பிறகு கேட்கவா வேண்டும். ஒரே கை தட்டல், ஆரவாரம். கசப்பு கனத்த சிரிப்பாக உருவெடுத்தது. வெயில் நிழலாக மாறியது.

ஒரு சமயம் நண்பர்கள் பலரோடும் மாமல்லபுரத்துக்கு உல்லாசப் பயணம் சென்றிருந்தோம். அங்கே அர்ஜுனன் தவமியற்றியதாகக் கூறப்படும் (எங்கள் Guide சொல்லியவாறு என்று கொள்க) இடத்துக்கு அருகாமையில் சிறிய சிறிய அளவினதான சிற்பங்கள் ஏராளமாக ஓரிடத்தில் செதுக்கி வைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பூனையின் சிற்பம் ஒன்று மிக அழகாகக் காணப்பட்டது. உடன்வந்த ஒரு நண்பரிடம் 'அதோ, பூனை பார்த்தீரா ஐயா, பூனை' என்று விரலைச் சுட்டிக் காட்டினோம். அவர் 'பூனையா, எங்கே இருக்கிறது'? என்று கேட்டார். 'அதோ, யானையின் சிற்பம் இருக்கிறதே, அதனருகில் பூனை பாரும்' என்றோம். உடனே அவர், 'யானையா, அது எங்கே இருக்கிறது?' என்று ஒரு கேள்வியைத் திருப்பிக் கேட்டார் பாருங்கள்! 'சரி, வாரும் போகலாம்' என்று அவரை அழைத்துக்கொண்டு அடுத்த இடத்துக்கு நடையைக் கட்டினோம். வேறென்ன செய்வது? யானையே தெரியாத அவருக்குப் பூனையைக் காண்பிப்பதென்றால் எங்களால் முடிந்த காரியமா என்ன? நீங்களே சொல்லுங்கள்.

மேலே சொன்ன நண்பருக்குப் பூனையைக் காண்பிப்பதும் சரி, இங்கே சொல்லப் போகும் நபரின் சந்தேகத்தைத் தீர்த்து வைப்பதும் சரி. இரண்டும் ஒன்றுதான். ஒரு பிரபல பாங்கியில் ஒரு நபர் கணக்கராக வேலை பார்த்தார். அவருக்கு எதிலும் சந்தேகம். எப்பொழுதும் சந்தேகம். அவரை 'சந்தேகத்தின் பிதா' அதாவது Father of Doubts என்று கூடச் சொல்லலாம். அப்படிப்பட்டவருக்கு ஒருமுறை ஒரு சந்தேகம் வந்துவிட்டது. 'ஏன் சார், பத்தாயிரத்துக்கு எத்தனை சைஃபர்' என்று ஒரு பெரிய கேள்வியே கேட்டுவிட்டார் மனுஷன். அவர் சந்தேகத்தை நீங்கள் தீர்க்க முடியுமானால் தீர்த்து வையுங்கள். இல்லை, சிரிக்கத்தான் முடியுமென்றால் சிரித்து வையுங்கள்!



# எழில் மிகு ஹவாய்த் தீவுகள்.

சுப. பழனியப்பன், M. SC. (Ag).

சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி வெள்ளி விழாக் கொண்டாடி, வெற்றிப் பெருமித நடைபோடவிருக்கிறது என்பதை அறிந்து, மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இப்பள்ளியில் படித்த பலர் உலகின் பலபகுதிகளிலும் உயர்நிலையில் பணியாற்றி வருகிறார்கள் என்பதே இப்பள்ளியின் சிறப்புக்கு எடுத்துக்காட்டு. நானும் இப் பள்ளியின் ஒரு பழைய மாணவன் என்று கூறிக்கொள்வதில் பெருமை யடைகிறேன். அமெரிக்க அரசின் உதவியால் எழில்மிகு ஹவாய்த் தீவுகளின் களிமிகு தலைநகரான ஹொனலுலுவில் வேளாண்துறை யில், டாக்டர் பட்டத்துக்குப் படித்துக்கொண்டிருக்கும் நான், வெள்ளி விழா மலரில் ஹவாய்த் தீவுகள்பற்றி ஒருசில வரிகள் எழுத வாய்ப்புத் தந்தமைக்கு நன்றி.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் 50 மாநிலங்களில் ஒன்றான ஹவாய்த் தீவுகள் பசிபிக் மாக்கடலில் கலிஃபோர்னியா மாநிலத்திலி ருந்து சுமார் 2000 மைல்கள் தொலைவில் அமைந்துள்ளன. எட்டுத் தீவுகளின் கூட்டமே ஹவாய்த்தீவுகள் என அழைக்கப்படுகிறது. அந்த எட்டுத்தீவுகள் ஹவாய், மாவி, ஒவாஹூ, கவாய், மொலோகி, லனாய், நியாஹாவ், கஹூலவே. இவற்றில் பெரியன நான்கு: ஹவாய், மாவி, ஒவாஹூ, கவாய், ஹொனலுலுநகரம் ஒவாஹூத் தீவில் அமைந்துள்ளது. இந்த எட்டுத் தீவுகளின் மொத்தப் பரப்பு 6345 சதுர மைல்கள். ஹவாய்த்தீவில் இன்னும் எரிநிலையில் இருக்கும் எரிமலையும், 13,784 அடி உயரமுள்ள வெண்மலையும் சிறப்புக்கள். இரண்டாம் உலகப் போரின் போது, ஜப்பானின் கடற்படை தாக்கிச் சீர்குலைத்த பேர்ல் ஹார்பர் (Pearl Harbour) நகரம் இங்குதான் உள்ளது. இத்தீவுகளின் மொத்த மக்கட்தொகை 7,25,000 இதில் பாதிக்கு மேற்பட்ட மக்கள் ஹொனலுலு நகரில் வாழ்கிறார்கள்.

ஹவாய்த் தீவுகள் காப்டன்குக் என்பவரால் 1778ல் கண்டு பிடிக்கப்பட்டது. இருப்பினும், இங்கு வாழ்ந்த பூர்வகுடி மக்கள் புதிய குடியேற்றம் எதையும் அனுமதிக்கவில்லை. 1850க்குப் பின்னர் தான், சீனர்கள், ஜப்பானியர், போர்த்துகீசியர்கள் மற்றும் மற்ற ஐரோப்பிய நாட்டினர் குடியேறத் துவங்கினர். 1893 வரை ஆண்டு வந்த பூர்வகுடி மக்களின் அரச பரம்பரையினர் பதவியிலிருந்து நீக் கப்பட்டு, அமெரிக்க நாட்டின் பாதுகாப்புக்கு உட்பட்ட குடியரசாகப் பிரகடனப்படுத்தப்பட்டது. 1959ம் ஆண்டு ஹவாய்த் தீவுகள் அமெரிக்க நாட்டின் ஒரு மாநிலமாக அறிவிக்கப்பட்டது.

ஹவாய்த்தீவுகளின் பிரதிநிதிகள் அமெரிக்க மத்தியப் பாராளு மன்றத்தில் அங்கம் வகிக்கின்றனர். மாநில அரசு, மக்களால் நேரடி யாகத் தேர்ந்தெடுக்கப்படும் ஆளுனர் (Governor), சட்ட மன்ற உறுப்பினர்கள் ஆகியோரால் நிர்வகிக்கப்படுகிறது.

இத்தீவுகளின் பெரும் தொழில்கள் வெண்சர்க்கரை (Sugar) மற்றும் அன்னுசிப்பழ உற்பத்திதான். ஆனால், பெருமளவு வருமானம் தருவது, உல்லாசப் பயணிகளின் வருகையே. இத்தீவுகளில் அமைந்துள்ள எழில்மிகு கடற்கரைகளும், இயற்கை எழிற்காட்சியும் உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் நாள்தோறும் ஆயிரக்கணக்கான பயணிகளைக் கவர்ந்திழுத்த வண்ணம் உள்ளன, ஹொனலுலு விமான நிலையத்தில் ஒவ்வொரு மூன்று நிமிடத்திற்கும் ஒரு விமானம் வந்து இறங்குகிறது என்றால், பயணிகளின் எண்ணிக்கையை ஊகித்துக் கொள்ளலாம். நாளொன்றுக்கு ஒரு அறைக்கு ரூபாய் 100க்கு மேற்பட்ட கட்டணம் வசூலிக்கும் ஹோட்டல்கள் நூற்றுக்கு மேல் உள்ளன.

ஹொனலுலு நகரில் உள்ள வைகிகி (Waikiki) கடற்கரை உலகிலேயே மிக அழகான கடற்கரையாகக் கருதப்படுகிறது. இதன் எழிலைச் சொற்களால் விவரிக்க இயலாது. இந்நகரில் உள்ள அலமொவானு (Ala Moana) அங்காடி 49 ஏக்கரில் ஒரே கூரையின் கீழ் அமைந்துள்ளது. இது உலகிலேயே மிகப்பெரிய அங்காடி. பணம் மட்டும் இருந்தால், என்ன பொருள் வேண்டுமானாலும் இங்கு வாங்கலாம்.

உல்லாசப் பயணிகள் மகிழ்ச்சியாக நேரம் கழிப்பதற்கு இரவுக் கூடங்கள் (Night Clubs), பல நவீன வசதிகள் நிறைந்த நாடக, திரைப்பட அரங்குகள், ஹவாயின் சிறப்பு நடனமான ஹுலா நடனம் நடைபெறும் இடங்கள், மற்றும் விளையாட்டுத் திடல்கள் அனைத்தும் உள்ளன. இங்கு வருபவர்கள் மகிழ்ச்சியாக நேரம் கழிக்க வருவதால், சாதாரணமாக மேற்கத்திய நாடுகளில் அணியும் சூட், டை முதலியவற்றைப் பெரும்பாலோர் அணிவதில்லை, வண்ண வண்ணமான சட்டைகள், கால்சட்டைகள் மட்டுமே அணிகின்றனர். ஹொனலுலு விமான நிலையத்தில் வந்து இறங்கும் பயணிகளுக்கு, ஹவாயின் "அலோஹா" (Aloha) முறைப்படி வரவேற்பளிக்கிறார்கள். ஹவாய் இளம் பெண்கள் பயணிகளின் கழுத்தில் வண்ண, வண்ண மலர்களில் தொடுக்கப்பட்ட மாலைகளை அணிவித்து, முத்தமிட்டு வரவேற்கிறார்கள்.

ஹவாய் உணவுப் பழக்க, வழக்கங்கள் நம் நாட்டிலிருந்து முற்றிலும் மாறுபட்டவை. காலை 9-00 மணிக்கு, முட்டை, பால், பழங்கள், ரொட்டி, சர்க்கரை போடாத காபி அல்லது தேநீர் சாப்பிடுகிறார்கள். பகல் 12 மணிக்கு மாட்டுப் புலால் அல்லது சீமைப்பன்றி மாமிசம், ஸாண்ட்விச் (Sandwich) எனப்படும் ரொட்டி, பால் முதலியன உண்கிறார்கள். மாலை 3 மணிக்கு பிஸ்கட், காபி. பின்னர் 6 மணிக்கு மாட்டுமாமிசம் அல்லது சீமைப்பன்றிக்கறி, கொஞ்சம் சாதம், பழம், கேக், பால் முதலியன. இரவு 10 மணிக்கு அல்லது படுக்கப் போகுமுன் உலர்ந்த அல்லது டின்னில் அடைக்கப்பட்ட பழங்கள், பிஸ்கட் முதலியன. உணவில் உறைப்பே சேர்த்துக்கொள்வதில்லை.

பயணிகள் இங்கு விடுமுறையைக் கழிக்க வருவதால், இத் தீவு மக்கள் நகரையும், தீவுகளையும் எப்பொழுதும் சுத்தமாயும், அழகாயும் வைத்திருப்பதில் மிகுந்த கவனம் காட்டுகிறார்கள். இங்கு உணவுப் பிரச்னையோ, வேலையில்லாத் திண்டாட்டமோ இல்லை. எனவே பிச்சைக்காரர்களும் கிடையாது. பெரும்பாலும், ஒவ்வொரு குடும்பத்தினரும் கார், டெலிவிஷன், டெலிபோன், குளிர் சாதனப் பெட்டி முதலிய எல்லா வசதிகளையும் வைத்திருக் கிறார்கள். கல்லூரிக்குப் படிக்க வரும் மாணவர்களில் பெரும்பாலோர் கார் வைத்திருக்கிறார்கள். இச்சிறு மாநிலத்தில் நான்கு டெலிவிஷன் நிலையங்களும், 10 வானொலி நிலையங்களும் உள்ளன. அமெரிக்க நாட்டின் செல்வச் செழிப்புக்கே உரித்தான—நாம் நினைத்துக்கூடப் பார்க்க இயலாத—பல வசதிகள் இருந்தும், மக்கள் மேலும் பல வசதி கள் வேண்டும் என அயராது உழைத்த வண்ண முள்ளனர்.

ஹவாய்ப் பல்கலைக் கழகம் 1960ம் ஆண்டில் அமெரிக்கப் பாராளுமன்றத்தால் கிழக்கும், மேற்கும் கூடும் இடம் (East-west center) என அறிவிக்கப்பட்டு, இப்பணிக்காகப் பெருந்தொகை ஒதுக்கப்பட்டது. தற்போது உலகின் 49 நாடுகளிலிருந்து மாணவர்கள் இங்கு கற்பதற்காக வந்து கூடியுள்ளனர். ஹவாய்ப் பல்கலைக் கழகத்தின் வேளாண் கல்லூரி உலகிலேயே சிறந்தவற்றுள் ஒன்றாகக் கருதப்படுகிறது.

ஹவாய்த் தீவுகளின் எழிலை என்னால் வருணிக்க இயலாது. நீங்களே ஒரு முறை வந்து பார்த்துக்களியுங்கள் என அழைக் கிறேன்.

சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி 25 ஆண்டுகளைக் கடந்து நிற்கும் இந்நிலையில், பள்ளியின் புகழும், சிறப்பும் வளர என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். பத்தாயிரம் மைல் களுக்கு அப்பால் இருக்கும் பழைய மாணவனிடமிருந்து, பள்ளியின் ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் அன்பு நிறைந்த வாழ்த்துக்கள்.

**வணக்கம்**

[பள்ளியின் பழைய மாணவர் இக்கட்டுரை ஆசிரியர்: ஹோனலுலுவில் உள்ள ஹவாய்ப் பல்கலைக் கழகத்தில் உழவுத்துறை மேற்படிப்பு படித்துக் கொண்டிருக்கிறார்.]



"வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"

— குறுந்தொகை

# இன்பப் பயணம்

வித்துவான்: *மா. சுப்பிரமணியன்,*

நானும் நண்பர் திரு. திருவேங்கடசாமி அவர்களும், **21–12–67** அன்று நண்பகல் கண்டனூரிலிருந்து புறப்பட்டோம். காரைக்குடி அடைந்தோம். விரைவுப் பேருந்து வண்டியில் ஏறி மதுரை சென்ருேம். அங்கு, திருநெல்வேலி செல்லும் விரைவுப் பேருந்து வண்டி எங்கள் வருகைக்காகக் காத்துக்கொண்டிருந்தது போல் நின்றது. அதில் ஏறியமர்ந்து திருநெல்வேலி ஏகினேம். உடனே அங்கிருந்து கல்லிடைக் குறிச்சியை அடைந்தோம். எங்களுடன் பணியாற்றிய பழைய நண்பர் திரு. இரா. சங்கரசுப்பிர மணியன் இல்லத்திற்குச் சென்ருேம். அவரோடு அன்றிரவு அளவ ளாவி மகிழ்ந்தோம். மார்கழிமாதமானதால் விடியற்காலேயில் உறக் கத்தினின்றும் எழுந்து மக்கள் தாமிரபன்னியாற்றுக்கு நீராடச் சென்றனர். இருவராயிருந்தவர் மூவரானேம். காலேயில் எழுந்து ஆற்றைக் கடந்து அம்பாசமுத்திரம் அடைந்தோம். திருப்பள்ளி யெழுச்சித் தீபாராதனையைக் கண்டு, காசிபநாத சுவாமியையும் மரகதாம்பிகையையும் வழிபட்டோம். இறைவன் எரித்தாட் கொண்டாரையும் கண்டு வணங்கினேம். மன்மதனே நெற்றிக் கண்ணுல் இறைவன் எரித்தான். இரதியின் வேண்டுகோட்படி, இரதிக்குமட்டும் தெரியுமாறு, மன்மதனுக்கு உயிர்தந்து ஆட் கொண்டார். அதனுல் தான் அவ்விறைவனுக்கு எரித்தாட் கொண் டார் என்ற பெயர் வழங்குகிறது என்றனர்.

**22–12–67** அன்று காலே பேருந்து வண்டி மூலம் மணிமுத் தாறு நீர்வீழ்ச்சிக்குச் சென்ருேம். நீர்வீழ்ச்சியில் மூவரும் வெள்ளிக் கிழமை காலே நன்கு நீராடினேம். மாற்றுடை தரித்துக்கொண்டோம். கையில் கொண்டு சென்ற இட்டிலிகளேயும் இனிதே உண்டோம். இளேப்பாறினேம். பிறகு அங்கிருந்து மணிமுத்தாறு நீர்த்தேக்கத் திற்குச் சென்ருேம். சிறந்த அணேக்கட்டு, சிந்தை கவரும் சீரிய பொழில், சிற்பக்கலே, பன்னிறமலர்கள், செடிகொடிகள். ஆகிய வற்றைக் கண்டுகளித்தோம். பின் கல்லிடைக்குறிச்சி திரும்பினேம். மலேயும் மலேசார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் எனப்படும். பாறை களுக்கிடையே அவ்வூர் தோற்றமளிப்பதைக் கண்டோம். கல்+ இடை+குறிச்சி. கல்லிடைக்குறிச்சி. நெய்தற்ருெழிலுக்குப் பெயர் பெற்றது அவ்வூர். அப்பளத்திற்கும் பெயர்போனது. மேலும், அன்று காலேயில் அரசினர் ஹெலிகாப்டர் மூலம் அவ்வூரில் பயிர்களுக்குப் பூச்சிமருந்து அடித்துக்கொண்டிருந்தார்கள். அந்நிகழ்ச்சியை நாங்கள் அருகிலிருந்து பார்க்கும் வாய்ப்பைப் பெற்ருேம். அதனுல்

ஏற்படும் பயனையும் கேட்டறிந்தோம். ஆங்குள்ள இலக்குமி வராகப் பெருமானை வழிபட்டோம். அன்று அமிழ்தினுமினிய அறு சுவையுணவு அப்பளம், பாயசத்துடன் மனநிறைவோடு போதும் போதும் என்று கூறிக்கொண்டே உண்டோம். அத்தகைய உணவு, பயணத்தில் ஏனைய இடங்களில் கிடைக்காததை ஈடு செய்வது போன்று அமைந்துவிட்டது. பின், நெல்லையப்பர் எழுந்தருளியுள்ள திருநெல்வேலிக்குச் சென்றோம். அங்கு சாலைக்குமரனை வணங்கினோம். அவனருள் பெற்றோம்.

திருநெல்வேலியிலிருந்து, முருகனுடைய ஆறுபடை வீடுகளில் ஒன்றாகிய திருச்செந்தூரை அடைந்தோம் மாலை ஐந்துமணி. மனவமைதிக்கு உறைவிடம். மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. கோவிலுக்குப் பக்கத்தே யுள்ள சண்முக விடுதியில் ஒரு அறையை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அதில் தங்கினோம். அன்று இரவு பாலசுப்பிரமணிய சுவாமியைக் கும்பிட்டோம். அபிடேகம், ஆராதனை, பள்ளியறை இவற்றைக் கண்டு கழிபேருவகை கொண்டோம். அன்று வெள்ளிக்கிழமையானதால் கோவிலில் கூட்டம் நிரம்பி வழிந்தது. சனிக்கிழமை காலை கடலில் (மன்னார் வளைகுடா) நீராடிய பின் நாழிக்கிணற்றில் குளித்தோம். நாழிக்கிணறு என்பது ஆட்டுக்கல் அமைப்புப் போன்றது. அதன் நடுவில் தூய்மையான குடிநீர் தேங்கியுள்ளது. ஒரு சிறு செம்பு கொண்டுதான் தண்ணீரை முகந்து எடுக்க வேண்டும். அத்தண்ணீரை முகக்க முகக்க தண்ணீரின் அளவு குறையவே இல்லை. இருந்தபடியே இருந்தது. கடலுக்கு மிகவும் அண்மையில் இருந்தபோதிலும் தண்ணீர் மிகவும் பருகுவதற்குரியதாய் இருந்தது வியப்பினும் வியப்பே. குளிக்கக் குளிக்க இன்பமாக இருந்தது. கடல் அலைகள் கோவிலின் கிழக்கு மதிற்சுவர்களின் அருகில் வந்து மோதுகின்றன. இந்நிகழ்ச்சி செந்தில் நாதனுடைய பாதங்களை வருடுவது போலிருந்தது. ஆகவே, இவ்வூருக்குத் திருச்சீரலைவாய் என்ற பெயர் மிகவும் பொருத்தமாய் அமைந்துள்ளது. கடலின் கீழ்த்திசை அடிவானத்திலிருந்து செந்நிறக் கதிரவன் ஊர்ந்து மேலே வெளிவரும் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு அகமகிழ்ந்தோம். பிறகு, முருகனருளால் செந்திலாண்டவனுக்குத் திருநீறு அபிடேகம் செய்து, கண்மலர் சார்த்தி, தீபம் கண்டு, அருச்சனை செய்து அவனடி வணங்கி அவனருள் பெற்றோம்.

பின்பு, பேருந்து வண்டிமூலம் திசையன்வளை சேர்ந்தோம். நண்பகல் உணவை முடித்துக்கொண்டோம். அங்கிருந்து நாங்குனேரி வழியாக கன்னியாகுமரி சென்றோம். தமிழ் நாட்டின் எல்லையைச் சிறப்பித்துக் கூறுமிடத்து, தென்னெல்லையாகக் கூறப்படுகிறது குமரி. குமரிப் பெருந்துறையில் கடலாடி இன்பப் பொழுது போக்கி வாழ்ந்தனர் தமிழ் மக்கள். நாட்டிற்கு எல்லையாக மட்டுமல்ல; பேரரணாகவும் பயன்பட்ட குமரியை ஒரு புலவர்,

"வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத்
தமிழ் கூறும் நல்லுலகம்"

எனச் சிறப்பித்துக் கூறுகிறார். எல்லையாகக் கருதப்பட்ட இக்குமரி இலக்கியத்திலே அழியாத இடம் பெற்றுவிட்டது. சங்க இலக்கியங்களிலே குமரியைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் குமரியைச் சிறப்பித்து,

"நெடியோன் குன்றமும்
தொடியோள் பௌவமும்"

என்று பாடுகிறார்.

இருபதாம் நூற்றாண்டுக் கவிஞரான பாரதி குமரியை உள்ளம் கனிந்துருகப் பாடுகின்றார்.

"நீலத்திரைக்கடல் ஓரத்திலே நின்று-நித்தம்
தவம் செயும் குமரி எல்லை"

நீலத்திரைக்கடல் அவர் நெஞ்சில் புத்துணர்ச்சியை ஊட்டிவிட்டது என்பது அவர் பாடலிலிருந்தே விளங்குகிறது அல்லவா? வேறொரு புலவர் சின்னஞ்சிறு குழந்தைகளும் பாடி மகிழுமாறு குமரியின் சிறப்பை ஆனந்தக் கும்மியாக அமைத்துப் பாடுகிறார். அப்பாடல் இனிமையும் நேர்மையும் பெற்று விளங்கும் சிறந்த பாடலாகும்.

"கன்னிக் கடலருகே-அழகாய்க்
காணும் கரைதனிலே
மின்னும் மணற்பரப்பில்-குழந்தாய்
மெல்ல இருந்திடம்மா."

இன்னோரன்ன பழம் பெருமை வாய்ந்த பெரும்பதி குமரியம் பதி என்பதை நாங்கள் எண்ணி இன்புற்றோம். மாலை கன்னி குமரி அம்மனை வணங்கினோம். அனைத்து நகைகளும் அணிவிக்கப் பெற்று, மிகப் பொலிவோடு அம்மன் தோற்றமளித்தாள். மூக்குத்தியின் ஒளி சொல்லொணா வியப்பில் ஆழ்த்தியது. வங்காளக்குடாக் கடல், இந்துமகாசமுத்திரம், அரபிக்கடல் ஆகிய மூன்று கடல்களும் ஒன்று கூடும் கடல் நீரில் ஞாயிறுகாலை நீராடினோம். காசியிலே கங்கையாடு; குமரியிலே கடலாடு; தீராத பாவமெல்லாம் தீர்த்து வைக்கும் குமரித் தீர்த்தம்-என்று கூறிக்கொண்டே ஆடினோம். "மொய்யார் தடம் பொய்கை புக்குமுகேரென்னக் கையால் குடைந்து குடைந்துன் கழல்பாடி" "பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம் ஏத்தி இருஞ்சுனை நீர் ஆடேலோர் எம்பாவாய்" "ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்" என்ற இம்மார்கழி மாதத்திற்குப் பொருத்தமான பாவைப் பாடல்களைப் பாடிக்கொண்டே நீராடினோம். கரையேற மனமில்லாமல் களிப்புக்கடலில் தோய்ந்தோம். பின்னர் கதிரவன்

தோற்றத்தைக் கண்ணுற்றுக் கழிபேருவகை கொண்டோம். கதிரவன் தோன்றும்போது ஏற்படும் நிறை ஒளியை குமரி அம்மனின் முக மலர்ச்சியில் கண்டோம்.

பிறகு, சுவாமி ஆதிசங்கராச்சாரியார் அவர்கள் பெயரால் ஒரு அழகிய மண்டபமும்கட்டி, அதில் சுவாமிகள் அவர்களது திரு வுருவச்சிலை நிறுவப்பெற்றுள்ளதையும், அன்னாருடைய மாணாக்கர் களின் சிலைகளையும் கண்டு வணங்கினோம். சுவாமி சித்பவானந்தர் அவர்களால் எழுப்பப் பெற்ற மற்றுமொரு அழகிய கல்மண்டபத்தில் ஆறரை அடி உயரத்தில் நிறுவப்பெற்று தியானம் செய்துகொண் டிருப்பது போன்ற சுவாமி விவேகாநந்தரின் திருவுருவச் சிலையைக் கண்ணுற்று மகிழ்ந்தோம். சுமார் அறுபது ஆண்டுகளுக்குமுன் சுவாமி விவேகாநந்தர் குமரி முனைக்கு வந்து தேவியை வணங்கினார். அன்னையின் அருளால் 'பாதப் பாறை' என்ற கடலில் அமைந்துள்ள பாறைக்கு நீந்திச் சென்று அங்கே உண்ணாநோன்பிருந்தார். இப் பாறையிலிருக்கும்போதுதான் வெளிநாடுகளில் இந்துமதத்தின் பெரு மையை எடுத்து இயம்புவதற்குரிய ஞானம் தோன்றியது என்று அவரேதன் நூலில் கூறியுள்ளார். விவேகாநந்தர் தவமிருந்த அப் பாறை, இன்று 'விவேகாநந்தர்பாறை' (Vivekananda Rock) என்ற ழைக்கப்படுகிறது. அப்பாறையின்மீது விவேகாநந்தரின் நினைவுச் சின்ன மண்டபம் எழுப்ப வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருப் பதைக் கண்டோம். இன்னும் ஓராண்டுக்குள் வேலை முடிந்துவிடும் என்றார்கள். சிலர் அப்பாறைக்குப் படகில் சென்று வந்தனர். படகில் செல்வது பார்ப்பதற்குப் பெருவிருந்தாக அமைந்திருந்தது. பின், அண்ணல் காந்தியின் அணிமண்டபத்தைக் கண்டோம். காந்தியினுடைய சுடலைப்பொடி (அஸ்தி) கரைப்பதற்காக வைக்கப் பட்டிருந்த இடம் அதுவாகும். ஈரடுக்கு மாளிகையாக வளர்ந்துள்ளது காந்திக் கட்டடம். கொளுத்தும் வெயிலிலும் அம்மண்டபம் குளிர்ச் சியாக இருக்கும். அழகின் உறைவிடமாய் அமைந்துள்ளது. குமரிநிலப்பரப்பின் பாதங்களை முக்கடல்களும் முத்தமிடுகின்ற இயற்கையின் எழில்தான் என்னே! என்னே!

பின்பு, இயற்கை அன்னையின் எழில் ததும்பும் பொழில்கள் நிறைந்துள்ள சுசீந்திரம் ஏகினோம். இந்திரனுக்கு சாபவிமோசனம் அளித்த இடம். சுசி-இந்திரன். இவ்விடத்தில் வைத்து சுசியான தால் இவ்விடம் சுசி-இந்திரம் எனவழங்கலாயிற்று. சுசி-இந்திரம் நாளடைவில் மருவி சுசீந்திரம் என்றாயிற்று. ஆங்கு கோயில் கொண் டுள்ள தாணுமாலயனை வழிபட்டோம். அவனருள் பெற்றோம்.

மனிதத் திறமைக்கு – முயற்சிக்கு – கலையின் முடிவிற்கு– கைவண்ணத்திற்கு – வனப்புக்கு – எழில்காட்சிக்கு ஓர் அணிகலனாய் அமைந்துள்ள இப் பொற்கோயிலின் உள்ளே, பதினெட்டடி உயர முள்ள கல்லால் அமைக்கப்பட்ட அனுமாரும், மண்ணால் ஆக்கப்பட்ட மாக்காளையும் தனிச்சிறப்புடன் இலங்குகின்றன. அனுமாருக்குப் பன்னீர்கொண்டு அபிடேகம் செய்து பாராட்டி வழிபட்டோம்.

இறைவனைச் சுற்றியுள்ள வெளிப்பக்கத்தில் துணைத் தெய் வங்கள் கோயில் கொண்டுள்ளன. அச்சுற்றுப்புறத்திலே "கல்லும் கவி பாடும்" என்பார்களே! அம்முதுமொழியை மெய்யாக்கிவிட்டது போலக் கற்றூண்கள் விதவிதமான இசையொலிகளை எழுப்புகின்றன. முப்பத்துமூன்று மெல்லிய தூண்கள் அடங்கிய ஒரே கல்லாலாகிய தூண்கள் நான்கு இருந்தன. சிலவற்றை இரு கைகளாலும், தட்டும் பொழுது புல்லாங்குழலின் இசையையும், மேலும் சிலவற்றைத் தட்டும் பொழுது பிடில், வீணை, சலதரங்கம், மத்தளம், கஞ்சிரா முதலிய கருவி களின் இசையையும் கேட்டோம். இவற்றை ஒருவர் கைகளால் தட்டி, இசைத்து ஒலியெழுப்பிக் காட்டினார். அவற்றிலிருந்து வெளிப்பட்ட ஏழுசுரங்களையும் கண்டு கேட்டு வியப்பில் ஆழ்ந்து அனுபவித்தோம். இத்தகு கற்றூண்களைப் பிறவிடங்களில் காணல் அரிது.

இக் கோயிலின் கோபுரம் சிற்பக்கலைக்கு ஓர் எடுத்துக்காட்டு. கோபுரம் வானை முட்டுமோ என்ற ஐயம் எழும். அதன் உயரத்தைப் பார்த்தால், கோபுரத்திலே ஒன்றன்மேல் ஒன்றாக ஏழடுக்குகள் இருக் கின்றன. ஒவ்வொரு அடுக்கிலும் சித்திர வேலைப்பாடுகள் அமைந் துள்ளன. அச்சித்திரங்கள் வரலாறு கூறும் வனப்புப் பெற்றனவாகும். அக்கோபுரம் கலையின் கொடுமுடி. அண்ணாந்து பார்க்கவொண்ணாத அருங்கலைக் களஞ்சியம். இத்தகு சிறப்பைத் தன்னகத்தே கொண்ட இக்கோயில் கலைத் தெய்வத்தின் பணியோ எனத் தோன்றும்.

பின், நாகர்கோயில் சென்றோம். நாகராசர் கோவில் மிகவும் சிறப்புற்றுத் தென்பட்டது. நாகர்கோவில் பேருந்து வண்டி நிலையம் (Bus Stand) சென்னைப் புகைவண்டி நிலையம் போல் (Madras Central Station) வசதிகளுடன் பெருவனப்பாகத் தோற்றமளித்தது.

பின் அங்கிருந்து திருவனந்தபுரம் சென்றோம். அனந்த பத்மநாப சுவாமி, சீதேவி, பூதேவி இருபக்கங்களிலும் அமர்ந்திருக்க பள்ளிகொண்டிருக்கும் பரவசக் காட்சி இன்றும் அகக்கண்களில் அருளுடன் முழுமையாகத் திகழ்ந்துகொண்டிருக்கிறது. கவுண்டினியர் அத்திரி முனிவர் அப்பெருமானை வழிபட்டு நிற்கின்றனர். உற்சவ மூர்த்தி முழுவதும் தங்கத்தாலேயே அமைந்திருந்தது. மூன்று வாயில் களின் வழியேதான் அப்பெருமானின் திருமுகம், திருமார்பு, திருப்பாதங் கள் ஆகிய அங்கங்களைத் தனித்தனியே நின்று பார்க்கவேண்டும். பாலகிருஷ்ணனை வணங்கினோம். அனைத்தும் வெளியில் கண்ணாடி. கண்ணாடியில் சித்திரக்கலை, தாண்டவமாடியது. கோவிலுக்குள் மின்சார விளக்கே இல்லை. அனைத்தும் சரவிளக்கே. மிக மிகப் பெரிய இரண்டு வெண்கலச் சரக்குத்துவிளக்குகள் இருக்கின்றன. கோவில் மேல்நிலை முழுவதும் பித்தளைத் தகடுகளால் வேயப்பட்டிருந்தது வியப்பிற்குரியதாகும்.

சந்நிதி வீதியில் விசித்திரமான கெடியாரம் ஒன்றைப் பார்த்தோம். மணி அடிக்கும் முறை விந்தையானது. மனித உருவம் வாய் திறந்து, இருபக்கங்களிலும் உள்ள ஆட்டுக்கடா உருவங்கள் மணியை அடிக்கும். ஏனைய காலங்களில் அனைத்துருவங்களும் அசைவற்றிருக்கும்.

பின்பு, பொருட்காட்சி சாலைக்குள் (Museum) நுழைந்தோம். அங்கு, உயிருள்ள ஒட்டகச்சிவிங்கி, நீர்யானை, காண்டாமிருகம், புலி, வரிக்குதிரை, நெருப்புக் கோழி, மனிதக்குரங்கு முதலானவற்றைக் கண்டுகளித்தோம். பின், கடற்கரையை அடைந்தோம். பகவதி அம்மன் கோவிலைக்கண்டு வணங்கினோம். முகமதியர் பள்ளிவாசல், பல்கலைக்கழகக் கட்டடம், மாநிலச் சட்ட மன்றம், இரசாயனத் தொழிற்சாலை, இரப்பர் தொழிற்சாலை, மீன் காட்சி, விமான நிலையம், கோட்டை, வானொலி நிலையம், இன்னோரன்னவற்றையும் பார்த்து மகிழ்ந்தோம்.

பிறகு, திருவனந்தபுரம் சென்னை புகைவண்டியில் பயணம் தொடங்கினோம். வர்க்கலை அடைந்தோம். நாராயண குருவுக்கு சிலைவைக்கப் பெற்றிருந்தது. நமது சனாதிபதி திரு. சாகீர்உசேன் அவர்களால் 19-12-67 ல் அவ்வுருவச்சிலை திறந்து வைக்கப் பெற்றமை கேட்டு மகிழ்ந்தோம். திறப்பு விழாவை யொட்டி, இருபத்தோரு நாட்கள் பொருட்காட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது, அவ்வமயம். பின், தென்காசியை அடைந்தோம். அங்கிருந்து குற்றாலம் அடைந்தோம். திங்கள் காலையில் குற்றால அருவியில் நீராடினோம். தேனருவி, சண்பக அருவி, வட அருவி, ஐந்தருவி, புலி அருவி என்ற ஐந்தருவிகளையும் கண்டு மகிழ்ந்தோம். கோவிலுக்குச் சென்றோம். குறும்பலா வீசரையும் குழல்வாய்மொழி அம்மையையும் கண்டு வணங்கினோம். பிறகு ஐந்து சபைகளையும் ஓவியங்களின் மூலம் கண்டு உவகையுற்றோம்.

(சித்திரசபை - குற்றாலம். பொன்னம்பலம் - சிதம்பரம். வெள்ளியம்பலம் - மதுரை. தாமிரசபை - இராசவல்லிபுரம். இரத்தினசபை - திருவாலங்காடு.)

பிறகு, அங்கிருந்து தென்காசி திரும்பினோம். எங்கள் இருவரிடமிருந்தும் நண்பர்–திரு. இரா. சங்கரசுப்பிரமணியன் பிரியாவிடை பெற்று அவரது ஊர் போய்ச்சேர்ந்தார். அங்கு மூவர் இருவரானோம். பின் புகைவண்டி மூலம் மதுரைக்கு வந்தோம். வரும் வழியில் புகைவண்டியிலிருந்தபடியே சங்கரன் கோவில், ஸ்ரீ வில்லிபுத்தூர், திருத்தங்கல் ஆகிய இடங்களில் எழுந்தருளியிருக்கும் எம்பிரான்களின் திருக்கோயில் இராசகோபுரங்களைக் கண்டு, களிகூர்ந்து, மனதால் நினைந்து மாண்புற வழிபட்டோம். மார்கழித்திங்கள் நண்பகல் நேர

மாதலால் கோவிலுக்குள் சென்று பார்க்க இயலாமை எண்ணியும், போதிய காலமில்லாத குறையினுலும், மற்று மொருமுறை வந்து வணங்கிக் கொள்ளுவோம் என்ற நினைவோடும் ஊர் திரும்பினேம். பிறகு, மீனுட்சியம்மன் ஆலயத்தைக் கண்டு வழிபட்டோம். அங்கிருந்து காரைக்குடி வந்து அன்றிரவே கண்டனூர் வந்து சேர்ந்தோம். எங்கள் இன்பப் பயணம் இனிதே முடிவுற்றது. எல்லாம் வல்ல இறையருளே இதற்குக் காரணம். "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்பது அப்பர் பெருமான் திருவாக்கு.

[கட்டுரையாளர் இப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியர்]



(மாணவர் வரைந்த படம்)

"உயிரிற் சிறந்தன்று நாணே; நாணிற்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்றே"

— தொல்காப்பியம்.

# நம்நாட்டுக் கல்வியும் அயல்நாட்டுக் கல்வியும்

*வெ. இராமசாமி*

பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. சுந்தரேசன் அவர்கள் வெள்ளி விழா மலருக்கு கட்டுரையோ கவிதையோ எழுதித் தர வேண்டுமென்று கேட்டெழுதியபொழுது, ஒரு கட்டுரை எழுத வேண்டும் என்று எனக்கு அளவிலாத ஆசை. ஆனால் தமிழ்நாட்டை விட்டு வெளிநாடு சென்று எட்டாண்டுகள் ஆகிவிட்டன. கரும்பினும் இனிப்பான கன்னித் தமிழில் கட்டுரைகள் வரைந்தோ, செவிக்குண வூட்டும் செந்தமிழில் சொற்பொழிவாற்றியோ, பதினான்கு ஆண்டு கள் ஆகிவிட்டன. இருப்பினும், சிட்டாள் ஆச்சி வெள்ளிவிழா மலரில், இல்லையென்று சொல்லாது, எண்ணத்தை என்னாலியன் றவரை வண்ணத்தமிழில் வடிக்க முற்படுகின்றேன்.

இருபத்தைந்தாண்டுகளுக்கு முன்பு, வள்ளல் வீரப்ப செட்டியாரவர்களின் நிறைந்த உற்சாகத்தினாலும், மிகுந்த பொருளு தவியினாலும், இன்று பேருடன் விளங்கும் சிட்டாளாச்சி உயர் நிலைப்பள்ளி உண்டாக்கப் பெற்றது. அன்று முதல் இன்று வரை ஆயிரக்கணக்கான மாணவர்கள் கல்வி பயின்று பின்னர் அறிவைத் தேடிப் பல்கலைக் கழகங்கள் சென்று இன்று தம் வாழ்க்கையில் ஈடு பட்டிருக்கின்றனர். அவர்களில் நானும் ஒருவன். நான் பயின்ற பள்ளியினை எண்ணும் பொழுதும், கருத்துடன் கல்வி போதித்த ஆசிரியர்கள் உடன் படித்த நண்பர்கள் ஆகியோரை நினைக்கும் பொழுதும், மகிழ்ச்சியும் பெருமையும் மட்டறப் பொங்குகின்றன. பள்ளியில் படித்துப் பலன் கண்ட மாணவர்கள் எல்லோரும், கல்வி யினைத் தேடிவந்தோருக்கு வாய்ப்பளித்த வள்ளல் வீரப்ப செட்டியா ரவர்களுக்கும், அன்புடன் அறிவு தந்த ஆசிரியர்களனைவருக்கும், என்றும் கடமைப்பட்டிருக்கின்றோம்.

உயர்நிலைப் பள்ளியின் அருமையினை வெள்ளிவிழாவாகக் கொண்டாடும் இந்த நேரத்தில், அனுபவத்தினால் அறிந்த, சிந்தனை யைத் தூண்டும் சில கருத்துக்களை இக்கட்டுரையின் மூலம் அறிவிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். உயர்நிலைப்பள்ளியை விடுத்துச் சென்னையில் இலயோலாக் கல்லூரியிலும், சிறப்பாக சென்னைத் தொழில் கல்லூரியிலும் படித்த பொழுது மற்ற மாகாணத்தைச் சேர்ந்த இந்திய மாணவர்களுடன் பழக எனக்கு வாய்ப்புக்கிடைத்தது. தாய் நாடு விட்டு அமெரிக்காவிற்கு வந்த பின்னர் அமெரிக்க ஐரோப்பிய

மாணவர்களுடனும், மற்ற தேசத்தவர்களுடன் பழகவும் ஒன்ருக வேலை செய்யவும் மதிப்பற்ற வாய்ப்புக் கிடைத்தது. தருணம் கிடைத்த பொழுதெல்லாம், மற்ற தேசத்து மாணவர்களுடன் அவர்களுடைய கல்வித் துறையினைப்பற்றி ஆவலுடன் ஆராய்ந்து பேசுவேன். அமெரிக்கநாட்டுப் பல்கலைக்கழகங்கள் மட்டுமின்றி நாங்கள் வசிக்கும் இவான்ஸ்டனில் உள்ள தொடக்க உயர்நிலைப் பள்ளிகளின் (Primary High School) கல்வி முறைகளையும் கருத்துடன் கவனித்து வந்தேன். நம் நாட்டு மாணவர்களனைவரும் பள்ளியில் தாய்மொழியைத் தவிர மற்ற பாடங்களை மனப்பாடம் செய்து மறக்காமல் திரும்ப எழுதுவதில் நிபுணர்கள். இதற்குக் காரணம் நம் நாட்டுக் கல்வி போதிக்கும் முறையே எனக்கு இன்னும் நன்ருக நினைவிருக்கின்றது. ஆங்கிலத்தேர்வில் எப்பொழுதும் கடிதம் ஒன்று எழுதவேண்டும். நாங்கள் எல்லோரும் சில கடிதங்களை - உதாரண மாக, நண்பரை விடுமுறைக்கழைப்பது, அகில உலக சங்கத்தைப் பற்றி அன்பருக்கறிவிப்பது என்று-எதிர்பார்த்து தயார் செய்து கொண்டு தேர்விற்குச் செல்லுவோம். எதிர்பார்த்த கடிதங்கள் தேர்வில் வந்தால் மிகவும் அழகாக வினுவிற்கு விடையிறுப்போம். புதிதாக ஏதாவது கடிதம் எழுதச் சொன்னுல் அநேகமாக மாணவரனைவரும் சொந்த நடை யில் பதில் எழுதுவதற்குள் சோர்வடைந்து விடுவார்கள். ஐரோப்பிய நாடுகளிலோ, அமெரிக்காவிலோ, பள்ளி மாணவர்கள் மனப்பாடம் செய்வது மிகவும் ஆபூர்வம். சிறுவர்களாக இருக்கும்பொழுதே எதையும் கற்றுக்கொள்ளும் பொழுது புரிந்துகொள்ளாமல் மேலும் மேலும் படிக்கமாட்டார்கள். படிப்பதைச் சிந்தித்து அறிந்துகொண் டால் மறக்காமல் மனப்பாடம் செய்யவேண்டிய அவசியமில்லை யல்லவா? மற்றும், இவர்களைக் கேள்விகள் ஏதாவது கேட்டால், சிந்தித்து அவசரமின்றிச் சொந்த மொழியில் விடையளிப்பார்கள். இப்படி, சிறுவர்களாக இருக்கும்பொழுதே, தானே சிந்திக்கும் திறனை யும் தனித்து நிற்கும் தன்மையையும் ஊக்கமளித்து வளர்த்து வந்தால் பிற்காலத்தில் தங்களுடைய திறமையினுலே புதிய நுட்பங் களையும், கருவிகளையும், ஆராய்ச்சி, பரிசோதனை செய்யும் விதங் களையும் உருவாக்கமுடியும். வாழ்நாட்களில் முன்னுக்கு வரவும் மிகவும் எளிதாக இருக்கும்.

பல்கலைக்கழகத்தில் பயிலும்பொழுதோ, அதற்குப் பின்னரோ, எதையும் படிக்கும் பொழுது, அதை முழுதும் புரிந்து கொள்ளாமல் அறிந்துகொள்ளும் பழக்கத்தை மனப்பாடம் செய்யும் பழக்கத்தை- மறப்பது மிகவும் கடினம். எதையும் படிக்கும்பொழுது, ஏன்? எதற்காக? எப்படி? என்று கேள்விமேல் கேள்வி கேட்க வேண்டும். விடைதெரியாத வினுக்களுக்குள்ள விபரத்தைபுத்தகசாலைக்குச் சென்று புதிய புத்தகங்களைப் படித்துப் புரிந்துகொள்ளவேண்டும். எண்ணற்ற மாணவர்கள், எங்களுடைய நோக்கம் தேர்வில் தவருமல் வெற்றி பெறுவதே' என்பார்கள். இந்த மனப்பான்மை முற்றிலும் தவறு. மற்றும் பலர் 'கல்விமுறைகளை எங்களால் மாற்ற முடியாது. என்ன செய்வது? என்பார்கள். மாணவர்களால் போதிக்கும் முறையினை

மாற்ற முடியாவிட்டாலும் தம்முடைய படிக்கும் பழக்கவழக்கங்களை மாற்ற இயலும்.

இன்றைய இருபதாம் நூற்றுண்டில், கணக்கற்ற கணக்கு விபரங்களையும், எண்ணற்ற செய்திகளையும், எத்துணை நாட்கள் வேண்டுமாளுலும் 'ஞாபக உபாயங்களில்' (Memory Devices) சேகரித்து வைக்கமுடியும். மற்றும் மனிதனுக்கு மாதக்கணக்காகும் விளுக்களுக்கு, விரைவில் சில நிமிடங்களுக்குள் பதிலளிக்கும் நூதன இயந்திரங்களை (கம்ப்யூடர்) மனிதனே கண்டுபிடித்திருக்கின்றுன். இப்படி நம்பமுடியாத நூதன இயந்திரங்களை மனிதன் தன்னுடைய புத்திசாலித்தனத்திஞலும் கற்பனையாலும் உருவாக்க வேண்டும். என்னதான் கம்ப்யூடர்கள் நாம் செய்யும் வழக்கமான வேலை முறைகளையும் விளுக்களுக்கு விடைகளையும் துரிதமாகச் செய்தாலும் நாம் எப்படி இந்த விளுவிற்கு வழிதேட வேண்டும் என்று வழிசொல்லா விட்டால் அதற்கு ஒன்றும் செய்யத் தெரியாது. அது ஒரு இயந்திரம் தானே! சிந்திக்கும் தன்மை மனிதனுக்குத்தான் உண்டு. இந்தத் திறமையால்தான் நாம் இன்று இவ்வளவு முன்னேறியிருக்கிருேம். இந்தத் தன்மையைச் சிறுபிள்ளைகளாய் இருக்கும் பொழுதே ஊக்கமளித்து வளர்த்து வரவேண்டும். பின்ஞல் காரியங்களைச் சாதிக்கப் போதுமான சிந்திக்கும் திறமையையும் தனிப்பட்ட தன்மையையும், உயர்நிலைப் பள்ளியிலே தொடங்கவேண்டும். இந்த முடிவையடைய ஒரு வழி-எதையும் படிக்கும் பொழுது சிந்தித்து நன்கு புரிந்து கொள்ளுவதே; புரியாவிட்டால் முழுதையும் நன்கு அறிந்துகொள்ளும் வரை ஆராய்ந்து படிக்க வேண்டும். தேவையாஞல் மற்ற நூல்களைப் பார்த்து விளுவிற்கு விடைகாணவேண்டும். இப்பழக்கம் முதலில் கடினமாக இருப்பினும், 'முயன்ருல் முடியும்' என்ற நோக்கத்துடன் ஈடுபட்டால், முடிவில் கட்டாயம் பயனடைய முடியும் என்பது என்னுடைய அசைக்க முடியாத எண்ணம்.

சிந்தனையில் தோன்றிய சில கருத்துக்களை இக்கட்டுரை மூலம் வரைய வாய்ப்பளித்த தலைமை ஆசிரியரவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

[கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவர்; பி. எஸ். ஸி. பட்டப்படிப்பில் ஆரணி அரசரின் தங்கப் பதக்கம் பெற்றுர். (Jahirdar of Arni goldmedal) பல பொருளுதவிச் சிறப்புக்களும், பலபட்டங்களும் பெற்று 1960 ஆம் ஆண்டு அமெரிக்கா சென்ருர். அங்குப் பல்வேறு பல்கலைக் கழகங்களிற் பணியாற்றிய அவர், இப்பொழுது தன் ஆராய்ச்சி நிறைவெய்தி டாக்டர் பட்டம் பெறும் நிலையில் அமெரிக்க நாட்டில் உள்ளார்.]



# தொழிலும் தொழிலாளரும்

பெரி. அண்ணுமலை, பி. ஏ, டி. எஸ். எஸ். ஏ.

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு தொழிலும், விவசாயமும் இன்றியமையாத இரு துறைகளாகும். இந்த இரு துறைகளிலும் அமைதி நிலவி அதில் ஈடுபட்டிருப்போர் ஊக்கத்துடன் உணர்வுடன் ஒன்றிச் செயலாற்றினுல்தான், உற்பத்தி பெருகி உயர்வு காண முடியும். பிற நாடுகளுடன் ஒப்பு நோக்குமிடத்து, நமது சிக்கல்கள் தனித்தன்மை பெற்றவையாக விளங்குவதைக் காணமுடியும். பல நூருண்டு காலம் அந்நியரின் ஆட்சியிலே அடிமைப்பட்டுக்கிடந்த நாடு விடுதலையடைந்து 21 ஆண்டுகளே ஆகின்றன. சுரண்டு தலையே எண்ணமாகக் கொண்டிருந்தமையின், எத்துறையிலும் வளர்ச்சியைக் குறிக்கோளாக வைத்து முந்தைய அந்நியர் ஆட்சி செயல்படவில்லை. எனவே சுதந்திரம் பெற்ற பிறகே எல்லாத் துறைகளிலும் வளர்ச்சிபெற வேண்டிய ஓர் கட்டாயத்துக்கு உள்ளாஞேம். திட்டங்கள் பல தீட்டி, வளர்ச்சிக்கு வேண்டிய எத்தனையோ துறைகளில் முயன்றபோதிலும், வளருகின்ற மக்கள் தொகைப் பெருக்கம், பிற துறை ஆக்கங்களைவிட மிகுதியாக இருப்பதால் நாம் எந்த ஒரு துறையிலும் தன்னிறைவு பெற இன்று வரை இயலவில்லை. அயலவர் கையையே எதிர்பார்க்கும் அவல நிலைக்கு ஆளாகிநிற்கிரேம். இந்நிலை மாற, நாட்டுக் குடிமகன் ஒவ்வொருவரும் தனக்கெனச் சில விதிமுறைகளை (Self discipline) வகுத்துக்கொள்ள வேண்டும். தொழில் துறையில் சிறிது தொடர்புள்ளவன் என்ற முறையில் பிறதுறையினை விடுத்து நான் ஈடுபட்டுள்ள துறையில் நமது சென்னை மாநிலத்தின் மாகாணத்தின் இன்றைய நிலை என்ன என்பதைக் கூற முயல்கிறேன்.

தொழில் துறையில், முதலீடு செய்வோர், தொழிலாளர், அரசு என்ற மூவரும் இன்றியமையாத அங்கம் வகிப்பவராவர். நாட்டின் நிலையுணர்ந்து தேவைகளறிந்து, தக்க திட்டம்தீட்டி முதலீடு செய்தல், முதலீடு செய்வோரின் கடமை, செய்திருக்கின்ற முதலீட்டுக்குத் தகுந்த முறையில் உண்மையுடன் உழைத்து ஈடுபட்ட தொழில் உயர, அதன் வாயிலாகத் தங்களை உயர்த்திக்கொள்வது தொழிலாளரின் கடமை. இவ்விருசாராரும் ஈடுபட்டுள்ள துறையில் அமைதியை ஆக்கிக் காத்துவருவது அரசினுடைய கடமை. இம் மூவரும் ஒன்றி ஒருங்கிணைந்து செயலாற்றினுல்தான் தொழில் வளம்பெறும். பொருளாதாரம் சிறக்கும். நாடு நலமுறும்.

நமது மாகாணம், நாடு விடுதலை பெற்றதிலிருந்து பிற மாகாணங்களுடன் ஒப்பு நோக்குமிடத்துத் தொழில் துறையில் மிக முன்னேற்றம் பெற்று வந்துள்ளது. நமது தொழிலாளர் ஆற்றல் மிக்கவர்; எளிதில் எதையும் கற்றுணர்ந்து கட்டுப்பாட்டோடு கண்ணியமாகப் பணிபுரிபவர்; தொழில் தகராறுகளை இயன்றவரை தவிர்ப்பர்; தவறி வந்த தகராறுகளை வன்முறையின்றி அமைதியாக தீர்த்துக் கொள்வர் என்ற நல்ல பெயரைப் பிற மாநிலத்தவரிடமிருந்து பெற்றவர். ஆனால் இன்றைய நிலை என்ன?

தொழில் துறை முந்தைய அளவுக்குக் கடந்த சில ஆண்டுகளாக வளர்ந்திருக்கிறதா இல்லையா என்பது பொருளாதாரப் புள்ளி விவரங்களோடு விவாதிக்கவேண்டிய வேறொரு தலைப்பு. எனவே அதில் அதிகம் கருத்துச் செலுத்தாது, இருக்கின்ற தொழில்கள் இன்று அமைதியாக முன்பு போலச் செயல்படுகின்றனவா என்ற வினாவை எழுப்பின் அண்மையில் நடந்து முடிந்த, நடந்துவருகின்ற செயல்கள் இல்லை என்பதையே பதிலாகக் கூறும். காரணம் என்ன என்பதைக் காணுதலும், அதை நிறைவு செய்யும் வழிவகை என்ன என்பதைக் கோடிட்டுக் காட்டுவதுமே இக்கட்டுரையின் நோக்கங்களாம்.

'**கடமையைச் செய்து உரிமையைப் பெறு**' என்பது தொழிற் சங்கங்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட விதிகளில் ஒன்றாகும். ஆனால் இன்றைய தொழிற் சங்கத் தலைவர்கள் செய்துவருவது என்ன? "உரிமைக்காகப் போராடு; கடமையை மறந்துவிடு" என்பதே ஆகும். தொழில் நலத்தையும், தங்களைச் சார்ந்திருக்கின்ற தொழிலாளர் நலத்தையும்விட நமது தொழிலாளர் தலைவர்கட்கு அவர்கள் நலமும் அவர்கள் சார்ந்திருக்கின்ற அரசியல் இயக்கங்களின் நலமுமே மிகுதியாய்விட்டன. தொழில் துறையில் குழப்பத்தை ஏற்படுத்தி, ஒன்றுமறியா அப்பாவித் தொழிலாளர்களை அதில் பலிகொடுத்து, அதன் மூலம் தங்கட்கும் தாங்கள் சார்ந்திருக்கின்ற அரசியல் இயக்கத்திற்கும் ஒரு இன்றியமையாமையை ஏற்படுத்திக்கொள்வதை ஒரு கொள்கையாக வைத்து இன்றைய தொழிற் சங்கத் தலைவர்கள் செயல்படுகின்றனர். எனவே தொழில் துறையில் அமைதி நிலவ நமது தொழிலாளர் தலைவர்கள் தங்களது இந்தப் போக்கை மாற்றிக்கொண்டு தொழில் நலத்தையும், தங்களைச் சார்ந்திருக்கின்ற தொழிலாளர் நலத்தையும் எண்ணத்தில்கொண்டு இனியாவது செயலாற்றத் துவங்க வேண்டும்.

தொழிற் சங்கங்கள் அரசியல் இயக்கங்களைச் சார்ந்திருப்பது தொழில் அமைதிக்குத் கேடு விளைவிக்கும் செயல் என்பதை முன்பு பார்த்தோம். ஒரே தொழிலில் பலவேறு சங்கங்கள் இருப்பதும், தொழில் அமைதி இன்மைக்கு மற்றொரு காரணமாகும். பல்வேறு சங்கங்கள் இருக்கின்ற தொழிலில் மேற்குறித்த சங்கங்கள் தங்களுக்குள் உன்னைவிட நான் வலுவுள்ளவனா? என்னைவிட நீயா என்ற போட்டியையே எண்ணமாகக்கொண்டு, தொழிலாளர் நலனை மறந்து தங்களுடைய பலத்தைக் காட்டுகின்ற கருவியாக அப்பாவித் தொழிலாளர்களைப்

பயன்படுத்தி, அதன் மூலமாகத் தொழிலுலகில் அமைதியின்மையை ஏற்படுத்துகின்றன. எனவே இக்குறை நீங்க ஒரு தொழிலுக்கு ஒரு தொழிற்சங்கம் என்ற முறை மேலே நாடுகளில் உள்ளதுபோல நம் நாட்டிலும் விரிவாகப் பரவவேண்டும். அத் தொழிற் சங்கங்களும், அரசியல் இயக்கங்களின் தொடர்பில்லாதனவாய், தொழிலாளர் நலன் ஒன்றே எண்ணமாகக் கொண்டவையாக அமையின். இன்றைய தொழில் துறையின் அமைதியின்மை வெகுவாகக் குறையும்.

தொழிலாளர்கள், தாங்கள் தொழிற்சங்க உறுப்பினர்களாக ஆகும்போதே எந்த இயக்கம் தங்களுக்கென, தங்கள் நலனுக்கென, தாங்கள் சார்ந்துள்ள தொழிலுக்கென, உண்மையாகப் பாடுபடும் என்பதை நன்கு சிந்தித்து. அந்த இயக்கத்தில் உறுப்பினராகி அந்த இயக்கத்தை வலுவுறச் செய்தால் போலி இயக்கங்கள், தன் நலத்தை யும் அரசியல் நலத்தையும் மையமாகக்கொண்ட தொழிற்சங்க இயக் கங்கள் அழிந்துபோக நல்ல நல்ல வாய்ப்பாக அமையும். இதை நமது தொழிலாளர் மனத்தில் இருத்தி அவ்வழியில் செயல்படுவார்களாயின், தொழிலாளர்களைப் பலியாடுகளாக, அவர்களைத் தங்கள் கைப்பாவை களாக; தங்கள் சொக்கட்டான் காய்களாகப் பயன்படுத்தித் தங்களுக் கும், தங்கள் அரசியல் இயக்கத்திற்கும் ஆக்கமும், தொழிலாளர் களுக்கும் அவர்தம் நலனுக்கும் கேடும் பயக்கும் போலி இயக்கங்கள் ஒழிந்து, தொழில் துறையில் அமைதி நிலவும். தொழிலும் வளம்பெறும்.

தொழிலாளர் இயக்கங்களைப் பொறுத்தவரை எந்த நாட்டிலும் காணாத விந்தையொன்றை நம்நாட்டில்தான் காண்கிறோம். தொழிலில் உள்ள இடர்ப்பாடுகள் என்ன, அதிலுள்ள சிக்கல்கள் என்ன என்ப தையே அறியாத, தொழிலுக்குச் சிறிதும் தொடர்பே இல்லாத முழு நேர அரசியல்வாதிகள் தங்களைத் தொழிலாளர் தலைவர் என்ற நிலைக்கு உயர்த்திக்கொண்டு தொழிலுக்கும் தொழிலாளர்க்கும் நன்மை ஏதும் செய்யவில்லை என்றாலும் தங்களால் இயன்ற அளவு கேடுசெய்து வருகின்ற நிலையை நாம் கண்கூடாகக் காண்கிறோம். அண்மையில் நடைபெற்ற பல கதவடைப்புகளுக்கும் தொழிற்சாலை மூடுவிழாக் களுக்கும் இதுவே காரணம். ஒரு குறிப்பிட்ட தொழிலின் இன்றைய நிலை என்ன, அது எதிர்நோக்குகின்ற இடர்ப்பாடுகள் எத்தனை என் பதையெல்லாம் ஒருசிறிதும் எண்ணிப்பாராது (எண்ணிப்பார்க்க நேரமோ, அதுகுறித்து அனுபவ அறிவோ இன்மை காரணமாக) தொழிற்சாலையின் பொருளாதார நிலைக்கு ஒரு சிறிதும் ஒவ்வாத கோரிக்கைகளை முன்வைத்து, அப்பாவித் தொழிலாளர்களை அந்தக் கோரிக்கைகளைப் பெற்றுத் தருவதாக நம்பவைத்து வீண் தகராறுகளை உண்டாக்கி, வேலை நிறுத்தம் என்னும், கடைசியாக நியாயமான காரணங்களுக்காகப் பயன்படுத்தவேண்டிய இறுதி ஆயுதத்தை முத லிலேயே பயன்படுத்துகின்றனர். அதனால் உற்பத்தியைக் கெடுத்து, கொடுக்கவேண்டும் என்ற எண்ணமிருந்தபோதும் பொருளாதார நிலை அனுமதிக்க முடியாத காரணத்தால் அவர்களது கோரிக்கைகளை நிறைவேற்ற இயலா நிலையிலிருக்கும் நிர்வாகத்தினரை கதவடைப்போ அல்லது நிலையத்தை மூடுதலோ என்ற நிலைக்கு வரவைக்கின்றனர். கதவடைப்போ அல்லது நிலைய மூடுதலோ, இதனால் பாதிக்கப்படப்

போகின்றவர்கள் நிச்சயமாக அந்தத் தலைவர்கள் அல்லர். ஏனெனில் அவர்களுக்கு அதனால் ஏற்படுகின்ற இழப்பு ஒன்றுமில்லை. ஒரு தொழிற்சாலையை மூடியாய்விட்டது என்றால் அவர்கள் கவனம் அடுத்த தொழிற்சாலையின்மீது திரும்பிவிடும். ஆனால் தொழிலாளர்களோ வேலையிழந்து வீதியில் நிற்கும் அவலத்திற்குள்ளாகி, செய்தசெயலுக்கு காலங்கடந்து நொந்து வருந்துகின்ற நிலையைக் காண்கிறோம். இந் நிலை மாற அரசியல் தலைவர்கள் தொழிற் சங்கத் தலைவர்களாகும் நிலை ஒழியவேண்டும். தொழிலாளர்கள் தங்களுக்குள்ளேயே தகுதி அறிந்து தங்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அவ்விதம் தேர்ந்தெடுக் கப்படும் தலைவர் தொழிலாளரின் ஒருவராக இருப்பதால் அவர் அத் தொழிலில் உள்ள இடர்ப்பாடுகள், நல்லவை கெட்டவை அனைத்தை யும் அனுபவ மூலமாக உணர்ந்திருப்பதால், வீண் தகராறுகளைத் தவிர்த்து நிர்வாகத்தினருடன் நல்ல உறவினைப் பலப்படுத்தித் தொழி லுலகில் அமைதியை நிலைநாட்ட முடியும்.

தற்போதைய தொழிற் சங்கத் தலைவர்கள் தொழிலாளிக்கு வேலை போகும்வரை (ஏதேனும் ஒழுங்கீனம் காரணமாக) வாளா இருந்துவிட்டுப் பிறகு அவரை வேலை 'நீக்கம்செய்யக்கூடாது' 'திரும்பி எடு' என்று கோரிக்கையை முன்வைத்து அதன் காரணமாக வேலை நிறுத்தம், கெரோ போன்ற செயல்களில் ஈடுபடுவதைக் காண்கிறோம். அண்மையில் 'இந்து' செய்தித்தாளில் நடைபெற்ற செயல்கள் இதற் கோர் நல்ல எடுத்துக்காட்டு. தொழிற் சங்கத் தலைவர்கள் தொழிலா ளர்களை ஒழுங்கீனமான செயல்களில் ஈடுபடாவண்ணம் காலத்தால் அவர்களுக்கு அறிவூட்டி, ஒழுங்கீனமான செயல்களுக்காக யாராவது வேலை நீக்கம் செய்யப்பட்டால் அவர்களுக்காகத் தொழிற்சங்கம் போராடாது என்று தங்கள் உறுப்பினர்களுக்கு உணர்த்தி நேரிய வழியிற் செயல்பட்டால் பெரும்பாலான தொழில் தகராறுகள் தோன் றவே இடமில்லாதுபோய்விடும். இதனைச் செய்வார்களா நம் தொழி லாளர் தலைவர்கள் என்று சொல்லிக்கொள்பவர்கள்?

மறைந்த மாமேதை ஜான் கென்னடி தனது பதவி ஏற்பு உரையிலே குறிப்பிட்டார் Dont ask what the country can do for you; ask yourself what you can do for your country

"என்று, அதைப்போல் இப்போதைய நம் தொழிலாளர்களும் அவர்கள் தலைவர்களும் தொழில் நமக்கு என்ன செய்யும் என்ற தற் போதைய கேள்வியை விடுத்து, தொழிலுக்கு நாம் என்னசெய்வோம் என்ற கேள்வியை என்று கேட்கத் துவங்குகின்றார்களோ அன்றி லிருந்து நாம் தொழிலில் சிறந்த அமெரிக்காவாக, ஜப்பானாக, கிரேட் பிரிட்டனாக, மேற்கு ஜெர்மனியாக ஆகும் நாள் அதிக தூரத்தில் இல்லை என்பதை உறுதியாக நம்பலாம்.



[கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவர். இப்பொழுது மதுரை டி. வி. எஸ் நிலையத்தில் துணைத்தனி அலுவலராகப் (Assistant Personnel Officer) பணியாற்றிவருகிறார்.]

# இப்படித்தான் இருக்க வேண்டுமா?

*K. R. பார்த்தசாரதி*, B.A., B.T.

ஆம். ஆங்கிலம் இப்படித்தான் இருக்கவேண்டும். வேறு எப்படி இருந்தாலும் அது நல்ல ஆங்கிலம் (Good English) ஆகாது. உண்மையிலேயே தரமான ஆங்கிலம் (Standard English) என்று ஒன்று உண்டு. தரமான ஆங்கிலம் என்ருல் என்ன பொருள்? அப்படி ஒன்று இருக்கிறதா? அது தேவைதாஞ? என்பதைப்பற்றி எல்லாம் நாம் இங்கே விவாதம் செய்ய வேண்டாம். ஏனென்ருல் அந்தக் கேள்வி ஏற்கெனவே பலரால் கேட்கப்பட்டு, விவாதிக்கப்பட்டு கடைசியில் கைவிடப்பட்டு விட்டதாகத் தெரிகிறது.

இங்கிலாந்து நாட்டில் எந்தப்பாகத்தில் வாழ்பவரும் ஆங்கிலம் பேசுவர், எழுதுவர், புரிந்து கொள்வர். அவருக்குச் சொந்தமான அந்த ஆங்கிலம் தரமான ஆங்கிலம் என்று அவர் விவாதித்தால், அதில் வியப்பில்லை. ஆனுல் ஆங்கிலம் ஒரு கலப்பு மொழி (mixture of languages) என்பது நாம் அறிந்த உண்மை. இலக்கணம் (Grammar) உச்சரிப்பு (Pronunciation) எழுத்துக் கூட்டல் (Spelling) மொழியின் சொற்கோவை (Vocabulary) என்ற நான்கும் ஆங்கில மொழியில் மிகவும் இன்றியமையாதவை. மேற்கூறிய நான்கிலும் மொழிக்கு உரிய நாட்டிலேயே, வேறுபாடுகள் காணப்படுகின்றன. உதாரணமாக 'It is I' என்பது இலக்கணப்படி சரியான வாக்கியம்; ஆனுல் 'It is me' என்று சொல்லக் கூடாது என்று எந்தச் சட்டமும் இல்லாததால் வழக்கில் பின் கூறப்பட்ட வாக்கியமே நல்ல ஆங்கிலம் (Good English) என்று வழங்கப்படுகிறது. இலக்கணப்படி ('The Committee is...') என்றுதான் சொல்ல வேண்டும். ஆனுல் 'The Committee are...' என்று சொல்லுவதும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. இங்கே ஒன்று குறிப்பிட விரும்புகிறேன். அந்த 'Committee' யில் உள்ள நபர்கள் யாவரும் வெவ்வேறு நோக்குடன் இருப்பரே ஆனுல், 'The committee are...' என்றுதான் சொல்லவேண்டும். அதே சமயத்தில் அந்த 'committee' யில் உள்ள அனைவரும் ஒரே நோக்குடன் இணைந்து செயலாற்றுங்காலையில், 'The Committee is ' என்றுதான் சொல்ல வேண்டும். இதைப்போன்று 'A number of people were killed' என்று சொல்வது நல்ல ஆங்கிலம். ஆனுல் இலக்கணப்படி தவறு! மற்றும் ஒரு குழப்பம்! ஆங்கிலத்தில் definite article ஆகிய 'the' யை எப்படி ஆள்வது. என்பதுதான். இதோ இந்த வாக்கியத்தைப் பாருங்கள். A pupil or a teacher goes to school (i e to learn or to teach) but a parent or an inspector goes

to the school. சிறிது நேரம் சிந்தனை செய்தால், இந்த 'the' யின் பொருள் புரிந்துவிடும். ஆகவே இப்படிப்பட்ட ஒரு குழப்பம் எங்கிருந்து வந்தது? ஏன் வந்தது? அதுதான் இயற்கை!

'Them books are mine' என்றோ அல்லது 'Child' என்ற வார்த்தைக்கு 'Childer' என்று பன்மை (Plural form) என்றோ சொன்னால் இவைகளை யாரும் ஆங்கிலம் என்று ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஏனெனில் இவைகளுடைய சரியான வார்த்தைகள் உங்கள் செவிகளில் விழுந்து, பழக்கத்திற்கு ஆளாகி, உங்கள் உதடுகளிலிருந்து உங்களையும் அறியாமல் வந்துவிடும். அப்படி அவைகள் வரவில்லை என்றால் ஆங்கில மொழியில் நமக்குத் தேர்ச்சி போதாது என்றுதான் பொருள்.

அடுத்தபடியாக, ஏன் அப்படித்தான் இருக்க வேண்டும் என்பதற்கு, வரலாற்று அடிப்படையிலும் சமுதாயப் பண்பாட்டு அடிப்படையிலும், நாம் பல காரணங்கள் கூற இயலும். இயற்கையாகவே ஆங்கிலம் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று இங்கிலாந்து நாட்டில் தேசிய அடிப்படையில் பலர் அமைக்க முயன்று வெற்றியும் கண்டு இருக்கிறார்கள். பதின்மூன்று, பதினான்காம் நூற்றாண்டுகளில் ஆங்கிலம் எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றி ஒரே குழப்பமாய் இருந்தது. ஆனால் அதே நேரத்தில் முதலாம் எட்வர்டு (Edward I) மூன்றும் எட்வர்டு (Edward III) ஆகிய மன்னர்களின் முயற்சிகளின் காரணமாக, ஒருதரமான மொழியை அடைய முடிந்தது. இந்த முயற்சி பல்லாண்டுகள் நடந்தும், கி. பி. 1500ல் தான் இங்கிலாந்துநாடு ஆங்கில மொழியில் ஒரு தரத்தை (Standard) எட்ட முடிந்தது என்று சொல்லலாம். இந்தப் பெருமை அழியாப் புகழ் பெற்ற ஆங்கிலக் கவி சாசர் (chaucer)க்கும் முதன் முதலில் அச்சு இயந்திரத்தைக் கண்டுபிடித்து, அதன் மூலமாக மொழி வளர்ச்சிக்கு உதவிய 'காக்ஸ்டன்' (Caxton) என்பவரையும்தான் சாரும். ஏழாம் ஹென்றி மன்னர் (Henry VII) நிலமானிய முறையை ஒழித்துதவியதால், காக்ஸ்டன், நாட்டில் ஆங்கிலம் பலதரப்பட்ட விந்தையான மொழிகளில் (dialects) பேசப்படும் முறையை ஒழித்தார். இங்கே நாம் சாசர், நாட்டில் எந்தப் பாகத்தில் பேசப்படும் மொழியைக் கையாண்டார் என்று குறிப்பிடுதல் நலம். அவர், ஒரு சில வேறுபாடுகளுடன் கூடிய இலண்டன் மாநகர மக்கள் பேசும் மொழியையே ஒரு தரமான ஆங்கிலம் என்று கருதி அதையே கையாண்டார். அதுதான் அப்பொழுது, ஆக்சு போர்டு பல்கலைக் கழகத்திலும் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திலும் கையாளப்பட்டு வந்தது என்பது தெளிவு.

கி. பி. 1611 இல் வெளியிடப்பட்ட பைபிளின் அதிகார பூர்வமான வெளியீடு, ஒரு தரமான ஆங்கிலம் இதுதான் என்பதற்கு எடுத்துக்காட்டாகும். இக்காலத்திற்குச் சுமார் ஒன்றரை நூற்றாண்டுகளுக்குப் பிறகு, டாக்டர் ஜான்சன் (Dr. Johnson) வெளியிட்ட அகராதி இரண்டு பெரிய தொண்டுகளை ஆங்கில மொழிக்குச் செய்தது என்றால் மிகையாகாது. முதலாவதாக, அது சொற்களுக்கு உரிய

எழுத்துக்களை (Spelling system) வரையறுத்தது. இரண்டாவதாக, நல்ல ஆங்கிலச் சொற்கள் எவை, கீழ்த்தரமான ஆங்கிலச் சொற்கள் எவை, (low words) என்ற வேறுபாட்டை மக்களுக்கு விளக்கியது. சில ஆண்டுகளுக்குமுன் பேராசிரியர் H. C. வில்டு (H.C. Wyld) என்பவர், தரமான ஆங்கிலம் என்பது "நாடு (England) முழுவதிலும் குறிப்பிடத்தக்க ஒற்றுமை உணர்ச்சியுடன் சில சமுதாய எல்லைகளுக்கு உட்பட்ட மக்களால் பேசப்படும் ஆங்கிலமே ஆகும்'' என்று தம் புத்தகத்தில் கூறி இருக்கிறார். பேராசிரியர் டேனியல் ஜோன்ஸ் (Daniel Jones) என்பவர், பெரிய பொதுப் பள்ளிகளில் கல்விகற்ற சமுதாயத்தைக் கொண்டதற்கு இங்கிலாந்து நாட்டின் குடும்பங்களில் வழக்கமாகப் பெருமளவில் நாள் தோறும் பேசப்படுவதே தரமான ஆங்கிலம் என்று கூறுகிறார்.

ஆங்கில மொழி வளரும் மொழி. (growing language) என்கிறார்கள். எப்படி என்றால், பிற மொழிச்சொற்களைத் தன்னோடு சேர்த்துக் கொள்ளும் ஒரு பரந்த மனப்பான்மை அதற்கு உண்டு! ஆகவே ஒவ்வொரு நூற்றாண்டும் இம்மொழிக்கு ஏராளமான சொற்களைத் தந்திருக்கிறது. 18ம் நூற்றாண்டு இதில் சிறந்து விளங்குகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாடு, புதிய குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தியதும், வாணிகத் துறையைப் பெருக்கியதும் மொழிவளர்ச்சிக்குப் பெரிதும் உதவின. இன்றைக்கு 4,00,000 வார்த்தைகளைக் கொண்ட ஆக்ஸ்போர்டு அகராதியை நாம் பார்க்கிறோம். இதைத் தவிர விஞ்ஞான முன்னேற்றமும் மேலும் பல்லாயிரக் கணக்கான புதிய வார்த்தைகளை (technical words) அகராதிகளில் சேர்க்க இடம் அளித்திருக்கிறது. புதிய புலவர்களும், நாவலாசிரியர்களும், புதிய முறையில், வாக்கியங்களையும், சொற்களையும் அமைத்து, மொழியில் புதுமையைக் காணுகிறார்கள். மேலும், பல டொமினியன் அரசுகளும், அமெரிக்க ஐக்கிய நாடுகளும், வருங்காலத்தில் ஒரு புதிய திருப்பத்தையே உண்டு பண்ணி விடுவார்கள் போல் இருக்கிறது. ஆனால் உங்களுக்கு அமெரிக்க நாட்டு 'ஸ்டோர்' (Store) பிடிக்குமா அல்லது இங்கிலாந்து நாட்டின் ஷாப் (Shop) பிடிக்குமா? இலக்கணப்படி மொழியைக் கற்றுக் கொள்வதா அல்லது, வழக்கில் எல்லோரும் பேசும் மொழியைக் கற்றுக் கொள்வதா என்ற ஐயம் எழலாம், அருமை மாணவர்களே, உங்கள் ஐயத்தைப் போக்கி உரிய முறையில் ஆங்கிலம் கற்றுத் தருகிறோம். எங்கள் பள்ளிக்கு வாரீர் எனக் கூறி, அன்னை சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி வெள்ளி விழாச் சிறப்பு மலருக்கு இக்கட்டுரையை அன்னையின் திருவடி மலருக்கு அணிவிக்கிறேன்.

**வணக்கம்**

**[பள்ளியின் ஆசிரியர்]**



# பண்டைய அரசும் -
# ஆசிரியப் பெருமக்களும்.

குமாரி. *M.* **வஸந்தா** B. SC. இறுதி ஆண்டு

பண்டைக் காலத்தில் ஆசிரியர்களும் அரசர்களும் நண்பர்களாய், அன்பர்களாய் உயர்வு தாழ்வு கருதாது தோழமை பூண்டிருந்தனர். ஆசிரியப் பெருமக்கள் கூறிய அறிவுரையைப் புரவலர் பொன்னெனப்போற்றினர். ''புலவர் பாடாது வரைக என் நிலவரை'' என ஓர் மன்னன் வழங்குவானுனல், அந்நாளில் ஆசிரியர்களை மதித்திருந்த மதிப்பின் உயர்வு பாராட்டுதற்குரியனவாகும்.

ஒப்பற்ற மன்னனுக்கு ஆருயிர்த் தோழரான மோசிகீரனுர். முரசுகட்டிலிற் படுத்து உறங்கினுர். அக்கட்டிலில் யாருமே இருத்தல் படுத்தல் கூடாது. முரசும்-வெற்றி முரசு இருந்தற்குரிய இடம் அது. ஆதலால் இந்நிலையை அரசன் கண்டான். புலவரென்று அறியான். உறைவாளையெடுத்துக் கொண்டு ஓடோடி வந்தான். அவரைத் துணித்து இருதுண்டாக்க நெருங்கியவுடன் புலவர் எனக் கண்டான். களைப்போடு, வியர்வை வழிந்தோடுவதைக் கண்டான். வாளைக் கீழே எறிந்தான். அவர் களைப்புமாற, மேலும் அயர்ந்து துயில தன்கையால் வீசி நின்றுன். என்னே மன்னன் அன்பு! என்னே ஆசிரியரின் பெருமை!

வேருேர் மன்னன் தன் ஆசிரிய நண்பருடன் சொக்கட்டான் ஆடினுன். அரசன் தோல்வியுற்றுன். இளவேந்தனுக்குச் சினம் மிகுந்தது. சொக்கட்டான் தாயத்தால் அவர்மேல் எறிந்தான். ஆசிரியர் உடலிற் சிறு காயத்தை உண்டுபண்ணிற்று; வலியும் எடுத்தது. புலவர் வருந்தினுர்; வெருட்சி தோன்றிற்று. ''அரசே! உன் முன்னுேரெல்லாம் நல்ல செயல்களையே செய்தனர். உனக்கோ நல்லியல்பு இல்லை. அதனுல் உன் பிறப்பைக் குறித்து ஐயுறுகிறேன்'' என்று குத்தலாகப் பேசினுர். அரசன் தான் செய்த செயலை தவறென்று கருதினுன். ஆசிரியரை வணங்கி; செய்த தவறை மன்னிக்க வேண்டினுன், புலவர் மனம் பொன்போன்று பண்பட்ட தாதலின் அளவளாவினுர்; இருவரும் எப்போதும்போல் பழகி வாழ்ந்தனர். எதையும் நினைத்தால் ஆக்கவும் அழிக்கவும் வல்ல வேந்தனே ஆசிரியரிடம் காட்டிய பெருமதிப்பை என்னென்று இயம்புவது!

பிறிதொரு மன்னன், எதிரி, அரசன் குழந்தைகளை-நன்மை தீமை பகுத்தறியத் தெரியாத இளம்பருவ மக்களை - பால்போன்ற கள்ளங்கபட மற்ற இளஞ்சிறுர்களை-பகை காரணமாக யானையை விட்டு மிதிக்கச் செய்து கொல்ல எண்ணினுன். அதற்கென ஒரு காலமும் வரையறுக்கப்பட்டது. இக் காட்சியைக் காண கூட்டமும் கூடிற்று. இச்செய்தி அவ்வரசன் நண்பரான புலவர் ஒருவருக்கு எட்டிற்று. கேட்டதும் அவர் மனம் துடித்தது. வேந்தனிடம் விரைந்து சென்று "அரசே இவ்விரு குழந்தைகளும் பால்மணம் மாருப் பச்சிளங் கன்றுகள். இவர்கள் யானையைக்கண்டு, முன் அழுத அழுகையை மறந்து நகைக்கின்றனர். இத்திரளான மக்கட்கூட்டத்தைக் கண்டு அழுகின்றனர். தம்மைக் கொல்ல முன்னிற்கும் யானையைக் கண்டு மகிழ்ந்து, ஊறு செய்யாத மக்களைக் கண்டு வருந்தி நிற்கும் தன்மையுள்ள பேசும் பொற்சித்திரங்களுக்கு நன்றே, தீதோ பகுத்தறியும் தன்மை இல்லை. நான் சொல்வதைக் கேட்டு; சிந்தித்து செயல்படுக" எனப்பகன்றுர். ஆசிரியப் பெருமகனுர் கூறிய அறிவுரை மன்னன் சினத்தை மாற்றியது. குழந்தைகளைப் பாதுகாப்புடன் பெற்றோர்பால் அனுப்புவித்தான். ஆசிரியப் பெருமகனுரின் விழுமிய, நீர் நிறைந்த அறிவுரையன்றே மன்னன் பகையை மறக்கச் செய்தது. என்னே, ஆசிரியப் பெருமக்களின் அறிவுரை!

மற்றுமோர் காவலன், ஒரு முனிவரால் ஒரு நெல்லிக்கனி பெற்றுன். அக்கனி அதன் தன்மையால் மிக உயரியது. அக்கனியை உண்போரிடம்; நரை அணுகாது; திரை வராது; மூப்புத் தொடராது; இளமை நிலவும்; உடல் கட்டுற்ற திண்மையுடன் விளங்கும். இத்தகைய கனியைப் பிறர்க்குக் கொடுக்க யாருக்கும் மனம் வருமா? தாமேயன்றே உண்பர்! அவன் மனப்பண்பு, அவ்வழி சென்றிலது! நாட்டுக்கு நலம் செய்யும் நல்ல புலவருக்கு கொடுக்க நினைத்து, செந்தமிழில் கவிதைபாடி, அறநெறிகளை வளர்த்துவந்த ஔவை மூதாட்டிக்கு அக்கனியை ஈந்தான். என்னே! ஆசிரியர்பாற் கொண்ட அன்பின் கெழுதகைமை? பண்டைய மன்னர்கள் ஆசிரியர்களை எந் நிலையில் கொண்டிருந்தனர் காண்மின்!

வேறுேர்வேந்து; தன் மனைவியோடு பிணங்கி இருந்தான். தன் மனைவியோடு சேர்ந்து வாழாது காலங்கழித்துவந்தான். இதனை நினைத்து இளங்கொடி போன்ற அவ்வரசனின் மனைவி நீராடுவதில்லை; கோலங்கொள்வதில்லை; நல்லுடை புனைந்தாளில்லை. கூந்தலை வாரினுளில்லை; நறுமணப் பொருளைப் பூசினுளில்லை; பூ முடித்தாளில்லை; பொட்டிட்டாளில்லை. மதியை வென்ற அவள் திருமுகம்; அதற்குத் தோற்ற நிலையில்; "பாங்குலா முழு வெண் திங்கள் பகல்வந்த படிவம் போல்" ஒளி மழுங்கிக் காட்சியளித்தது. ஒருநாள் அவ்வேந்தனைக் காணச் சென்ற புலவர் ஒருவர்; இவளைக் கண்டார். குறிப்பால் விஷயத்தை அறிந்த புலவர் மன்னனிடம் ஓடோடிச் சென்று; அறவுரைகளை அன்புடன் மொழிந்து; அவன் மனநிலையை மாற்றி மனையாளோடு

கூடி இன்புடன் வாழச் செய்தார். யார் சொல்லுக்கும் செவி சாய்க்காத அரசன் ஆசிரியரின் அறவுரைக்கு செவிசாய்த்தான். புலவரின் நலச் சொல்லுக்கு பண்டைய காலத்தில் இருந்த நன்மதிப்பைக் காண்மின்!

இன்னும்; ஆசிரியர்களிடையினும், அரசர்களிடையினும் இவை போன்ற பற்பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளன. இவைகளெல்லாம் உண்மையாக நடந்த நிகழ்ச்சிகள். இந் நிகழ்ச்சிகளை யெல்லாம் நிரல்பட நம் மனத்துட்கொண்டு எண்ணுவோமானுல், நம் நாடும், அரசும், ஆசிரியர்களும், முற்காலத்தில் எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தார்கள் என்பது தெரியும்.

"தன்னைத் தானே உயர்த்துக" என்ற கீதா வாக்கியத்தை ஆசிரியப் பெருமக்கள் யாவரும் இதயத்தில் கொண்டு; தங்களது உயர்ந்த அறிவாற்றலாலும்; தன்னலமற்ற தியாகத்தாலும்; பரிசுத்தமான சேவையாலும் மக்கள் சமுதாயம் உயர்வடையப் பாடுபடுவார்களே ஆனுல் பண்டைப் பெருமை மீண்டும் வந்துசேரும் என்பது திண்ணம்.

வாழ்க ஆசிரியப் பெருமக்கள்!
வளர்க அவர்கள் அறப்பணி!

[கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவி]




(மாணவர் வரைந்த படம்)

உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா மடமை

# பெண் கல்வி

***P. சீனிவாசராவ்***

தமிழகம் தெய்வமணங்கமழும் தெய்வத் திருநாடு. இத் திருத் தமிழ்நாடு செய்த தவத்தின் பயனாக ஆடவரோடு ஒப்பப் பெண்டிரும் பண்டைக் காலத்தில் கல்வியில் சிறப்புற்று விளங்கினர். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, ஞானமும், மோனமும், அறிவும் அருளும், செம்மையும், சீர்மையும், மேலோங்கிக் கவியும், காவியமும் வீறுபெற்று வாழ வழி வகுத்தவர்கள் நமது தாய்க்குலமே ஆகும்.

''ஆக்கப்பட்ட பொருள்கள் அனைத்தும் சக்திமயம்'' என்பது ஆன்றோர் வாக்கு. நீரை, நிலத்தை, கல்வியை, செல்வத்தை, மொழியை, காவிரித்தாய், பூதேவி, கலைமகள், திருமகள், தமிழ்த்தாய் என்று உவமை கூறியிருப்பது எதனால்? அது பெண்மையின் சிறப்புக் கருதியன்றோ!

தமிழ்ப் பெண்குலத்தின் வளை ஒலிக்கும் கைகளில்தான், வீரமும், ஈரமும், வெற்றியும், வாழ்வும், பிறந்து வளர்ந்திருக்கின்றன. அந்தக் கைகளில் வளையலோடு தமிழும் வாழ்ந்தது. தமிழ்ப் பண்பாடு குடியும் வளர்ந்தது. இன்று நம்மை விட்டு விலகிவிடாமல் காத்து வரும் பண்பையும், ஒழுக்கத்தையும் இப்படி நித்தியமாய், நிர்மல மாய், நிரந்தரமாய்த் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும்படி நமக்கு அளித்தவர்கள் நமது தாய்க்குலமே ஆகும்.

சங்க காலத் தமிழ் நாட்டில் ஔவையார், பொன்முடியார், வெண்ணிக்குயத்தியார், காக்கை பாடினியார், நச்செள்ளையார், முதலிய பண்பு வாய்ந்த பெண்பாற் புலவர்கள் கற்றிருந்ததால் கன்னித் தமிழைக் கண்போற் காத்தனர். அரசுக்கு அறிவுரை வழங்கினர். மக்கள் சமுதாயம் வாழும் வகையை வனப்பொடு கூறிச் சென்றுள்ளனர்.

இதுவன்றி அவர்கள் வேறு தீமையைச் செய்ததாக வரும் கூற இயலாது. ஆதலால் கல்வியை மகளிர் பெறுவதால் மாண்பு பெருகுமே தவிர சிறுமை தோன்றாது.

முற்காலப் பெண்கள்: கல்வியால், அறிவால், பண்பால், கற்பால் நாட்டில் மிகுந்தசெல்வாக்கும் பெற்றிருந்தனர். ''மங்கையர்க் குத்தனியரசி எங்கள் தெய்வம்'' என்று திருநாவுக்கரசர் போற்றும் அளவிற்குச் சிறப்புப் பெற்றிருந்தனர். ஆனால் இடைக்காலத்தில்

"அடுப்பூதும் அரிவையருக்கு அறிவூட்டும் கல்வி எதற்கு" எனக் கருதிப் பெண்களுக்குக் கல்வி அறிவை நல்காது ஒழித்தனர். இது ஆகாநெறி செல்வோரின் அறியாமைக் கருத்தாகும். உண்மையில் பெண்களே நாட்டின் கண்கள். வீட்டின் விளக்குகள். விலைமதிக்க முடியாத பெட்டகங்கள். ஆனால் அப் பெண்கள் கல்வி பெற்றவர்களாக இருக்கவேண்டும். இன்றேல் பயன் இல்லை.

பாண்டிய நாட்டில் செங்கோல் ஏந்தி அமர்க்களம் புகுந்து எதிரிகளை முறியடித்துச் சீரும் சிறப்புமாக ஆட்சி புரிந்த ராணி மங்கம்மாளும், இந்திய மக்களின் சுதந்திரத்தை அன்னியர்களிடம் ஒப்படைக்க உயிரிழப்பினும் சம்மதியேன் என்ற உத்வேகத்துடன் போர்க்களம் புகுந்து பூதஉடலைத் துறந்து புகழுடம்பைப் பெற்ற ஜான்ஸி ராணியும், தனது கவியின் திறமையால் உலகத்தோர் உள்ளத்திலெல்லாம் மேலான இடத்தைப் பெற்று உத்திரப்பிரதேச கவர்னர் பதவியை ஏற்று உலகோர்வியக்க நிர்வாகம் புரிந்த கவிக் குயில் சரோஜினிதேவி அம்மையாரும்; உலகப் பெருமை பெற்றது கல்வி அறிவினால்தான் என்பதை யாரும் மறுக்க இயலாது.

தொண்டும் சமயமும் வளர்ந்து ஞானச் செல்வியாய்ச் சுற்றித் திரிந்த குண்டலகேசியும், கற்புக்கனல் எழுப்பிப் புகழ்ஜோதியாய் நிலைத்த கண்ணகியும், அறிவுப் புயலாய் வீசி மறைந்த ஔவை யும், நரையாத குழலும், திரையாத முகமும் கொண்டு வரை யாத சித்திரம்போல் அழகுடன் கன்னியாகவே வாழ்ந்து மறைந்த திலகவதி அம்மையாரும்; தாம் பெற்ற கல்வி அறிவினால் அன்றோ சரித்திரக் காலக் கண்ணாடியில் நீங்கா இடம் பெற்றுள்ளனர்.

இத் தாய்த்திருநாட்டில் பெண்கள் கல்வி பெற்றிருந்ததால் தான் அவர்கள் வயிற்றில் பிறக்கும் பேசும் பொற்சித்திரங்களும், மதி நலம் வாய்ந்துள்ளதாகத் திகழ்வர். இல்லறமும் இனிதாய் நடைபெறும். இன்றேல் அது நல்லறமாய் நடைபெறாது. வாழ்க்கை என்னும் வண்டி செம்மையாக இயங்கவேண்டுமென்றால் பெண்கள் கல்வி பெறுவது இன்றியமையாததாகும்.

"விலங்கொடு மக்களனையர் இலங்குநூல்
கற்றாரோடேனையவர்"

மனிதர்களுக்கும், விலங்குகளுக்கும் எவ்வளவு வேறுபாடு உண்டோ அவ்வளவு வேறுபாடு கற்றோருக்கும் கல்லாதவருக்கும் என்று செந்நாப் போதார் செப்புகின்றார். கற்றவன் கூடியவரையில் தன்னுடைய கல்விக்குத் தகுந்த அறிவும், நல்லொழுக்கமும், பெருமையடைந்த வாழ்க்கை நடத்தவும் திறமை உடையவனாகின்றான். கல்லாதவனோ அறிவின்றி அநேக கடினமான வேலைகளைச் செய்யவே பயன்படுகின் றான். அவர்களுக்குள்ளே கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் இவ்வளவு ஏற்றத் தாழ்வான மாறுபாடு இருக்கும்பொழுது பெண்களுக்கு மட்டும் கல்வி கற்காமலே எல்லா நற்குணங்களும் உண்டாகும் என எண்ணு வது வீணே.

கல்வியின் பெருமை அளவிடப்பட முடியாததாயிருக்கின்றன. ஒளிக்கும், இருளுக்கும், நல்வினைக்கும், தீவினைக்கும், தூய்மைக்கும், அழுக்கிற்கும் எவ்வளவு வேறுபாடோ அவ்வளவு மாறுபாடு செல்வப் பொருளுக்கும், கல்விப் பொருளிற்கும் இருக்கிறது. ஆகையால் பெண்ணிடத்தில் செல்வப் பொருள் மட்டும் இருந்தால் பற்ருது என்பதை மனதிலிருத்தி அவர்களுக்கு அறிவுச் செல்வத்தை வழங்கவேண்டும். பெண்கள் அறிவைப்பெற்று அவனியில் ஆண்மையுடன் வாழவேண்டுமென்று அழியாச் செல்வமாகிய நூல்களை எழுதித்தந்தார். நம் அண்ணல் வேதநாயகர். தூங்கிக்கிடந்த பெண்கள் சமுதாயத்தைத் தட்டி எழுப்பியவர் வேதநாயகர். இவரது வீர முழக்கத்திற்கு முரசு கொட்டியவர் பாரதியார். முழக்கமும் முரசும் வீணுகாதபடி தமிழ் நாட்டிலே தாய்க்குலம் தழைத்தால்தான் தாய்நாடு மேலோங்க முடியும்.

தாய்க்குலம் தழைக்க, பெண்கள் தவருது கல்விகற்று அறிவாலும், பண்பாலும், கற்பாலும், பிறந்த நாட்டிற்குப் பெருமை தேடித்தருவார்களாக.

[கட்டுரையாளர் சி. ஆ. நி. தொடக்கப்பள்ளியின் தலைமை ஆசிரியர்]



மாணவர் வரைந்த படம்

# குடியரசு நாட்டில் இளைஞர் கடமை.

நா. சீனிவாசன்.

''அறிவை வளர்த்திட வேண்டும் - மக்கள்
அத்தனை பேருக்கும் ஒன்றுய்ச்
சிறியாரை மேம்படச் செய்தால்-பின்பு
தெய்வம் எல்லோரையும் வாழ்த்தும்''

(பாரதியார்.)

குடியாட்சி அமைப்பில் இன்றைய இளைஞர்களே வருங் காலத் தலைவர்கள்; நாட்டை வளப்படுத்தும் பெருமக்கள். ஆகவே இளைஞர்கள் பொறுப்புணர்ச்சி மிக்கவர்களாக வளரவேண்டும். இளமை முதலே சிறந்த பண்பையும் சீரிய கல்வியையும் உயர்ந்த குறிக்கோளையும் கொண்டு விளங்கவேண்டும். அப்பொழுதுதான் பிற்காலத்தில் ஆட்சிமாட்சியுறும். நமது நாட்டு இளஞ்சிறுர்கள் கடமையை யுணர்ந்து கட்டுப்பாடுடன் பாடுபட்டால் நாட்டிலே நல்வாழ்வு ஏற்படும்.

இளைஞர்களின் முதற்கடமை ஒழுங்காகக் கல்வி கற்பதே ஆகும்.

''கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத்தக''

என்றுர் திருவள்ளுவர். நல்லாசிரியரை அடுத்து அவர் குறிப்பின் வழி ஒழுகிக் காலத்தே சென்று பணிவுடன் நடந்து கற்கவேண்டும். **'அகல உழுவதிலும் ஆழ உழு'** என்றபடி, மனம் பொருந்திய கல் வித்துறையில் நன்கு பயிற்சி பெறவேண்டும். தாய்மொழியைத் தன்னுயிரினும் மேலாகக் காக்க வேண்டும். இனிமையாய்ப் பேச வேண்டும். புதுப்புது நூல்களை இயற்ற வேண்டும். புதுமைக் கருத்துக்களைப் புகுத்த வேண்டும். நாட்டு மக்களிடையே தன்னம் பிக்கையை நிலவச் செய்ய வேண்டும்.

'பொன் விளையும் புண்ணியநாடு' எனப் புகழ்பெற்ற நம் நாட்டில், இன்று கால் வயிற்றுக்கும் உணவில்லாது கலங்குவோரே பெரும்பாலோர். பொருளாதார நிலையிலுள்ள ஏற்றத் தாழ்வே இதன் காரணம். ஆகவே ஏழை மக்களுக்கு சிறுசிறு கைத்தொழில்களைக் கற்பித்து, சொந்தமாக வுழைத்து, அவ்வுழைப்பின் பயன் முழு

வதையும் அவர்களே அடையும் வழியைக் காட்டுவது இன்றைய இளைஞர்களின் தலையாய கடமைகளுள் ஒன்ருகும். சமூகத்தில் தாழ் வுற்றுக் கிடக்கும் மக்களுக்குக் கல்வியறிவு ஊட்ட வேண்டும். கல்லாமையை விரட்ட வேண்டும். நல்ல பழக்கவழக்கங்களைக் கற்றுக்கொடுக்கவேண்டும். பிறர்க்கென வாழும் பெருந்தன்மையை உண்டாக்க வேண்டும். 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்பதற்கிணங்க ஒழுக வேண்டும். சாதி, சமய வேற்றுமைகளால் சண்டையிட்டுக் கொள்ளக்கூடாது. குற்றங்களை மறந்து குணத்தைப் போற்றும் பண்பினை நாட்டில் வளரச் செய்ய வேண்டும்.

> "அறிவுடையார் ஆவது அறிவார்; அறிவிலார்
> அஃது அறிகல்லாதவர்"

எதிர்கால நிகழ்ச்சிகளை அறிகின்றவர்களே அறிவுடையவர்கள்; அவைகளை அறிந்துகொள்ள முடியாதவர்கள் அறிவற்றவர்கள் என்று பொய்யாமொழிப்புலவர் கூறியுள்ளார். ஆகவே தற்கால இளைஞர்கள் ஆவது அறிந்து, தலையாய கடமைகளைத் தட்டாமல் காலத்தே கடைப்பிடித்தால் நாடு நாடாகும். நல்லோர் நிறைவர். வறுமையும் தாழ்வும் ஓடும். குடியாட்சி குணத்தோடும் நல்லமணத்தோடும் நனி சிறந்து விளங்கும்.

> "தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்வுஇலாச்
> செல்வரும் சேர்வது நாடு" (குறள்)

வாழ்க - தாயகம்! வளர்க - கடமை உணர்ச்சி!!

[கட்டுரையாளர் சி. ஆ. நி. தொடக்கப்பள்ளியின் ஆசிரியர்]



அன்பின் வழியது உயிர்நிலை

# பாரதியின் குணநலன்கள்

*அழகு. சுப்பிரமணியன்*

**முன்னுரை:-** சங்க காலத் தமிழ் வளர்ச்சிக்குப் பின் தமிழில் புதுமையும், புத்தொளியும், புரட்சியும் ஒரு சேரக் கண்டவன் புரட்சிக் கவிஞன் பாரதி. அவனது பாக்கள் பைந்தமிழ் மலருக்குத் தேன் விருந்து அளிக்கின்ற பூக்காடு. வண்டமிழின் நடை அழகை வளர்க்கின்ற புது ஏடு. பழமையைச் சாடி, புதுமையை வித்திட்ட புரட்சி ஏடு. பகுத்தறிவு படைத்தவர்கள்கூடி வாழும் படைவீடு. அத்தகைய பாரதியின் குணநலன்களை இங்கு சற்றே காண்போம்.

**தமிழ் மொழிப் பற்று:-** பாரதியைத் தமிழ்த்தாயின் தலை மகன் என்றுதான் உரைக்க வேண்டும். 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம், என்பது பாரதியின் முடிபு. "யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவன் போல் இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" என்பது அவன் துணிபு. வெறும் புகழ் பாடிக்கொண்டு வெற்றொலி எழுப்பிக் கொண்டு கூட்டத்தில்கூடிப் பிதற்றுவதால் மொழி வளராது என்பதை நன்கு அறிந்தான். எனவே தான் "தேமதுரத் தமிழ் ஓசை தெருவெல்லாம் பரவும் வகை செய்தல் வேண்டும்" என்று வேண்டினான். "நீலத் திரைக்கடல் ஓரத்திலே நித்தம் நின்று தவம் செய் குமரிஎல்லை வடமாலவன் குன்றம் இவற்றிடையே புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ்த்தாயின் முன்னேற்றமே தமிழர் முன்னேற்றம் எனக் கூறினான். "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்று விரும்பினான். இலக்கியச் செல்வம் மட்டும் தமிழுக்கு எழில் கூட்டாது. அறிவியல் கலையில் தமிழின் பெருமை வளரவில்லையே என்று வருந்தினான்.

"புத்தம் புதியகலைகள் பஞ்ச
  பூதச் செயல்களின் நுட்பங்கூறும்
மெத்தவளருது மேற்கே - அந்த
  மேன்மைக்கலைகள் தமிழினில் இல்லை
சொல்லவுங் கூடுவதில்லை - அவன்
  சொல்லுந்திறமை தமிழ்மொழிக்கில்லை
மெல்லத் தமிழினிச் சாகும் - அந்த
  மேற்குமொழிகள் புவிமிசை ஓங்கும்"

என்று பேதைகள் உரைக்கத் தமிழர் கேட்பதோ? என்று விழிப் புணர்ச்சி பெற்று 'சென்றிடுவீர் எட்டுத்திக்கும், கலைச் செல்வங்கள்

யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்'' என்று தமிழர்க்கு ஆணை இட்டான். தாய் மொழியின்மீது பற்று இல்லாதவன், அந்த நாட்டு மண்ணில் வாழத் தகுதியற்ற பட்டமரம் போன்றவன் என்று இயம்புகிறார்.

''வேறு வேறு பாஷைகள் கற்பாய் நீ
வீட்டுப் பாஷை கற்கிலாய் போ, போ, போ''

எனத் துரத்தி அடிக்கின்றார். தமிழ் அன்னையின் தண்ணளி சுரக்கும் கண்களின் மோகன ஒளியில் நனைந்து திளைத்த பாரதிதான் தமிழ் நாட்டின் கவிதைத் தலைவன் ஆவான். அவனுடைய தமிழ் மொழிப் பற்று கடலினும் ஆழமானது, நீல விசும்பினும் உயர்ந்தது, இப் பாரினும் பரந்தது.

**பாரதியின் உயர் பண்பு:–** பாரதி நாட்டிற்கு நன்மையும், தொண்டுமே செய்ய விரும்பினான். ஒற்றுமையே உயிர் என்று வாதாடினான். அன்பு வழியில் அசோகனாய் நின்றான்.

'உள்ளத்தில் ஒளி உண்டாயின்
வாக்கினிலே உண்மை உண்டாகும்''

என்னும் சீரிய கருத்தினைச் செவ்வனே மேற்கொண்டான்.

**வீர உணர்ச்சி உடையவர் பாரதி:–** பாரதியின் வீர உணர்ச்சி மிகவும் போற்றத் தக்கது.

'அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்பதில்லையே!
உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்
அச்சமில்லை, அச்சமில்லை அச்சமென்பதில்லையே!

என்று பாடுகின்றார். ஒருநாள் புயற்காற்று அடித்து வீசியது, மரங்கள் அனைத்தும் விழுந்த நிலையில் இருந்தன. மக்கள் நடு, நடுங்கினர். வீடுகள் இடிந்துவிடுமோ என்று. ஆனால் பாரதிமட்டும் சிறிதும் அஞ்சினார் அல்லர். கவிதையைப் பாடிக் கொண்டே இருந்தார். இதிலிருந்து அவருடைய வீரம் நன்கு புலப்படுகின்றது.

**கவிஞரும் கடவுட்பற்றும்:–** உலகெலாம் உணர்ந்து ஓதுதற்கு அரியவனாய், நிலவுலாவிய நீர்மலி வேணியனாய், அலகில் சோதியனாய் எங்கும் நிறைந்திருக்கும் கடவுளைப் பாரதி அறிவுக் கண் கொண்டு நோக்குகின்றார். கடவுளை வெவ்வேறு பெயர்களால் அழைத்தாலும், எல்லா நெறிகளும், வணக்கங்களும் சங்கமமாகும் ஒரே பொருள் கடவுள்'' என்பது பாரதியின் அசைக்க முடியாத கொள்கை. ஆயிரம், ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று பேசிச் சண்டையிடும் சமுதாய விரோதிகளைப் பாரதி அறிவிலிகள் என்று

அழைக்கின்ருர். சக்தியை வியந்து பாடுகின்ருர். கண்ணனை நினைந்து பாடுகின்ருர், முத்துமாரியைத் தொழுது நிற்கின்ருர், எனினும் எல்லாம் அழகுருவாய், எவரும் ஏற்கும் பரம் பொருளாய் இருக்கும் ஒரே தெய்வ நோக்கே அவரது பாடல்களில் பளிச்சிடு கின்றது.

''அன்னை வடிவமடா இவள்-ஆதி
பராசக்தி தேவியடா-இவள்
இன்னருள் வேண்டுமடா-பின்னர்
யாவும் உலகினில் வசப்பட்டுப் போகுமடா''

என்று சக்தி வழிபடுபவர் போன்று, மக்களுக்கு அறிவுரை கூறு கின்ருர். ஆண்டவனை நினையாத நெஞ்சம் அன்பற்ற நெஞ்சம்! அங்கே அருள் சுரக்காது! பண்பறம் சிறக்காது என்பது பாரதியின் கருத்து.

**கவிஞரும் நண்பர்களும்:-** பாரதியார் யோகி அரவிந்தரைத் தம் ஆசிரியராகவும், வழிகாட்டியாகவும் வைத்துக்கொண்டார். வ. உ. சிதம்பரனுர். பொன்னு முருகேசம் பிள்ளை, வா. வே. சு. ஐயர் முதலி யோர் பாரதியாருக்கு நண்பர்களாய் இருந்தனர். இவர்கள் பாரதியார் என்ருல் உயிரையும் கொடுக்கத் தயாராய் இருந்தனர். பாரதியாரும் அவர்களை உயிரினும் மேலாகக் கருதி இருந்தார். நண்பர்களை மட்டு மென்ன? பகைவர்களுக்குமல்லவா அருள்புரியவேண்டும் என்ருர் பாரதி. ''பகைவனுக்கருள் புரிவாய்'' என்னும் பாடலே அதற்குச் சான்றுபகரும்.

''காக்கை குருவி எங்கள் ஜாதி
உயர் கடலும், மலையும் எங்கள் கூட்டம்''

என்று கூறியதை நாம் சிந்தித்து இன்புறவேண்டும்.

**இலக்கியப் புலமை:-** உற்ற பல பாக்களை நூலில் தீட்டி உண்மையான ஓர் உயிரை அதில் ஊட்டி, பெற்றதொரு நடை யணியை அதற்குப் பூட்டிப் பேருலகில் நடமாடும் பாரதி இலக்கியம், பற்றற்ற ஞானிகளும் பரிவுகொண்டு, பாரில் கலையுலகில் தலைமையுரை பெற்றது. பைந்தமிழ்ப் புலவன் பாரதியின் பாக்களில் நம் உள்ளத் திரையில் என்றும் நடமாடுவது கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு ஆகிய மும்மணிகளும் ஆகும். தமிழ்த்தாயின் திருவடிக் குப் புதிய ஆத்தி சூடியில் ''அச்சந் தவிர்'' என்பதைத் தலைப்பாகக் கொண்டு தவப்பெரும் காணிக்கையாகச் செலுத்திவிட்டான்.

**பாரதி இன்று இருந்தால்...:-** அன்று ஆங்கிலத்தால் நம் அன்னை அழிவுநிலை பெற்றபொழுது, பாரதி ஆவேசம் கொண்

டெழுந்து அடிமை விலங்கொடித்தான். "நெஞ்சு பொறுக்குதில்லையே!" இந்த நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால் என்று நெஞ்சம் குமுறி நெறியற்ற நமக்கு நேர்மை ஊட்டி அன்னையின் அழிவு நிலையைப் போக்கிடுவான்.

**தோற்றம் :-** இவ்வளவு எல்லாம் கூறிவிட்டு கவிஞரின் தோற்றத்தைச் சிறிதும் பார்க்கவில்லையே! சற்றே பார்ப்போம்.

"வெட்டரிவாள் போல முறுக்கிவிட்ட மீசை
விழிகளிலே ஒளி பெருக்கும் வீரப்பார்வை
கட்டற்ற உரிமைதனை விரும்பும் நெஞ்சம்
கற்பனையில் நனைந்ததமிழ் பாடும் செவ்வாய்
சட்டைக்கு மேலே பழைய கோட்டும்
சரிகை இன்றித் தலைப்பாகை சேரன்போலக்
கட்டிவைத்த தலைப்பாகை இதுதான் அந்தக்
கலையரசன் பாரதியின் தோற்றம் கண்டீர்!

**முடிவுரை :-** இவ்வுலகம் மான் செல்லும் பாதை அல்ல! புலி கூடும் பாதை! சாரல் பொழியும் மழைக் காடல்ல! சாவு பொழியும் பிணக் கூடம்! இன்பக் கதைகள் நிறைந்த மணி மண்டபமல்ல துன்பக் கதைகள் நிறைந்த பேய் மண்டபம் என்பதை நன்கு உணர்ந் தவன்தான் பாரதி. அவன் உய்வகை காட்டும் உயர் தமிழுக்குப் புது, நெறி காட்டிய புலவன். செந்தமிழ்த்தேனீ, சிந்துக்குத் தந்தை! அவன் ஏழை பணக்காரன் என்ற தாழ்விற்கு ஓர் எதிரி! வீட்டிற்குள்ளே பெண்ணைப் பூட்டிவைத்த வீணர்களுக்கு ஓர் வெடிகுண்டு! ஆளப் பிறந்தவன் ஆங்கிலேயன் என்னும் அகங்கார ஆற்றலின் அழிவுப் பாதை! கோட்டுக்கும், குல்லாவுக்கும் கும்பிட்டு நின்ற கொடுமைக்கு ஓர் குத்தீட்டி! அவனுடைய பாக்கள் பாரத நாட்டின் பகுத்தறிவுப் பாசறை.

"ஞானரதம் போல்ஒரு நூல் எழுதுதற்கு
நானிலத்தில் ஆளில்லை – கண்ணன்
பாட்டுப்போல் நவிலக் கற்பனைக்குப் போவதெங்கே!
புதியநெறி பாஞ்சாலி சபதம் போலே
தேன்இனிப்பில் தருபவர்யார்? மற்றும் இந்நாள்
ஜெயபேரிகை கொட்டடா என்று ஓதிக்
கூனர்களும் குவலயத்தை அளாவும் வண்ணம்
கொட்டிவைத்த கவிதைதிசை எட்டும் காணோம்.

— *புரட்சிக் கவிஞன் பாரதிதாசன்.*

(சி. ஆ. நி. உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பு மாணவர்)



## ஊட்டி முதல் இலுப்பைக்குடி வரை.

**சோ. மு. சோமையா பாரதி; பி. எஸ். ஸி.**

விடிகாலை நேரம். ஆதவன் அன்புக் கதிர்களால் உலகை அரவணைக்கும் காலைப் பொழுது. ஊட்டியின் குளிர்தாளாமல் போர்வைகளை இறுகப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தேன். அறைக் கதவு தட்டப்படும் ஒலி கேட்டது. நண்பர் நடராசன் கதவைத் திறந்தார். உடன்பயிலும் நண்பர்கள் நால்வர் குளித்து உடையணிந்து வெளியே புறப்படத் தயாரான நிலையில் நின்றிருந்தார்கள்.

"என்ன! இன்னும் தூக்கமா? எழுந்திருங்கள். இன்றைக்குத் தாவரவியற் பூங்காவிற்குப் (Botanical Gardens) போக வேண்டும். அருமையான சூழ்நிலை. நிறைய அரிய செடிகள் கிடைக்கும்" என்றார் ஒருவர்.

'எம்ப்பா! ஆசிரியரையும் கல்லூரி ஊழியர்களையும் ஒரு 'வாடகை ஊர்தியை எடுத்துக்கொண்டு' போகச் சொல்லி நிறையப் பறித்துக்கொண்டு வரச் சொல்லுங்கப்பா! ஆட்களைக் குளிரிலே போட்டு .. இரவு இரண்டாம் ஆட்டம் பார்த்துவிட்டு நடந்து வந்த களைப்பு வேறு ..' என்று சோம்பலித்தார் ஒரு நண்பர்.

தாவரவியற் பூங்காவைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். மலர்க் கண்காட்சி (Flower show) நடக்கும் போது இறைவனின் இணையற்ற இயற்கைப் படைப்புகளின் திறத்தையும் மனிதர்களின் கைவண்ணம் கலந்த அழகையும் காணும் போது நம் மனம் உவகையால் துள்ளும் என்று கேள்வியுற்றிருக்கிறேன். அந்த ஆர்வம் என் தூக்கத்தைப் போக்கிச் சுறுசுறுப்பைக் கொடுத்தது. படுக்கையினின்று எழுந்து, குளித்து (வெந்நீரில்தான்) நல்ல கம்பளி உடையாகப் பார்த்து அணிந்து கொண்டேன். எனது அறையிலிருந்த மற்ற நண்பர்களும் தயாராக இருந்தார்கள். அந்நேரம் ஆசிரியர் வந்தார்:

'காலைப் பலகாரம் தயாராக இருக்கிறது. சாப்பிட்டுவிட்டுப் போகலாம். வாருங்கள்' என்று பணித்தார்.

ஊட்டியில் குதிரைப் பந்தயத் திடலுக்குத் தெற்கே உயரத்திலுள்ள 'தாசப் பிரகாச விடுதி'யின் சப்பாத்தியும் குருமாவும் பெயர் பெற்றவை. அன்று சப்பாத்தி சாப்பிடலாம் என்ற எண்ணம் எழுந்தது. என்ன காலமோ? 40 பேர் கொண்ட ஒரு வட இந்தியக் குழு முதல் நாள் இரவுதான் வந்ததாம். அவர்களுக்காகத் தனியாகச் சப்பாத்தி போட்டுக் கொடுக்கச் சம்மதித்தார்களாம். அவர்களால் எங்களுக்குச் சப்பாத்தி கிடைக்காமல் போயிற்று. ஒவ்வொரு ஆளுக்கு எதிரிலும் சுமார் 15க்கு மேல் 20 சப்பாத்தியைக் கொண்டு வந்து வைத்துவிட்டுப் போகிறார்கள். சப்பாத்திக்குக் குருமாதான் வைத்தார்கள். அவர்களுக்கு எதிர்த்த வரிசையில் நாங்கள் இட்லி சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். இட்டிலிக்குச் சாம்பார் ஊற்றினார்கள். சாம்பாரைப் பார்த்ததும் அவர்களுக்கும் சாம்பார் ஆசை வந்து விட்டது. பரிமாறியை அழைத்துச் சாம்பாரை ஊற்றச் சொல்லிக் குடித்தார்கள். அடே! நம் சாம்பாருக்கு இவ்வளவு கிராக்கியா! என்று எண்ணி வியந்தேன். ஒருவர் அங்ஙனம் செய்ததும் அனைவரும் சாம்பார் குடிக்க ஆரம்பித்தனர். 'சாய்ந்தால் சாய்கின்ற பக்கமே சாய்கின்ற செம்மறி ஆடுகள்' போல ஒருவர் ஒன்று செய்தால், அது நல்லதோ, கெட்டதோ என்று பாராமல் அனைவரும் அதைச் செய்யும் அவசர புத்தியும், நான்குபேர் நடுவில் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதையறியாத தன்மையும் அவர்களிடம் அதிகம் இருப்பதைப் பலகாரம் உண்ட அரைமணி நேரத்திற்குள் தெரிந்து கொண்டேன்.

நாங்கள் மொத்தம் 35 மாணாக்கர்கள். இரண்டு ஆசிரியர்களும் கல்லூரி ஊழியர்கள் இருவரும் கூட வந்திருந்தார்கள். 15 மணித்துளிகள் 'எப்படிப்போவது' என்ற 'பட்டிமன்றத்திற்குப், பிறகு நடந்தே செல்வது என்ற முடிவுக்கு வந்தோம். காலை 8-30 மணிக்கெல்லாம் மக்கள் நடமாட்டம் எப்பொழுதும் உள்ளது போல் கலகலவென்றே இருந்தது. நமக்கு மேற் சட்டையோ பனிச் சட்டையோ போடவில்லை யென்றால் உடம்பு நடுநடுங்குகிறது. இங்குள்ள மக்களோ சாதாரணச் சட்டையைப் போட்டுக்கொண்டு, ஒரு முண்டாசுக் கட்டோடு செருப்புக்கூடப் போடாமல் உருளைக் கிழங்குத் தோட்டங்களிலும், பூக்கோசு (Califlower) பயிராகும் இடங்களிலும் வேலை செய்கிறார்களே! என்றெண்ணி வியந்தேன். இயற்கையான இவ்வளவு குளிரைத் தாங்கும் ஆற்றலை இறைவன் அவர்களுக்கு அளித்தது எவ்வளவு பயனுள்ளது என்று எண்ணினேன். இல்லையெனில் அன்றாடம் புத்தம் புதுக் காய்கறிகள் பொழுது புலர்ந்தவுடனேயே கிடைக்க முடியுமா?

செல்லும் வழியில் மோட்டார் சைக்கிள்களும் ஸ்கூட்டர்களும் தான் நிறைய இழைந்தன. 'இங்கு இவைகளை வைத்திருக்காதவர் குறைவு' என்றார் ஒருவர். பூங்காவிற்குள் நுழைந்தவுடனேயே ரோசாப் பூக்களின் வாசனை மூக்கைத் துளைத்தது. ரோசாக்களை நம் ஊரில் பார்ப்பதே அரிது. அங்கே ரோசாக்கள்

இல்லாத இடத்தைப் பார்ப்பது அரிது. ஒவ்வொரு ரோசாவும் நமது ஊர் பொழுதுவணங்கி (சூரியகாந்திப் பூவைவிடப் பெரியனவாக இருந்தன. பார்ப்பதற்கு மிகவும் அழகாகக் காட்சியளித்தன. அரசினர் பூங்காவாக இருந்தாலும், வெகு நேர்த்தியாக, ஒழுங்கோடு கண் காணிக்கப்படுகிறது. பார்வையாளர்கள் அதிகம் வருவதால் தூய் மையாக வைத்துக்கொள்ளப்படுகிறது என்பதை விடப் பூங்கா துப்புரவாக அழகாக இருப்பதால் ஏராளமான மக்கள் கண்டு களிக்க வருகிறார்கள் என்று சொல்வதே சாலச் சிறந்தது. அடிக்கடி சுத்தப் படுத்தும் முறையும், காலநிலையும் அழகுக்கு அழகூட்டுகின்றன.

எம்மைப் போன்ற 'செடிநாடிச் செல்வோர்' தாறுமாறுகப் பூக்களையும் இலைகளையும் பறித்து வீணாக்கி விடுவர் என்பதை அறிந்து, அதைத் தடுக்கும் வண்ணம் ஒரு வழிகாட்டியை (அவர் ஒரு பட்டதாரியைவிட அதிகமாகச் செடிகளைப் பற்றித் தெரிந்து கொண்டுள்ளார்) அனுப்பி வேண்டிய உதவி செய்தனர் பூங்கா மேற்பார்வையாளர்கள். அங்குமரங்களின்மேல் படர்ந்து வளர்ந்துள்ள ஆர்க்கிடுகள் (Orchids) என்னும் செடிகளின் மலர்கள் உலகிலேயே மிகவும் அழகான மலர்களோடு சேர்த்து எண்ணப்படுபவை. பசுமை யான மரத்தில் மஞ்சள் நிறப் பூக்கள் படர்ந்திருப்பது கண்ணுக்குக் குளிர்ச்சியான காட்சியாகும். இந்த வகைச் செடிகளை 'பிறர்நம்பிகள்' (Mostly Epiphytes) என்று குறிப்பிடுவார்கள். அதாவது பெரும் பாலும் தனித்து வாழத் தகுதியின்றி ஏனைய மரங்கள் மேல் வளர்ந்து வேர்களைச் செலுத்தி அவற்றின் உணவைப் பெறுகின்றன. இத் தகைய 'பிறர் நம்பி'களே இவ்வளவு அழகுடையனவாக இருந்தால், இவற்றை இறைவன் தனித்து வாழ்பவையாகப் படைத்திருந்தால் எப்படி இருக்குமோ? இன்னும் அழகாகத்தான் இருக்கும். அவற்றுள் Dendrobium, Habeneria, Bulbophyllvm என்னும் ஆர்கிடுகள் பூங்காவில் ஏராளமாகக் கிடைத்தன. அவ்வளவு நேர்த்தியானவை அவை. இவை பெரும்பாலும் அதிகக் குளிர்ச்சியுடைய இடங்களில் மலைப்பகுதிகளில்தான் அதிகம் வாழ்கின்றன. இவற்றை வீட்டிற்குள் சாதாரண காலநிலையிலேயே வளர்க்கலாம் என்பதை மெய்ப்பிக்க ஒரு பேராசிரியர் சோதனைகள் செய்து அண்மையில்தான் வெற்றி பெற்றுளார் என்பதை ஆங்கில நாளிதழ் ஒன்றில் பார்த்தேன்.

மலர்களைப் பறிக்கும்போது இவை இந்தக் குடும்பத்தைச் சார்ந்தவை என்று பார்த்துப் பிரித்துப் பறிக்கவேண்டும். நாங்கள் சில முக்கியமான குணங்களை (Characters) வைத்துத்தான் பிரித்தோம். எங்களுக்கு முன்பு வட இந்தியக் குழு ஒன்று அங்கே வந்திருந்தது. அவர்களுக்கு ஆசிரியர் துணை இல்லை. மாணவர்களாகவே பூக்களைப் பறித்து எல்லாக் குணங்களும் இருக்கிறதா என்று பார்த்துப் பறித்துச் சென்றார்கள். இதன் மூலம் வடஇந்தியப் பல்கலைக் கழக மாணவர்களின் பண்பட்ட நிலையும் அறியும் ஆற்றலும் வெகுவாக வளர்ந்துள்ளன என்று எண்ணிக்கொண்டேன்.

அன்று மாலைவரை அங்கேயே இருந்துவிட்டுத் திரும்பினோம். மறுநாள் காலை மைசூர் செல்லும் வழியில், ஊட்டியிலிருந்து 20 கல் தொலைவிலுள்ள நடுவட்டம் என்னும் ஊர் நோக்கிப் புறப்பட்டோம். செல்லும் வழியில் இருமருங்கும் வானளாவ ஓங்கி உயர்ந்து வளர்ந்த ஊசியிலை மரங்கள் (Pinus trees) அழகாகக் காட்சியளித்தன. இவை இவ்வளவு பெரியனவாக எவ்வாறு வளர்ந்துள்ளன என்பதைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். அப்பொழுது எங்களுடன் பேரூர்தியில் வந்துகொண்டிருந்த ஒருவர் சொன்னார்:

"மிக விரைவாக வளரும் மரங்கள் வெளிநாடுகளில் ஏராளமாக உள்ளன. அவற்றுள் மூங்கிலும் ஒன்றாகும், ஒரே இரவில் வளரும் இது மனிதர்களைக் கொல்வதற்குப் பயன்பட்டிருக்கிறது. பிலிப்பைன்சு நாட்டிலுள்ள பழங்குடிமக்கள் கைதிகளைக் கொல்வதற்காக அவர்களைப் பூமியினின்று கிளம்பும் மூங்கிலின் முளையில் உட்காரவைத்துக் கட்டி விடுவார்கள். மறுநாள் காலையில் பார்த்தால் அந்த முளையே அவர்களைக் கிழித்துக்கொண்டு வெளிவந்து மரண தண்டனையை நிறைவேற்றி விட்டிருக்கும்."

இவ்வளவு விரைந்த வளர்ச்சியையெல்லாம் படைத்த இறைவன் மிக விரைவான அழிவையும் படைத்துள்ளானே என்று எண்ணிய போது, அவன் திறமையும் பெருமையும் நம்மைப் புல்லரிக்கச் செய்தன. நடுவட்டம் மைசூர்ப் பாணியும், தமிழகப் பாணியும் இரண்டறக் கலந்த ஓர் ஊர். சிறிய ஊரானாலும் பார்ப்பதற்கு மிகவும் அழகாகக் காட்சியளித்தது. அங்கே Helichrysum என்ற செடி அதிகம் காணப் பட்டது. அச்செடி பொழுதுவணங்கி (சூரியகாந்தி) குடும்பத்தைச் (Family compositai) சார்ந்தது. அச்செடியில் பூக்கும் மலர்களின் வண்ணம் என்றும் அழியாதது. அதனால் அச்செடியின் மலரை 'அழியா மலர்' (everlasting flover) என்று சொல்வார்கள். பார்ப்பதற்கு மஞ்சளாக மனமகிழ்வூட்டக்கூடியதாக இருக்கும். சுமார் 4 ஆண்டு கட்கு முன்பு ஒருமுறை ஊட்டி சென்றுவந்த கல்லூரி ஆசிரியர் ஒருவர் அம்மலரை ஒட்டி வைத்திருக்கிறார். இன்னும் அது அன்றலர்ந்த மல ரென அழகுடன் விளங்குகிறது.

அன்று மதியமே திரும்பிவிட்டோம். மாலையில் ஏரிப்பக்கம் சென்றுவரலாம் என்ற எண்ணத்தோடு நானும் நண்பர்களும் சென்றோம். ஏரியின் கரைமருங்கில் சேனைக் கிழங்கு வகையைச் சார்ந்த ஒரு செடி (Arum species) அதிகம் காணப்பட்டது. குளிர்ந்த நீர்க் கரையிலேயே அது இருந்தாலும், அதன் முக்கியமான குணம், அதிக வெப்பத்தைக் கொட்டுதலாகும். குளிர்ச்சியிலேயே அந்தச் செடி வாழ்வதாலும் மிகவும் வெப்பமான நிலையைக் காட்டுவதாலும், எந்தவிதமான காலநிலையிலும் வாழமுடியும் என்பதை உலகிற்குக் கூறுகிறது. மனிதனும் எந்தச் சூழ்நிலையிலும் வாழ்ந்துகாட்டப் பழகிக்கொள்ளவேண்டும் என்பதற்கு இந்தச் செடி ஓர் எடுத்துக்காட்டு.

படகில் செல்வது என்றால் எனக்கு மிகவும் பிடிக்கும். நண்பர்களையும் அழைத்துக்கொண்டு படகு நோக்கிப் புறப்பட்டோம். 3 பேருக்கு ஒரு படகு வீதம் இரண்டு படகுகளில் ஏறிக்கொண்டோம். படகு மெதுவாகச் சென்றது. ஊட்டி ஏரி மிகவும் பெரியது. தண்ணீரில் ஒரு ஓரத்தில் தாமரைகள் மண்டிக்கிடப்பவைபோல் ஒரே கும்பலாகச் செடிகள் இருந்தன. அவற்றைப் பார்க்கவேண்டும் என்பதற்காகப் படகை அப்பக்கம் செலுத்தச் சொன்னேம். படகுக்காரனே அங்கு ஏதாவது ஓர் இடத்தில் மாட்டிக்கொண்டால் ஆபத்து என்றான். நாங்கள் தைரியம் சொல்லி அருகில்சென்றோம். அச்செடிகள் Eichornia என அழைக்கப்படுவன. ஓர் இலை, தாமரை இலை அகலமாகக் காற்றால் ஊதப்பட்டதுபோல், பெரியதாக இருக்கும். இவற்றின் வேர்கள் மிகவும் சிக்கலானவை. இவை நீர்த்தாவரங்கள்தான். இருந்தாலும் சில சமயங்களில் பெரிய படகுகளையே கவிழ்த்துவிட்டிருக்கின்றனவாம். ஆனால் இவற்றின் வேர், தாமரை வேர்போல் பூமிக்குள் செல்வதுகிடையாது. மிதப்பதுதான். அவற்றிற்கே இவ்வளவு ஆற்றல். பூமிக்குள் வேர்கள் சென்று பலமடைந்து இருந்தால் என்னாகுமோ? இறைவன் எல்லாவற்றையும் அளந்தே படைத்திருக்கிறான்போலும்!

அன்று இரவு விடுதிக்குத் திரும்பியதும் ஒரு மாணவர் Nepenthes என்ற செடியைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அந்தச் செடியின் இலை சிறப்பானது. அது ஒரு சாடிபோன்ற அமைப்பையும், மூடியையும் உடையது. பூச்சியோ, புழுவோ உள்ளே சென்றதும் மூடி மூடிக்கொள்ளும். அதனுள் சில சுரப்பிகள் (Harmone) சுரக்கின்றன. சீரணவேலை முடிந்தபிறகே மூடிதிறக்கிறது. இதைப்பற்றித்தீவிரமாகப் பேசிக்கொண்டிருந்தபோது ஒரு மாணவர் சொன்னார். இது நமது நாட்டில் மிகவும் குறைவாகத்தான் கிடைக்கிறது. இலங்கையில் ஏராளமாகக் கிடைக்கிறது. நமது நாட்டில் புழு பூச்சிகளைத் தின்னும் செடிகளே அரிது. அதுவும் நமது ஊர்ப்பக்கம் அரிதரிது'' என்றார். அப்போது அங்கு வந்த ஆசிரியர் 'ஏன் அரிது! Utricularia என்னும் சிறு பூச்சிகளைத் தின்னும் ஆற்றல் பெற்ற நுண்ணிய செடி இலுப்பைக்குடியில் ஏராளமாகக் கிடைக்கிறதே. நமது துறையில் கண்காட்சியில் இருக்கிறதே'' என்றார். நமது நாட்டில் மனிதர்களையே விழுங்கும் (உணவாக அல்ல) மனிதர்கள்தான் இருக்கிறார்கள் என்று நினைத்தேன். இப்பொழுது பூச்சிகளைத் தின்னும் செடியும் இருக்கிறது என்பதையறிந்ததும் சற்று மகிழ்வுற்றேன். ஊட்டியில் கண்கொள்ளாக் கவின்மிகு மலர்களைப் படைத்த அதே இறைவன் இலுப்பைக் குடியில் பூச்சியைத் தின்னும் Utricularis என்னும் செடியையும் படைத்திருக்கிறானே!

[கட்டுரையாளர் பள்ளியின் பழைய மாணவர்]



## உதகைக் காட்சிகள்

*பெரி. அருணசலம்*

எங்கும் பசுமை. எதிலும் செழுமை. காணக் குளுமை காட்சிக் கெளிமை. புல்வெளிப் பரப்பு. மலர்மண விரிப்பு! கசிவுறு நிலையில் பெருகிடும் சுனைகள். கானக மாட்சிகள்–கவர்ந்திடும் காட்சிகள். காணப் புகுவோம். களிப்பினைப் பகிர்வோம். வருக!

நீள் மலைகள் என்று சொல்லுகின்ற அளவுக்குத் தொடர்மலை களாக இல்லாவிட்டாலும், எங்கும் நீலமலைகள் என்று சொல்கின்ற அளவுக்கு வண்ணக் கலவைக்கு வடிவுருத்தந்து உயர்ந்தும் தாழ்ந்தும் படுத்தும் நொடித்தும் பாங்குறுவிதத்தில் அமைந்ததே உதகை!

உயர்ந்த மலைகளிடை ஓடும் மேகங்களைக் காணுங்கால், "கோவைகள் ஆலைப்பஞ்சுகள் அல்லலுறு தொழிலாளரால் அள்ளி வீசப்பெற்று, அத்துணையும் திரண்டு, பஞ்சுப் பொதியாகிப் பறந்து வந்தனவோ?" என்ற எண்ணத் தோற்றத்தை நமக்களிக்கக் காண்போம்.

மனிதருக்குத்தான் வாழ்வென்றில்லை. மலையதற்கும் அது உண்டு போலும். ஆம்!! செழுமைப் புல்லுடுத்தி, சிங்காரப் பூச்சூடி, தெவிட்டாத் தேன் உண்டு, தேமதுர 'டீ' பருகி, கற்பூரப் புகை யிடையே கனிந்தேற்கும் காப்பியையும், கூடுகின்ற தென்றல் கூட்டுத் தொடர்பாலே 'ஆப்பிளையும்'; 'பேரியையும்', அளவோடு ஈன்றெடுத்து அன்னை இயற்கைமடி அவள் வைக்கக் கண்டோம் நாம்! ஒட்டிப் பிறந்த சில குட்டி மலைகளிடை ஓங்கி வளர்ந்துள்ள 'யூகாலிப்டஸ்', சில்வர்ஹோக்ஸ்' மரங்களுக்கும் இடமுண்டு. வெட்டிக் குவித்து, விறகாக்கி மகிழ்ந்தாலும், அட்டியின்றி அடர்த்தியாக அரும்பும் 'சவுக்கினுக்கே அளவேது? பாட்டிக்கு உதவும் படர்மிளகும் இங்குண்டு.

இந்தியரன்றி அன்னியரும் எங்கென்றால், காட்டுகின்ற திசை ஒன்று! அன்னவரை நாடி, திசை, தேடி நாம் ஓடின் தலைமேல் நோக்கி, நிலைகீழ் வீழும் 'பைகாரா' வீழ்ச்சியினைக் கண்டு நிற்பார். மலைமீதேறி (தொட்டப்பெட்டா' வளைவில் 'குடிவாழ்' முதுகுடி மக்களின் தொல்பொருள் கண்டும், அணிகலன் ஆய்ந்தும் அக மகிழ்ந்திருக்கக் காண்போம். இன்னும், காணக் காதலரைக்காண உதவும் எழில்மிகு ஏரியாம் 'லேக்' கையும்; ஆசையையும், அதிருஷ் டத்தையும் ஐக்கியமாக்கி, தன்னிலை நம்பாது, குதிரையை நம்பி, குபேரராக நினைக்கும் சில குசேலக் குடும்பத் தளபதிகளையும்; ஊரார்

செலவில் ஊட்டி பார்க்கக் கொடுத்து வைத்திருக்கிற சில உல்லாச சினிமா நட்சத்திரங்களையும்; துள்ளித் திரியும் பள்ளிப் பாலகர் கண்டு களித்திடும் 'பொட்டானிகல்' பூங்காவையும்; இல்லத்து இருள்சூட்டி இல்வாழ்வில் ஒளியேற்றும் வகையில், செயல்படும் 'சிங்காரா–மாயாறு' பவர்ஹவுசையும், அரசியலார் தொடர்போடு ஆங்கிருக்கும் 'முதுமலை' வனப் பகுதியினையும், 'அபயாரண்ய' நிலைக்களனையும் அயராது காண்போம்.

விளக்குறி!–ஆசிரியரின் விளைத்தாளுக்கு மட்டுமல்ல.
வளைந்து செல்லும் மலைப் பாதைக்கும் உண்டு.
மலைப்பாதையிலும் ரயில்பாதை! ஆம்!!
தேன் கலந்த பால். கரும்பிடை எறும்பு. அதனை:–

சொன்னால் சுவைக்காது.
கண்டாலோ மறக்காது.
அக் காட்சிக் களிப்பு – காணவே இனிப்பு
உணர்வுடைத் துடிப்பே–என் முடிப்பு!

[கட்டுரையாளர் இப்பள்ளியின் பழைய மாணவர்]



(மாணவர் வரைந்த படம்)

# தமிழ் மொழியின் சிறப்பு

*ஜீவன்*

தேனொத்த இனிமைதமிழ் மொழிக்குண் டானுல்
 தெவிட்டாமை இதற்குண்டு தேனுக் கில்லை
வானொத்த விரிவுதமிழ் தனக்குண் டென்ருல்
 வன்புயலும் இடிகறுப்புந் தமிழுக் கில்லை.
வானத்து மதியெனவே ஒளிரும் ஆனுல்
 வளர்ச்சியுண்டு தேய்வென்ப திதற்கு இல்லை
தானத்தைத் தருமநெறி அறத்தைக் காட்டித்
 தனிப்பெருமை கொண்டதமிழ் மொழியி தாமே.

மலரொத்த மென்மைதமிழ் மொழிக்குண் டானுல்
 மலர்வாடும் வாடாது தமிழே நாட்டின்
நிலவுசெல்வத் திணையான தென்போ மானுல்
 நிலையற்ற செல்வமிதை நிகர்ப்ப தாமோ
பலங்கொண்ட மதகரியின் நடையுண் டென்ருல்
 பாழ்படுத்தும் மதந்தமிழுக் கில்லை யேவெண்
கலமொத்த ஓசைதமிழ்க் குண்டென்ருல் வெண்
 கலமுடையுந் தமிழுடையக் கண்ட துண்டோ.

படிப்பதற்குங் கேட்பதற்கும் அமுதே ஆனுல்
 பாற்கடலைக் கடையுமொரு தொல்லை யில்லை
கொடிமுல்லை மலர்மணத்தை ஒத்த தென்ருல்
 கோடையிலே கொடிமுல்லை பூப்ப தேது
விடிவெள்ளி எனஉலகில் மிளிர்வ தானுல்
 விடிந்தவுடன் வெள்ளிஒளி மழுங்கிப் போமே
படிமிசைநாம் பகருதற்கோர் உவமை யில்லாப்
 பசுந்தமிழின் புகழ்வளர்ந்து படர்க மாதோ!

[இவர் பள்ளியின் ஆசிரியர்]

# அமைதித் தென்றல்.

டாக்டர். சொக்கு சுப்பிரமணியன், எம், ஏ., எம். ஐ. எச்.

பெற்றெடுத்த பேரன்னை அடிமை உற்றுப்
பிறன்கையில் நொந்திருக்கக் கண்டு நாணிக்
கற்றுணர்ந்த மக்களெலாம் திரண்டு வந்து
கைவிலங்கு முறித்திடவே முயலும் காலைப்
பற்றுணர்வு தள்ளிடவே முந்தி வந்து
பாரதத்தின் உரிமைப்போர் தலைமை யேற்று
வெற்றிபெறு நற்பேறு பெற்ற செம்மல்
விடுதலைக்கோர் வீரரெனும் காந்தி கண்டோம்.

கொல்லாமை என்னுமோர் நெறியை அன்று
கொஞ்சுதமிழ் மொழியகத்துக் குறளில் வைத்தான்
நல்லானும் வள்ளுவனின் வழியைப் பற்றி
நடந்தோர்கள் பலபேரைக் கண்ட தில்லை;
கொல்லாமை உயிர்க்குறுகண் செய்யாத் தன்மை
கொள்கையெனக் கொண்டிங்கு வாழ்ந்த காந்தி,
சொல்லாளன் வள்ளுவனின் வழியில் நின்று
சுடரணைய புகழ்பெற்றான் கொள்கைக் கோமான்.

பெருமைமிகு பாரதத்தின் ஒருமைப் பாட்டைப்
பேணிடவே நவகாளி நடந்து சென்றே,
ஒருநாட்டார் ஓரினத்தார் நீங்கள் எல்லாம்
உட்பூசல் விளைக்காதீர் என்று சொல்லிப்
பொருதவரை நடுநின்று விலக்கி வைத்தப்
பொய்யறியா மெய்க்காந்தி இன்றி ருந்தால்
உருவழிக்கும் பேரிடர்கள் ஆட்டும் வேளை
ஊரிருப்போர் இனச்சண்டை போடு வாரோ.

போர்வெறியைத் தணிக்கின்ற அமைதித் தென்றல்;
பொங்கியெழும் இனவெறிக்குக் கொடிய வாடை;
நேர்நின்று கொன்றானுக் கருளும் நெஞ்சம்;
நினைந்துருகும் தொண்டரிடம் அன்பு கொஞ்சும்;
கார்நின்று பொழிகின்ற மழையைப் போலக்
கவலையறக் கருத்துரைகள் கொட்டிச் சென்றார்;
பார்நின்று புகழ்பரப்ப, உலகைக் காக்கப்
பாரதத்தாய் தலைமகனும் வாரார் கொல்லோ.

[பாடிய கவிஞர் பள்ளியின் பழைய மாணவர்; புதுதில்லி அனைத்திந்திய வானொலி நிலையத்தில் தமிழ்ச் செய்தித்துறையில் துணை ஆசிரியராகப் பணியாற்றிவருகிறார்.]

## எழுசீருக் குண்டோ இணை?

சி. சௌ. கருப்பன் செட்டி, எம். எஸ். ஸி.

சூழ்ந்துள்ள கங்குல் சுருக்கென்று போய்மடிய
ஏழ்குதிரை பூட்டும் இளங்கதிர்போல் - வாழ்வில்
செழுமை மணம்பரப்பும் சீர்மிக்க எங்கள்
எழுசீருக் குண்டோ இணை.

ஓடிப் பொருள்தேடார் ஊன்பெருக்கத் தானுழையார்
வீடு பலவற்றில் வெஃகிடுவார் - கேடுடைய
வஞ்சத் தொழில்மாற்ற வந்துதவும் பொன்விளக்காய்
நெஞ்சிற் குறளே நீ நில்.

மறுவில் மணைபெற்றும் மாற்ருள்தோள் தோயப்
பொறுப்பின்றிப் போயலையும் பொல்லாச் - சிறுசெயலைத்
தீயென்று கூறித் திருத்தக் குறளன்றித்
தேயம் பிழைக்குமோ தேறு.

அறத்தின் வழிநின்றே அன்பினுக்கும் காதல்
திறத்திடையே வாழ்வாங்கு தேர்ந்த - அறத்தோர்கள்
வானின் மறையென்று வாழ்த்தும் திருக்குறளைத்
தேனின் குடமென்று தேர்.

வற்ருப் புகழ்வளமும் வாழ்விக்கும் நெஞ்சழகும்
செற்ருர் அவர்நாணும் செய்வினையும் - வெற்றியுடன்
வீடும் விழுப்பொருளும் வேலொக்கும் நல்லறிவும்
கூடிவரக் கற்போம் குறள்.

(பாடியவர் பள்ளியின் பழைய மாணவர்; திருச்சி 'வட்டாரப் பொறியியற் கல்லூரியில்'' கணித விரிவுரையாளராகப் பணியாற்றி வருகிருர்)

---

## V. R. நடராச ஐயர்

உ

பண்:- ஷண்முகப்ரியா] – [தாளம்-ஆதி

### எடுப்பு

தாயே! வணக்கம் அம்மா! – செல்வ நாயகி!
தாயே! வணக்கம் அம்மா! (தாயே)

### தொடுப்பு

வேதத்தில் வீற்றிருப்பாய்! நாதத்தைச் சார்ந்திருப்பாய்!
மாதவர் மாமலர் தூவிநின் பாதமலர் பணிந்து நிற்பார்! (தாயே)

### முடிப்பு

வந்தவரைக் காத்திடுவாய் நொந்தவரைத் தேற்றிடுவாய்!
சொந்தங்களை வளர்த்திடுவாய்! சுகங்களைத் தந்திடுவாய்!
பக்தியால் சூழ்ந்தவர்க்கு முக்தியை யளித்திடுவாய்!
சக்தியாய் அடியவர்தம் சித்தத்தில் வீற்றிருப்பாய்! (தாயே)

[இப்பள்ளியின் ஆசிரியர்]

## ஏன் வாழ்கின்றேன்!

மு. ரெங்காநாதன் பி. காம்.,

'உனைக்காப்பேன்' எனஉறுதி மொழியும் பாங்கில்
உள்ளுயிரை வரவேற்கும் வானம் காண;
தனக்காக வாழாமல் நேர்மை பேணும்,
தமிழ்உள்ளம் படைத்திட்ட காந்தி போன்ற
மனத்தினரை நான்காண; வையம் ஈந்த
மக்களினம் செம்மையுற என்னுல் ஆன
தினைத்துணையாம் நன்மையினைச் செய்து காட்டச்
சிந்தையெலாம் களிப்பேற வாழ்கின் றேனே.

ஊக்கத்தின் வடிவாகி, விழுப்புண் தாங்கி
உலகத்தின் சரிதத்திற்(கு) உருவம் தந்தோர்,
பாக்களிலே வீரத்தைக் குழைத்துத் தந்த
பாவலர்கள், படைவீரர், மானம் காத்தே
தூக்குமேடைதந்த சுருள் கயிற்றைத்
துணிவோடே எனக்காக முத்த மிட்டோர்,
போக்கையெலாம் அறிந்திடவும் புகழ்ந்து பாடிப்
பொழுதெல்லாம் இன்புறவும் வாழ்கின் றேனே.

புத்தர்அருள் ஒளிவீசும் எவற்றி னேடும்
பொருந்தியினிப் புன்னகையோ டிணைந்து சேரக்,
குத்தீட்டி தரும்துயரில் இன்பம் காண,
குமுறிவரும் சோகத்தில் அறிவைச் சேர்க்க,
சித்திரமும் ஒவியமும் தென்றல் காற்றும்,
தேனீயும், எறும்பினமும், இயற்கை தந்த
அத்தனையும், என்மனமும், பொருந்தும் மாண்பால்
அகமெல்லாம் பூரிக்க வாழ்கின் றேனே.

அருள்மிக்க தமிழ்க்கவிஞர் முன்னுட் கண்ட
அறிவாலே உயிர்வாழ்ந்த காலம் காண,
'பொருளில்லார்க் கிவ்வுலக மில்லை' யென்ற
பொல்லாத நிலைஇந்த உலகில் நீங்கிப்
'பொருளில்லார் இவ்வுலகில் இல்லை', யென்று
பொதுமக்கள் யாவருமே உணரும் காலம்
வருகின்ற வழிமேலே விழியைச் சேர்த்து
வாழ்த்துரையை வழங்கிடவே வாழ்கின் றேனே.

(G. L Banks என்ற ஆங்கிலக் கவிஞர் எழுதிய "What I live for" என்ற கவிதையைத் தழுவியது)

# என் கல்லூரி வாழ்க்கை



எம். ஆர். சுந்தரேசன்
பி. ஏ. பி. டி.

உயர்நிலைப்பள்ளி ஒன்றின் தலைமை ஆசிரியராகப் பணியாற்றும் ஒருவர் கல்லூரியிற் படித்தவராகத்தான் இருப்பார். எவருக்கும் கல்லூரி வாழ்க்கை நினைவுகள் இனிமை நிறைந்தவையாகத்தான் இருக்கும். ஆனால் 'என் கல்லூரி வாழ்க்கை' எழுதுவதில் ஒரு சிறப்பிருக்கிறது. இன்று சென்னை மாநிலத்தில் தன்னேரில்லாத் தமிழ் ஆட்சி நடத்தும் முதல்வர் திரு சி. என். அண்ணாதுரை அவர்களும் நானும் கடந்த 38 ஆண்டுகட்கு முன்னால் கல்லூரியில் மேற்கொண்ட வாழ்க்கை நினைவுகளை எண்ணி அசைபோடுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இராமநாதபுரம் மாவட்டத்திலேயே தன்னேரில்லாத பள்ளி சிட்டாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி. கண்ணைக் கவரும் எழிலும், கருத்தை வளர்க்கும் திறமும் கொண்ட அப்பள்ளியிற் பல ஆண்டுகளாக நான் பணியாற்றி வருகிறேன். அப்பள்ளி வெள்ளி விழாக் காணும் நேரத்தில் தலைமை ஆசிரியப் பதவி ஏற்றுப் பணியாற்றுவது குறித்துப் பெருமை அடைகிறேன். நான் பணியாற்றும் பள்ளி வெள்ளிவிழாக் காணும் நேரத்தில் என் வகுப்புத் தோழர்–கல்லூரி நண்பர்–அண்ணா அவர்கள் சென்னை மாநில முதலமைச்சராக இருப்பது குறித்து என் பெருமை இருமடங்காகின்றது.

அறிஞர் அண்ணாவோடு ஒரே கல்லூரியில் பள்ளித் தோழனாகவும், வகுப்புத் தோழனாகவும் இருக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் 1930-31ம் ஆண்டில் அவர் B. A. (hons) இளநிலை (preliminary) வகுப்பில் படித்தார். நான் பி. ஏ. பட்டப்படிப்பின் (B. A. pass course) முதல் வகுப்பில் படித்தேன். இருவருக்கும் சில பாடங்கள் பொதுவாகக் கற்பிக்கப்பட்டன. அதில் அரசியல் (politics) பாடம் ஒன்று. அதை நாங்கள் இருவரும் போட்டிபோட்டுக்கொண்டு படித்தோம். நாங்கள் படித்த புத்தகங்களில் சில Laski's grammar of politics, Bryce Modern Democracies, Bagehot English constitution, Munso American constitution முதலியன. அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்புதான்

பேராசிரியர் இரத்தினசாமி அக்கல்லூரின் முதல்வர் பதவியில் இருந்து விலகினர். இப்பொழுது சுதந்திராக் கட்சியின் தலைவராயிருக்கும் பேராசிரியர் M. G. இரங்கா அவருக்குப் பதிலாகப் பேராசிரியராக வந்தார். 'சிக்கா' என்று மாணவர்களால் அன்பாக அழைக்கப்பட்ட திவான் பகதூர் C. S. சீனிவாசாச்சாரியார் எங்களுக்கு அரசியல் பாடம் போதித்தார். இவர் இந்திய வரலாறு சொல்லிக் கொடுப்பதில் ஒரு நிபுணர். இவர் வகுப்பு மிக அமைதியாக இருக்கும். பெருந்தகை V. S. சீனிவாசசாஸ்திரியின் நெருங்கிய உறவினராக T. K. வெங்கட்டராமன் இங்கிலாந்தின் அரசியல் வரலாற்றை மிக அழகாகச் சொல்லிக் கொடுத்தார். உலகப் புகழ்பெற்ற சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் முதல்வராக இருந்த Dr. மில்லரின் மாணுக்கராகிய பேராசிரியர்' P. சுப்பிரமணிய அய்யா எங்களுக்கு செகப்பிரியர் '(Shakespeare) கற்றுக்கொடுத்தார். இப்படிப்பட்ட மேதாவிகளிடம் நாங்கள் கல்வி கற்றோம்.

அறிஞர் அண்ணு, படிப்பில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தினர். 'விளையும் பயிர் முளையிலே' என்பது போலவும் 'The child is the father of the man' என்பது போலவும் தன்னுடைய மாணவப் பருவத்திலேயே அவர் தமிழிலும், ஆங்கிலத்திலும் அழகாகச் சொற்பொழிவாற்றுவார். அவர் கல்லூரி இலக்கியச் சங்கத்தின் செயலாளராக இருந்தார். முக்கிய அரசியல் தலைவர்களான திரு. சத்தியமூர்த்தி முதலியவர்கள் பேசக் கல்லூரியில் ஏற்பாடு செய்தார். பேராசிரியர் சுப்பிரமணிய அய்யா இறந்த பிறகு அவர் நினைவாகச் சுப்பிரமணிய அய்யா நினைவுச் சொற்பொழிவுகளுக்கு அறிஞர் அண்ணு ஏற்பாடு செய்தார்.

அப்பொழுது நம் நாடு அடிமை நாடாக இருந்ததால் நம் நாட்டிற்கு விடுதலை கிடைப்பது ஒரு கனவாய் இருந்தது. அப்படிப்பட்ட கனவு நனவாகி அறிஞர் அண்ணு மக்கள் வாக்குகள் மூலம் பலம் பெற்றுத் தமிழ் நாட்டின் முதல் அமைச்சர் பதவியை வகிப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். அவருடைய தொண்டு நம் மாநிலத்திற்கும், நம் நாட்டிற்கும் கிடைக்க அவர் உடல் வலிமையுடன் நீடுழி வாழவேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறேன்.

*( கட்டுரையாளர் பள்ளியின் தலைமை ஆசிரியர் )*





## The Most Mysterious And Mystifying of all Numbers.

*V. Ramachandran*, B. SC.,

The ancients already knew it as their irrepressible number. Whenever it is used as a factor in a mathematical calculation, it is bound to come out in the result.

It is the last of the digits, and highest number that can be expressed in one digit.

There are 9 heavens, 9 orders of angels, 9 planets, 9 muses, 9 crosses, 9 worthies, 9 lives of a cat, 9 days of wonder and so on.

There is an endless number of examples to demonstrate the power of the mysterious number Nine. Here are a few:

The nine digits, 1 2 3 4 5 6 7 8 9, when added equals 45 and 4 plus 5 equal nine.

Take any number reverse it and deduct from the larger number the result will always be devisible by 9. The difference between two such numbers is always a multiple of 9

For example 864
468
———
396 This can be divided by 9

If any number is multiplied by 9, the sum of the digits in the product will always be 9

| | | | | |
|---|---|---|---|---|
| 9 x 1 | equals | 9 - 9+0 | equals | 9 |
| 9 x 2 | ,, | 18 - 8+1 | ,, | 9 |
| 9 x 3 | ,, | 27 - 7+2 | ,, | 9 |
| 9 x 4 | ,, | 36 - 6+3 | ,, | 9 |
| 9 x 5 | ,, | 45 - 5+4 | ,, | 9 |
| 9 x 6 | ,, | 54 - 4+5 | ,, | 9 |
| 9 x 7 | ,, | 63 - 3+6 | ,, | 9 |
| 9 x 8 | ,, | 72 - 2+7 | ,, | 9 |
| 9 x 9 | ,, | 81 - 1+8 | ,, | 9 |
| 9 x 10 | ,, | 90 - 0+9 | ,, | 9 |
| 9 x 11 | ,, | 99 - 9+9 =81 - 8+1=9 | | |

and so on

An interesting figure phenomenon based on 9 is

| | | | |
|---|---|---|---|
| 987654321 | x 9 | equals | 8888888889 |
| | x 18 | ,, | 17777777778 |
| | x 27 | ,, | 26666666667 |
| | x 36 | ,, | 35555555556 |
| | x 45 | ,, | 44444444445 |
| | x 54 | ,, | 53333333334 |
| | x 63 | ,, | 62222222223 |
| | x 72 | ,, | 71111111112 |
| | x 81 | ,, | 80000000001 |

Every column has all the digits in every direction vertical and horizental both up and down. The first and last figure in the two columns to the right add up to 9

**Addition.**

123456789 equals 45
123456789 ,, 45
———
246913578 ,, 45

**Subtraction.**

987654321 equals 45
123456789 ,, 45
———
864197532 ,, 45

**Multiplication.**

123456789 equals 45
×2
———
246913578 ,, 45

987654321 equals 45
×2
———
1975308642 ,, 45

**Division.**

1234567890 equals 45
÷2
———
617283945 ,, 45

9876543210 equals 45
÷2
———
4938271605 ,, 45

Adding the above quotients

617283945
4938271605
———
5555555550 equals 45

123456789
×999999999

111111111
111111111
111111111
111111111
111111111
111111111
111111111
111111111
111111111

12345678987654321

999999 divided by 7 gives you the famous figure 142,857 which multiplied by any digit from 2 to 6 will reappear in the same order.

## BENJAMIN FRANKLIN

He was the youngest son of a youngest son of a youngest son of a youngest son
He was the first American Philosopher.
He was the first American Ambassador
He was the first Political cartoonist
He was the first reformer of English Spelling.
He was the first man to understand the nature of a cold
He was four times President of Pennsylvania
He was the inventor of Plaster of Paris for fertilizing.
He was the best swimmer of his time.
He invented the harmonica
He invented the street lamp
He invented the lightning conductor
He invented the Franklin Stove.
He was pioneer of the modern voting system for congress.
He established the modern post office system.
He was tne founder of the Democratic party
He discovered the identity of lightning and electricity.
He introduced newspaper carrying by mail.
He originated the first circulating Library.

(Assistant of the school)



# Can Science Be Taught In Tamil?

***M. MUTHALAGAPPAN,*** B. SC.,

It is, indeed, an astonishing and astounding wonder that in the heat and dust of the present age of space travel, atom bombs and heart-transplantations, when science marches on by leaps and bounds and when there appears to be a said apotheosis of the machine almost to the sad neglect of man, to take into our consideration topics of this sort which deal not with the egregious achievements, commendable contributions, laudable attainments or the tremendous and stupendous advantages in the realm of applied science and surely not with the possible ways and means for the betterment of our society and such a ridiculous and ludicrous thing can happen only in India which is yet passing thro' a crucial and critical period of economic strangulation and political pell-mell even after the advent of freedom and not in any place in the nook and corner of the whole globe. The language problem has become one of the burning questions of our land and coming to a wiser conclusion, sooner, will be grand. Language, in independent India, has created much misunderstanding and ununderstanding. We achieved independence after much blood-shed and the unity of the country is threatened by the vexed language problem.

Fed on the rich milk of Kural and nurtured by the sweet music of Silappathikaram, ancient Tamil rises to new eminence today and so the protaganists of Tamil are trying their level best to teach Science, the image of eternity, spectacle of sublimity and the throne of the invisible in Holy Tamil. But the doubt tha the present presents is whether science, the most amazing and astonishing significant and spectacular off-shoot of nature can be taught in Tamil.

It is a well-known and world known fact that the best medium of instruction is one's mother tongue. But it is English, England's greatest gift to our country which is the unifying force in India now. The late lamented Nehru, the prince of peace, referred to English as the "major window for us to the outside world We dare not close that window and if we do, it will spell peril to our future." If English is eliminated the real livelihood of progress and technology will come to a standstill and perhaps the country will revert back to middle ages. The fantastic spread and popularity of English is unmatched by any other a language before it, and it is quite unlikely that it will be ever equalled. Although English is a very sophisticated language in which one can express the finest shades of meaning, it is continually undergoing a change towards simplicity and there is, in addition, an almost daily coinage of new words-often to

the dismay of purists. If science were to be taught in Tamil, our chaste and pure Tamil will have to undergo a thorough change towards simplicity and unhesitatingly borrow words and phrases from almost all the known languages. Will the purists of Tamil willingly welcome this idea and can they undertake this task or even take any fruitful step? Certainly they can not, since they are the fittest persons to utter lies. They have forgotten the elementary and rudimentary principle of life that,

"A man of words and not of deeds
Is like a garden full of weeds", bringing which to their memory is indispensable.

Our students who had acquired proficiency in English could master Science and technology and there was brain drain. Hereafter there will be no brains to drain from India for the age of darkniss will set in if science is taught in Tamil. The vast scientific knowledge of the present age has been gained as a result of the patient and painstaking investigations of generations of scientific workers who discovered laws, framed theories, deduced conclusions and verified them and laid the foundations for new discoveries, They were taught in English, their works are recorded in English and all the books so for written about Science and its various branches are only in English. We will be living in a fool's paradise or crying for moon if we think of transeating them into Tamil. So English is a must and must continue in the overall interests of a nation which is yet in the throes of economic emancipation and at the threshold of scientific and technological development.

Teaching science in Tamil will spell disaster for research and advancement. It will turn us into "frogs in the well". At least to be abreast of the advancement in the field of science, the medium of instruction should not be changed. "The present day India needs scientists, technicians, engineers and doctors and at this stage we can not train them in any of the regional languages We must therefore rely upon English wholly and solely for this purpose"— so one of the great sons of our land has put it.

A lot of energy is wasted in expressing thoughts in an unfamiliar language. It is true, but we Can not help this waste since it paves the way for progress. In these days of scientific discovery", says Edgar lalallace "what is a novelty today is a common place tomorrow". So if we like, at least, to be familiar with the novelty, we are to be taught in English.

Suppose science is taught in Tamil, then only the sentences can be translated into Tamil but the symbols, notations and equations can not be translated since they are universally accpted ones. The vast ocean of organic chemistry, the fascinating branch of chemistry can never be translated into any language. Even if we accept that translation is possible, the work will not only be tedious and monotonous but also be never-ending because at least a hundred new books are published daily which are all in the English language. But the most deplorable fact is that the pure translation will land us in a new land of mystery and wonder. As such translations will fetch no fruits, we should try to avert them. Moreover iike Rajaji, an aristocrat of the spirit as well as of the intellect, a seer and statesman with a razorsharp intellect has put "we have the least right to translate what we have not investigated".

We are not, really, making any effort or taking any concrete, steg for participating in the race of progress while other countries are competin with each other in space explorations. Bharathi Dasan is apt when he utters, with great agitation in his heart, the following lines:

"வானிடை ஏறுகின்றார் — கடலை
வசப்படுத்து கின்றார்
ஈனப் பொருள்களிலே — உள்ளுறை
இன்பம் காணுகின்றார்.
மேனிலை கொள்ளுகின்றார் — நாமதை
வேடிக்கை பார்ப்பதல்லால்
ஊன்பதைத்தே அவைபோல் — இயற்ற
உணர்ச்சி கொள்வதில்லை."

If we are having that feeling, we will not have any idea of teaching science in Tamil. The poet anticipates when we are going to see Tamilians firing rockets?

"விண்ணிடை இரதம் ஊர்ந்து
மேதினி கலக்குதற்கும்
எண்ணிலாத் தமிழர் உள்ளார்
எனும்நிலை காண்ப தென்றோ?"

The anticipation of the poet will never come into existence if science is taught in Tamil.

It is now argued that we should be taught only in Tamil as it is done in Russia, Germany and China in which countriess students are taught in their mother tongue. We have just now awakened from the past slumber and these countries are well advanced in all walks of life which enables them to teach in their respective mother tongues. These countries began teaching science in their mother tongues many years back when we were under the foreign rule. But in these countries there is only one national language although there are multi-linguistic states in these countries. But in India there are as many as fourteen well-grown languages. If science is taught in Tamil in Tamilnadu, it is quite natural that it will be taught in Malayalam in Kerala, in Kannadam in Mysore, in Telungu in Andhra, in Bengali in Bengal and in Hindi in the rest of the states thereby channelising the energy of the country on the road of disintegration and disruption, which will jeopardise the freedom of our country, which we won after undergoing all the sufferings and sorrows, troubles and tribulations and tortures and tyrnnies at the hands of foreign domination.

According to Tagore a teacher can not teach truly until he is learning still like a candle that is not burning can not light another candle So, if science is taught in Tamil, then the present day teachers will have to spend all the time for translation instead of teaching.

The Scientific mind strived to conquer Ignorance, illeteracy, epidemics, diseases, want, hunger and poverty; But it is the political mind, the power-mad mind which tries to use these pure and pious Scientifiic tools to further his own ulterior motives. In India, we do lack scientific mindedness and as long as this condition prevails we can not expect any sort of progress or even development thro, education in any language. We must have scientific outlook. By teaching in the regional languages, we can not produce real scientists and without them the country will be just like bodies without limbs

Though science has not made it possible for men to lead a sufferless and toilless life, it has made them to suffer less and toil less. At this stage, switching over to a new medium of instruction is really unwise and unsound. If we are adamant, in teaching science in Tamil, it alone will prove to be the very stumbling-block or the bottle-neck for our infantine growth and our recent democracy will be just like the garland in the hands of a monkey.

Being Tamilians, we must accept that science must be taught in Tamil. But as it can not be taught in Tamil science should not be taught in Tamil. But we can take the necessary steps now which will enable our posterity to enthrone Tamil in the sphere of education.

" I want to press and stress that science which is

'a column, an arch in the temple of God

a Pillar of power, a dome of delight

a shrine of song and a joy of sight"

should be taught in English.

Shun not the English language, learn science through it; it is God's gift.

(An old student of the school)



# TWELVE RULES FOR HAPPINESS

*D. S. Gonden.*

1 True and enduring ***happiness*** depends on close alliance with ***God***.
2 Live a ***Simple*** life. Be temperate in your habits.
3 Think ***constructively***. Train yourself to think ***clearly*** and ***accurately***.
4 Be ***grateful***.Begin the day with gratitude for your opportunities and blessings.
5 Work with ***right*** motives. Highest purpose in life should be to grow in spiritual power and grace.
6 Be ***interested*** in others. Try to see the other persons point of view.
7 Avoid extravagance· Cultivate frugality, prudence and self-denail.
8 Give generously. There is no greater joy in life than to render happiness to others by means of intelligent giving
9 Cultivate a mental attitude of ***peace*** and good will.
10 Concentrate on your immediate task and try to finish it in time.
11 Have a ***holiday***. (Nature study, gardening, music stamp-collecting, photography, and social-service)
12 Keep close with ***God***. It is your privilege to pray to ***Him*** always for your Spiritual nourishment and to have a constant assurance of ***Devine protection*** and ***guidance***.
Let not a day pass without remembering ***God's*** name and dedicating some act, thought, speech to the glory of His name.

Life's little countries. }
Speak pleasantly,
Listen carefully
Sympathise sincerely,
Help readily,
Forgive quickly,
Live hopefully,
Act honestly,
serve diligently
pray soulfully
To the ***glory*** of His name.

Life's journey will then not be a weary journey to the last post of existence butan ***adventure*** into the potentiality of ***Life***.

"***Wisdom*** is knowing what to do next, ***skill*** is knowing how to do it ***Virtue*** is doing it."

Disciple: When I shall be ***free***?
Parmahamsa: When 'I' shall ***cease to be***

"He who ***loves lives*** – அன்பின்வழியது உயர்நிலை அஃதிலார்க்கு
***Truth*** always ***triumphs*** – என்புதோல் போர்த்த உடம்பு.
(Swami Vevekananda) (திருக்குறள்)

# N. C. C. Naval Wing Training in our School.

*S. Ramaswami,* B. A., B. T.

When we turn the golden shining pages of our school History, we feel very proud and zeal to say that 20th August 1961 is the glorious day of our school. The Junior Division Naval wing NCC was inagurated and began to function as the thirty first troop, Junior Division Naval Wing NCC in the Madras State. It is the only troop in Ramanathapuram District having 'Naval wing'. Our boys are taking keen and genuine interest in joining the NCC training and have shown remarkable and noteworthy performances during the Annual Training Camps which are conducted every year during the Dasara holidays.

Our troop stood first in ship-modelling and also in tournaments. Individual merit certificates have also been got by our eminent cadets during 'Vellore' Training camp in the year 1962. Our cadets are very regular and show keen interest in attending not only the training classes but also the theory classes. The regular instructors, who have been giving training to our cadets, say with much pleasure, that our cadets are very obedient and modest during training and know the 'give and take' principles.

In the year 1964, we attended the Annual Training Camp at Madurai. As usual our cadets showed their excellent skills and talents in various activities and stood first in the tournaments and brought everlasting glory not only to our Mother Institution but also to the NCC organisation in particular. They stood second in shipmodellng Our Cadets learnt a lot during these training camps. It is needless to say that our cadets will shine in their future as true citizens of our country.

A fine and golden opportunity came to our cadets, to have real sea sense during the Annual training camp at 'Mandapam camp' As it is a sea-shore, our cadets actually enjoyed a lot by seeing a ship and the vast, blue sea. They visited the fishery department and had a valuable time there. They had boat-pulling and other activities. In their 'A' certificate part I & II examinations, they scored eighty percent result and brought fame to our troop. The commanding officer was well pleased and praised the performances of our cadets in Various activities pertaining to NCC.

In short, the NCC training should be a 'must' to every student. It develops their character, comradeship, the ideal spirit of service and also moulds them as, well-disciplined citizens of our country.

(The Essayist is the Physical Training Instructor of the school)

# The first principle of Education.

*M. A. Subbiar.*

In imparting education we must understand that we have to deal with the two aspects namely the body and mind. We know 'A sound mind in a sound body.'

The great matter is not to spoil the mind, by forcing on it thoughts which it is not fit to receive. We know well that in men as well as in other animals, the body is rendered comparatively small and feeble by being heavily loaded, or hard-worked, before it arrives at size and strength proportioned to such load and such work. It is just so with the mind: the attempt to put old heads on young shoulders is just as unreasonable as it would be to expect a colt six months old to be able to carry a man. The mind, as well as the body requires time to come to its strength; and the way to have it possessed at last its natural strength is not to attempt to load it too soon; and to favour it in its progress by giving to the body good and plentiful food, sweet air and abundant exercise, accompanied with as little discontent or uneasiness as possible.

It is universally known that ailments of the body are, in many cases, sufficient to destroy the mind, and to debilitate it in inumerable instances. It is equally well-known that the torments of the mind are in many cases sufficient to destroy the body. This then being so well known, is it not the first duty of a father to secure to his children, if possible, sound and strong bodies?

I am to speak presently of that sort of learning which is derived from books, and which is a matter by no means to be neglected or to be thought little of, seeing that it is the road not only to fame, but to the means of doing good to one's neighbour and to one's country and thereby of adding to those feelings which are, in other words, our happiness But notwithstanding this, I must here insist, and endeavour to impress my opinions upon the mind of every father that his children's happiness ought to be his first object, that book-learning if it endangers this happiness ought to be disregarded; and that as to money, as to fortune, as to rank and title, the father who thinks of them more than of the happiness of his children is a great criminal. Who is there, having lived to the age of thirty years or so, and having the ordinary capacity for observation; who is there, being of this description who is not convinced of the inadequacy of riches and what are called honours to ensure happiness?

(Ex-Headmaster of the C. A. M. Elementary School.)

# Computer - the tool of mankind

*M. Arumuganantham,* L. M. E.

The computer is neither mechanical man nor infallible brain. It is altering the traditional lines of business management, has opened new frontiers for science and education, changed military tactics and created new conditions of life.

The vastness of the changes already brought about by computers in America can be judged by electronic data. They are varied and many.

The University of Chicago has recently installed an I BM 7094. The University estimates that it takes about an hour of computer-time to do the eqnivalent of one million man hours of desk Calculation work.

**Million times faster than humans.**

The speed differential between a man on a calculator and a university's Computer is roughly 1 million. A scientist with a Computer can easily do things that he never would have Considered trying 15 years ago If he could have hired thousands of calculator operators and put them all to work at once they would have made too many human errors to complete a really complex problem. Computer are faster at addition and multiplication than at filing away or producing large masses of information. But computer programming costs just about as much as the computer itself.

**Meeting of mind and machine.**

The computers have affected tremendous changes in the field of research, Physical sciences and engineering. There is a most fruitful meeting of mind and, machine. Scientists needed computers to speed their work, they were the men best qualified to do the complex programming. For the Scientist and engineer, Computers have changed the rules of what is possible and practical. The machines help to find better ways to build bridges, chemical plants, jet engines, typewriters etc.

Computers are used for battle-field operations and for command and control systems.

Comrputers do not think as humans think, of course, since they are not much simpler than the human brain. They are, however, a lot, faster than the human brains and their memories. It really doesn't matter whether it is called thinking or not. The computer certainly is doing something that, traditionally, required considerable thought to accomplish. Computers have changed the definition of thinking. As these skills increase, bigger coputers will be needed.

Business, as a result will operate more on a continuous basis than an batch orders. Better production scheduling - and eventually production control - may increase the productivity.

Man is creating computers in his own image. Perhaps sooner than he thinks, man and computer will share a Vastly different world.

(The essayist is an old student of the school. Now he is an Associate Lecturer, in the Alagappa polytechnic - Karaikudi)

## வளர்க! வாழ்க!

*சா. இராதாகிருட்டிண நாயடு*

மஞ்சாரும் சோலைகள்சூழ் கண்ட னூரில்
மாற்றரும் புகழ்பாட வாழும் வள்ளல்
அஞ்சாமல் கொடைவழங்கும் அழகார் ஏந்தல்
அன்புடையோ னருளுடையோ னண்டி னோர்க்கு.
கொஞ்சும்நற் றாயன்பால் குன்று போல்வான்
குடிகட்கோர் தலைமகனாய் என்றும் வாழ்வான்
எஞ்சாத குணமுடையோன் இனிய சொல்லன்
ஏற்றமிகு வீரப்பன் என்னும் நல்லோன்.

அளிவளரும் உள்ளத்தால் அன்னை ஆன
ஆன்றசீர்ச் சிட்டாள்தன் பெயரை நாட்டி
ஒளிவளரும் கலைக்கூடம் நிலைக்கச் செய்தான்
உயர்ஞானம் மக்களெலாம் பெறுக என்றே
களிபெருக வெள்ளிவிழாக் கவினாய்க் கண்டான்
கருத்துடைய அறம்பலவும் கனிவாய்ச் செய்வோன்
எளியவரும் வாழ்கவென வாழ்த்தும் வண்ணம்
இயல்பான நற்குணத்தோன் என்றும் வாழ்க!

அருள்பொழியும் ஆசிரியர் வாழ்வில் என்றும்
அல்லலெலாம் நீங்கிநிலை உயர்ந்து வாழ்க!
உருவான கலைக்கூட வளர்ச்சி போற்றும்
உயர்வீ.தெ. நற்குடிதான் உவந்து வாழ்க!
மருள்நீக்கும் உயர்பள்ளி மணிவி ழாக்கள்
மண்டலத்துப் பன்னூறு கண்டு வாழ்க!
வருங்கால மக்களெலாம் வளர நாளும்
வகையான தொண்டுபல செய்து வாழ்க!

[வாழ்த்துப்பாப் பாடியவர் பள்ளியின் முதல் தமிழாசிரியர். இப்போது காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிகிறார்]